


சினிமா நட்சத்திரங்களின் அழகு தரும் சோப்

LTS 340-X30 TM



தீபாவளி
வெளியீடு
ஸ்ரீ ராஜராஜேஸ்வரி பிலிம் கம்பெனியின்
ஏழை உழவன்
முற்றிலும் மாறுபட்ட ஒரு முன்னேற்றச் சித்திரம்.....
டைரக்ஷன்: கே.பி. நாகபூஷணம்
அஞ்சலிதேவி • கண்ணாம்பா • ஸ்ரீராமமூர்த்தி •
லிங்கமூர்த்தி • துரைஸ்வாமி
ஸ்டுடியோ: ஜெமினி
வசனம். உதயகுமார்

# கல்கி பொருளடக்கம்

மலர் 12
இதழ் 11

1952 அக்டோபர் 12

நந்தன ஐ
புரட்டாசி 27




"கல்கி"யில் வெளியாகும் கதைகளில் உள்ள பெயர்கள் எல்லாம் கற்பனைப் பெயர்களே; சம்பவங்களும் கற்பனையே.

## வருணாஸ்திரம்!



அக்டோபர் மூன்றாந் தேதியிலிருந்து சில தினங்கள் சென்னை ராஜதானியில் பல இடங்களில் மழை பெய்தது.

## பெரிய பிரச்னை!



ராயலசீமையின் பஞ்சப் பிரதேசங்களை நேருஜி சுற்றிப் பார்த்து விட்டுத் திரும்பி வந்தார்.

கல்கி

மலர் 12 | தமிழ்த் திருநாடு தன்னைப்—பெற்ற தாயென்று கும்பிடடி பாப்பா. —பாரதியார் | இதழ் 11

# சுபதினத்தில் சுபிட்சப் போர்

பாரதத் தவப் புதல்வர்கள் தங்களுடைய இணையற்ற ஆத்ம சக்தியினால் ஆயுத சக்தியைத் தகர்த்தெறிந்து சுதந்திரப் போரில் அமோக வெற்றி பெற்றார்கள். சரித்திரத்திலே இதற்கு முன் கண்டும் கேட்டும் இராத அந்த அதிசயத்தைக் கண்டு உலகம் ஆச்சரியத்தில் மூழ்கியது.

இப்போது இந்தியாவின் மனித சக்தியை, அதாவது இந்திய மகா ஜனங்களின் தேக வலிமையை, உழைப்பைக் கண்டு உலகம் அதிசயிக்கும் காலம் அதிக தூரத்தில் இல்லை என்பதை இந்த வருஷம் அக்டோபர் மாதம் இரண்டாம் தேதி இந்தியாவில் நிகழ்ந்துள்ள சம்பவங்கள் ருசுப்பிக்கின்றன.

உலகம் போற்றும் உத்தமர், முப்பது கோடி மக்களின் நல்வாழ்வுக்காகத் தமது ஜீவிய காலத்தை அர்ப்பணம் செய்த புண்ணிய புருஷர் அவதரித்த அந்த நந்நாள் இந்த ஆண்டிலிருந்து விசேஷ முக்கியத்துவம் பெற்றிருக்கிறது.

இந்த வருஷம் அக்டோபர் மாதம் இரண்டாம் தேதியன்று பாரத நாட்டின் சரித்திரத்திலே ஒரு புதிய சகாப்தம் ஆரம்பமாயிற்று.

அன்று காந்தி மகானின் ஜெயந்தி வைபவத்தை இந்தியாவெங்கும் புதிய முறையில் கொண்டாடினார்கள்.

அந்தச் சுபதினத்திலே காந்திஜியின் கனவு நிறைவேறுவதற்கான காரியங்கள் நாடெங்கும் ஆரம்பமாயின.

நம் பாரத நாட்டின் சுதந்திரப் போர் முறைகளை அங்குரார்ப்பணம் செய்த மகாத்மா காந்தி தாமே தலைமை வகித்து அந்தப் போரை நடத்தினார். அதில் ஈடில்லாத மாபெரும் வெற்றியைக் கண்டார்.

பாரத நாடு பரிபூரண விடுதலை அடைந்து உலக நாடுகளுக்குள்ளே சம அந்தஸ்து பெற்று விளங்கியதைக் கண்டார்.

இதுமட்டும் போதுமா? பாரத மக்கள் நல்வாழ்வு பெற வேண்டாமா? அவர்கள் பெற்ற சுதந்திரத்தின் இன்பத்தை அனுபவிக்க வேண்டாமா? அதற்காகக் காந்தி மகான் ஏழை எளியவர்களையும், எண்ணற்ற கிராமங்களையும் நினைத்துப் பல திட்டங்கள் வகுத்தார்.

பாரத மக்கள் சுதந்திரத்தின் பலனைப் பூரணமாக அனுபவிக்க வேண்டுமாயின் சுபிட்ச வாழ்வு பெற வேண்டும் என்பதை உணர்ந்த காந்திஜி அக்காலத்திலேயே சுபிட்சப் போர்த் திட்டத்தையும் அங்குரார்ப்பணம் செய்தார்.

பாரத மக்கள் சுதந்திர வாழ்வு பெறுவதற்கு அன்னியரின் ஆதிக்கத்தை அடியோடு ஒழிக்க வேண்டியது அவசியமாயிற்று. அதுபோலவே இந்திய மகா ஜனங்கள் சுபிட்சவாழ்வு பெறுவதற்குப் பசி, பிணி, அறியாமை இவற்றின் ஆதிக்கத்தை ஒழிக்க வேண்டும் என்று காந்திஜி பல ஆண்டுகளுக்கு முன்பே வற்புறுத்தினார்.

"காந்தி ஜெயந்தியைச் சர்க்கா ஜெயந்தியாகக் கொண்டாடுங்கள்" என்று தீர்க்கதரிசியான காந்திமகான் அடிக்கடி கூறியதன் கருத்து அதுதான்.

"இந்தியாவின் உயிர்நாடி, இந்திய மக்களின் எதிர்கால நல்வாழ்வு இந்தியக் கிராமங்களில்தான் இருக்கிறது."

காந்திஜி அருளிய இந்த உபதேச வாக்கியத்தில் பொதிந்து கிடக்கும் பொருளாதாரத் தத்துவங்களைக் கிரியாம்சையில் கொண்டு வருவதற்கான தீவிர நடவடிக்

கைகள் எதுவும் இதுவரையில் கைக்கொள்ளப் படாமல் இருந்து வந்தது.

இந்தக் குறை இவ்வருஷம் காந்தி ஜெயந்தி நன்னாளில் நிவர்த்தியாயிற்று.

அன்று கன்னியாகுமரியிலிருந்து காஷ்மீர் வரையில் பாரத நாட்டில் உள்ள பல இடங்களிலும் கம்யூனிடி ப்ராஜெக்ட் (Community Projects) அதாவது கிராம சமுதாய அபிவிருத்தித் திட்டங்கள் கைக்கொள்ளப்பட்டன.

முதல் தடவையாக 26,950 சதுர மைல் விஸ்தீரணம் உள்ள 18,464 கிராமங்களில் மேற்படி திட்டங்கள் கைக்கொள்ளப் பட்டிருக்கின்றன. முப்பத்தெட்டரைக் கோடி ரூபாய் செலவில் கைக்கொள்ளப்படும் அத்திட்டங்களின் பலனாக சற்றேறக் குறைய இரண்டு கோடி மக்கள் நன்மை அடைவார்கள்.

சென்னை மாகாணத்தில் மாத்திரம் சுமார் ஆயிரத்து நூறு கிராமங்களில் சமுதாய அபிவிருத்தித் திட்டங்கள் கைக்கொள்ளப்பட்டிருக்கின்றன.

அத்திட்டங்கள் ஆரம்பமாகியுள்ள மற்ற மாகாணங்களின் விவரமாவது:

அஸ்ஸாம்: 1098 கிராமங்கள். பீகார்: 2253. பம்பாய்: 1262. மத்தியப் பிரதேசம்: 965. ஒரிஸ்ஸா: 1198. பஞ்சாப்: 1645. உத்தரப் பிரதேசம்: 2107. மேற்கு வங்காளம்: 1039.

இவைகளைத் தவிர மத்திய பாரதம், மைசூர், பெப்சு, ராஜஸ்தானம், சௌராஷ்டிரம், திருவாங்கூர்- கொச்சி, ஹிமாசலப் பிரதேசம், போபால், அஜ்மீர், மணிபுரி, விந்தியப் பிரதேசம், விலாசபுரி முதலிய சமஸ்தானங்களிலும் ஆயிரக் கணக்கான கிராமங்களில் மேற்படி திட்டங்கள் அங்குரார்ப்பணம் செய்யப்பட்டிருக்கின்றன.

இந்தத் திட்டங்கள் எல்லாம் மூன்று ஆண்டுகளில் பூரணமாக நிறைவேறும் என்று எதிர்பார்க்கப் படுகிறது.

கிராம மக்களுக்குச் சுகாதார வசதிகள் இருக்க வேண்டும். குடியிருப்பு வசதி ஏற்படவேண்டும். கிராமந்தோறும் கல்வி சாலை நிர்மாணித்து எல்லோரும் கல்வி பெறுவதற்கு வழி உண்டாக வேண்டும். நீர்ப்பாசன வசதிகள் பெருகி விவசாயம் பன்மடங்கு அபிவிருத்தி அடையவேண்டும்.

ரஸ்தா அமைத்தல், கால்வாய் வெட்டுதல், கல்விசாலைகளை நிர்மாணித்தல், ஆஸ்பத்திரிகளை அமைத்தல் போன்ற ஆக்க வேலைகளில் பிரதம மந்திரி முதல் பாமரர் வரையில் சகலரும் நேரடியாகப் பங்கெடுத்துக் கொள்ள வேண்டும். இவை தான் கிராம சமுதாய வளர்ச்சித் திட்டத்தின் முக்கிய அம்சங்களாகும்.

இந்தியாவின் பிரதம மந்திரி ஜவாஹர்லால்ஜி முதல் பல்வேறு மாகாண மந்திரிகள் அன்று மண்வெட்டி பிடித்து வேலை செய்து அத்திட்டங்களை ஆரம்பித்து வைத்தார்கள்.

அவர்களின் முன்னுதாரணத்தைப் பின்பற்றிக் கிராம மக்கள் ஒத்துழைப்பார்களாயின் அத்திட்டங்கள் மகத்தான வெற்றி அடையும் என்பதில் சந்தேகம் இல்லை.

பல துறைகளிலும் இந்தியக் கிராமங்களின் தற்போதைய பிற்போக்கான நிலையைக் கவனிப்பவர்கள்தான், இப்போது கைக்கொள்ளப்படும் ஆக்கத் திட்டங்கள் மக்களின் எதிர்கால க்ஷேமத்துக்கு வரப்பிரசாதம் போன்றவை என்பதை அறிந்து கொள்ள முடியும்.

ஐயாயிரம் ஆண்டுகளுக்கு முன் இந்தியா முழுவதும் சிறந்த ரஸ்தாக்கள் இருந்தன என்பதற்கு ஆதாரங்கள் இருக்கின்றன. ஆனால் இன்றோ ரஸ்தாக்களின் தொடர்பே இராத கிராமங்களின் தொகைதான் அதிகம்.

சுமார் ஒரு லட்சம் சதுரமைல் விஸ்தீரணம் உள்ள பிரிட்டனில் ரஸ்தாக்களின் மொத்த நீளம் சற்றேறக்குறைய இரண்டு லட்சம் மைல்கள் ஆகும். முப்பது லட்சம் சதுரமைல் பரப்பு உள்ள அமெரிக்காவில் முப்பது லட்சத்துக்கு மேற்பட்ட மைல்கள் நீளத்துக்கு ரஸ்தாக்கள் இருக்கின்றன. ஆனால் பதினொரு லட்சம் சதுர மைல்கள் விஸ்தீரணம் உள்ள இந்தியாவில் ரஸ்தாக்களின் மொத்த நீளம் இரண்டரை லட்சம்தான்.

இதுபோலவே சுகாதாரம், கல்வி முதலிய பல துறைகளிலும் மிகவும் பிற்போக்காக இருக்கும் இந்தியா உலக நாடுகளுக்குச் சமமாக விளங்குவதற்கு இன்னும் எவ்வளவோ தூரம் முன்னேற்றம் அடைய வேண்டும்.

அவ்வாறு முன்னேற்றம் அடைந்து, இப்போது ஆரம்பிக்கப் பட்டுள்ள சுபிட்சப் போர் வெற்றி பெறுவது இந்திய மக்களின் சலியா உழைப்பை, உடல் வலிமையை, ஊக்கத்தை, ஒத்துழைப்பைப் பொறுத்திருக்கிறது.

## அட்டைப்பட விளக்கம்

தீராத விளையாட்டுப் பிள்ளை—கண்ணன்
தெருவிலே பெண்களுக் கோயாத தொல்லை.

குழந்தைகளின் விளையாட்டில் புதுமை இருக்கிறது. கற்பனை இருக்கிறது. விளையாடும் குழந்தைகளுக்கு ஆனந்தம் இருக்கிறது. அதைப் பார்க்கும் நமக்கும் ஆனந்தம் ஊற்றெடுக்கிறது.

அப்படியானால் ஆதி முதற்பொருளான ஆண்டவன் மாநிலத்தில் பிறந்து குழந்தையாக விளையாடிக் கோகுலத்தைக் கோலாகலப் படுத்தினான் என்றால், அந்தக் கோகுலம் எத்தகைய புண்ணியம் செய்திருக்க வேண்டும்!

அந்தப் புண்ணிய பூமியைப் பற்றி, அந்தப் புண்ணிய பூமியில் வசித்த கோபியரைப் பற்றி, அங்கே கண்ணன் புரிந்த லீலைகளைப் பற்றி, ஆயிரக் கணக்கான ஆண்டுகளாக நம்மவர்கள் பாடல்களாகப் பாடியும் சித்திரங்களாக வரைந்தும் மகிழ்ந்திருக்கிறார்கள்.

அந்த முறையில் நமது சித்திரக்காரரும் தீராத விளையாட்டுப் பிள்ளையான கண்ணன் ஒரு கோபிகையைப் பிடிவாதமாக உட்கார வைத்துக் கூந்தலில் மலர் சூடி, இன்னொரு பெண்ணின் வயிற்றெரிச்சலைக் கொட்டிக் கொள்ளும் காட்சியை இந்த இதழின் அட்டையில் சித்திரித்திருக்கிறார். கண்ணன் பெண்களுக்கு ஓயாத தொல்லை எப்படி அளிக்கிறான் என்பதையும் விளக்கியிருக்கிறார்.

# நேரு போட்ட போடு-1

சென்னை மாநகரத்துக்குச் சென்ற வாரத்தில் இரண்டு பிரமுகர்கள் விஜயம் செய்தார்கள். இருவரும் இந்த மாகாணத்தில் தன் திருவிளையாடல்களை நடத்திவரும் பஞ்சம் என்னும் பகாசுரனை ஒரு கை பார்த்து விடுவதற்காகவே வந்தார்கள். அந்த இருவரில் ஒருவர் பிரதம மந்திரி நேரு; இன்னொருவர், உணவு மந்திரி வருணன்!

வருணன் ஏதோ தன்னாலான போரைப் பஞ்சத்தின்மீது துவக்கியிருக்கிறார். தொடர்ந்து போரை நடத்துவாரா, முன்போல் நடுவில் புறமுதுகிட்டு ஓடுவாரா என்று தெரியவில்லை. மேட்டூர் தேக்கத்தில் இருபது அடி தண்ணீரைக் கூட்டினாரே, அதுவரையில அவருக்கு நமது நன்றி உரித்தாகுக.

நேருஜி ராயல சீமையிலும் மைசூரிலும் பஞ்சப் பகுதிகளை நேரில் பார்த்துவிட்டுத் திரும்பியிருக்கிறார். அங்கே யெல்லாம் வருணனும் இரண்டு நாள் முன்னதாகத் தலை காட்டினாராம்; ஆனால் நின்று போராடவில்லை. ஆகையால் மைசூரில் ஒரு பகுதியைச் சேர்ந்த ஜனப்பிரதிநிதிகள் "இந்தப் பிரதேசத்தில் பஞ்சத்தைச் சமாளிக்கலாம் என்ற நம்பிக்கையே எங்களுக்குப் போய் விட்டது!" என்று நேருவுக்கு அளித்த வரவேற்புப் பத்திரத்தில் குறிப்பிட்டிருந்தார்களாம். இதைக் கேட்டவுடனே, நம் பிரதம மந்திரி நேரு போட்டார் ஒரு போடு!

"இப்படி நம்பிக்கை இழந்து நிராசை அடைந்த மனிதர்கள் ஜனப் பிரதிநிதிகளாக இருக்கவே தகுதி அற்றவர்கள்!" என்று நேருஜி சக்கைப் போடு போட்டார்.

"சர்க்கார், சர்க்கார் என்று ஜபம் செய்து கொண்டிருக்கிறீர்களே! எதற்காக! உங்கள் ஊரில், அல்லது உங்கள் தெருவில் அல்லது பக்கத்து வீட்டில் யாரேனும் பட்டினி கிடப்பதாகத் தெரிந்தால், நீங்கள் மட்டும் சாப்பிட்டு விட்டு ஏப்பம் விட்டுக் கொண்டு உட்கார்ந்திருப்பது எங்ஙனம்!" என்று கேட்டார்.

இது விஷயத்தில் வடார்க்காடு ஜில்லாவில் சில சமூகத் தொண்டர்கள் செய்து வரும் அரிய சேவை, நம்பிக்கை இழந்த நிராசைக்காரர்களுக்கெல்லாம் ஒரு பாடமாக இருக்கிறது.

மேற்படி தொண்டர்கள் கிராமங்களில் சற்று வசதி உள்ளவர்களிடம் சொற்ப பணமும் தானியமும் வசூல் செய்து அவற்றைக் கொண்டு கஞ்சித் தொட்டிகள் வைத்து நடத்தி வருகிறார்கள். இந்த விதத்தில், மேற்படி சமூகத் தொண்டர்கள் கிராமவாசிகளிடையே கூட்டுறவையும் சுய நம்பிக்கையையும் வளர்த்து வருவது பாராட்டத்தக்கது.

பஞ்சப் பிரதேசங்களில் ஏழை மக்கள் பட்டினி கிடப்பதைப் பார்த்துக் கொண்டு, வெறுமனே மழையையும் சர்க்காரையும் குறைகூறிக் கொண்டு காலங் கழிப்பதைக் காட்டிலும், ஏதோ ஒரு சிறிய முயற்சியாவது தொடங்கி நடத்துவது எவ்வளவோ மேல் அல்லவா!

# நேரு போட்ட போடு-2

சென்னைமா நகரத்தை "அறிவின் தலைநகரம்" என்று நேருஜி கூறி, இன்னொரு போடுபோட்டார். "தென்னிந்தியாவுக்கு மட்டுமல்ல; இந்தியா தேசத்துக்கே அறிவின் தலைநகரமாய் விளங்குவது சென்னை" என்று மேலும் வற்புறுத்திக் கூறினார்.

நேரு இதற்கு முன் பல தடவை சென்னைக்கு விஜயம் செய்திருக்கிறார். அப்போதெல்லாம் இவ்விதம் கூறியதில்லை. இப்போது மட்டும் ஏன் சென்னையின் அறிவுப் பெருமையைப் பற்றி நேரு கூற வேண்டும்?

சில காலமாகச் சென்னை அரசாங்க நிர்வாகத்தில் அறிவின் திறமை சுடர் விட்டுப் பிரகாசிப்பது அப்படியாக வடநாட்டின் கவனத்தைக் கவர்ந்திருக்கிறது போலும். அதனால் அவர்கள் இம்மாகாணத்தின்மீது திருஷ்டி போட ஆரம்பித்து விட்டார்கள்!

இதற்கு இம்மாகாணத்திலுள்ள அதி புத்திசாலிகள் ஏதாவது பரிகாரம் கண்டு பிடிக்க வேண்டும்; திருஷ்டி பரிகாரத்துக்கு ஏதேனும் வழி தேட வேண்டும்.

முன்னொரு தடவை நடந்ததுபோல் "எங்களுக்கு அறிவு வேண்டாம்; அறிவாளிகள் வேண்டாம்" என்ற ஓர் இயக்கத்தையாவது தொடங்கலாம்.

அல்லது தஞ்சாவூர் ஜில்லா வக்கீல்—மிராசுதாரர்கள் ஆரம்பித்திருக்கிறார்களே, அந்த பாதிவிவசாயப் பாதுகாப்புச் சட்டத்தை எடுத்துக் கொண்டு, அணு அணுவாய் அலசி ஆராய்ந்து, அந்தச் சட்டத்தை ரத்து செய்ய வேண்டுமென்ற ஒரு கிளர்ச்சியையாவது ஆரம்பிக்கலாம்!

இது சம்பந்தமாகக் கும்பகோணத்து பிரகஸ்பதி ஒருவர் 1920-ம் வருஷத்தில் தஞ்சாவூரில் ஸ்ரீ பங்குலுவய்யர், ஸ்ரீ ஏ. ரங்கசாமி ஐயங்கார் முதலியவர்களின் தலைமையில் நடந்த வரிகொடா இயக்கத்தை ஞாபகப்படுத்தி யிருக்கிறார்!

அந்தப்படி நாங்களும் இப்போது நடத்துவோம் என்பதைச் சொல்லாமற் சொல்லிப் பயமுறுத்தி வைத்திருக்கிறார்!

பிரிட்டிஷ் ஆட்சியின்கீழ் முப்பது வருஷங்களுக்கு முன்பு நடந்த வரி கொடா இயக்கத்தை இப்போது இவர் உதாரணம் குறிப்பிடுவது அதிபுத்திசாலித்தனம் அல்லவா!

அந்த நாளில் மகாத்மா காந்தி பல தடவை உண்ணாவிரதம் இருந்தார். இப்போது சுவாமி சீதாராமும் ஆந்திர மாகாணத்துக்காக அடிக்கடி உண்ணாவிரதம் இருக்கிறார்.

மகாத்மா காந்தி சத்தியாக்கிரஹ இயக்கத்தை நடத்தினார். இப்போது சென்னை சர்க்கார் காரியாலயத்துக்கு எதிரில் ஒரு குடிசை போட்டுக் கொண்டு சில ஆந்திர சகோதரர்கள் மாற்றி மாற்றி அதில் உட்கார்ந்து கொண்டிருக்கிறார்கள். அதைச் 'சத்தியாக்கிரஹம்' என்றும் சொல்லிக் கொண்டிருக்கிறார்கள்.

மகாத்மாவின் உண்ணாவிரதமும் சத்தியாக்கிரஹமும் உலகத்தின் கவனத்தையே கவர்ந்தன. பிரிட்டிஷ் சர்க்காரைக் கதிகலங்கச் செய்தன.

ஆந்திர சகோதரர்களின் சத்தியாக்கிரஹம் ஆந்திர கேசரி பிரகாசத்தைக்கூட அசைக்க முடியவில்லை! "எனக்கு உண்ணாவிரதத்திலேயே நம்பிக்கை கிடையாது" என்கிறார் ஸ்ரீ பிரகாசம்.

கும்பகோணத்து பிரகஸ்பதி, பழைய வரிகொடா இயக்கத்தைப் பற்றி விஸ்தரித்து மறைமுகமாகப் பயமுறுத்தி விடுப்பது ஆந்திர மாகாண 'சத்தியாக்கிரஹி'களின் பயமுறுத்தல் போன்றதுதான்!

இப்படிப்பட்ட அதி மேதாவிகள்தான் தஞ்சாவூர் ஜில்லாவை ஏறக்குறைய கம்யூனிஸ்டுகளிடம் ஒப்படைத்தவர்கள்.

விவசாயப் பாதுகாப்புச் சட்டத்தை எதிர்த்து இவர்கள் செய்யும் கிளர்ச்சிக்கு, மற்றப் பட்டாதார்கள் செவி கொடுத்தால், தஞ்சை ஜில்லாவை முழுதும் கம்யூனிஸ்டுகளிடம் ஒப்படைத்துவிட்டு வாயில் விரலை வைத்துக் கொண்டு வானத்தைப் பார்த்து நிற்க வேண்டியதாயிருக்கும்!

நேருஜி தென்னாட்டின் அறிவைப் பாராட்டியதற்காக, இந்த மாதிரி முறைகளில் தஞ்சாவூர் அறிவாளிகள் சிலர் திருஷ்டி பரிகாரம் செய்யத் தொடங்கியிருக்கிறார்கள்! அவர்கள் வாழ்க!

# நேரு போட்ட போடு - 3

சென்னையில் பிரதம மந்திரியைப் பேட்டி காணச் சென்ற பத்திரிகை நிருபர்களில் ஒருவர் "தமிழ் நாட்டுக்கு எப்போது வரப்போகிறீர்கள்!" என்று ஒரு கேள்வியைக் கேட்டு வைத்தார். அதற்கு நேரு சரியான போடு ஒன்றைப் போட்டார். "நான் இப்போது தமிழ் நாட்டில் தானே இருக்கிறேன்!" என்றார். "தென் ஜில்லாக்களைப் பற்றிக் கேட்டேன்" என்று நிருபர் திருத்திக் கொண்டு சொன்னார் "அதற்கென்ன! பிறிதொரு சமயம் வருகிறேன்" என்றார் நேரு.

மேற்கண்ட சம்பாஷணையில் "சென்னை நகரம் தமிழ் நாட்டைச் சேர்ந்தது தான்" என்பதை நேருஜி ஒப்புக் கொண்டு வற்புறுத்தியும் இருக்கிறார். நிருபர் கேட்ட கேள்விக்கு ஏமாந்து பதில் சொல்லி விடவில்லை.

நேருஜி கெடுவிலும் "சென்னை நகரப் பிரச்னை தீர்ந்தால தான் ஆந்திர மாகாணம் ஏற்படும்" என்று சொல்லி வந்திருக்கிறார். அதோடு, "சென்னை நகரம் தமிழர்களுடைய நகரந்தான்" என்பதையும் ஒப்புக் கொண்டு வந்திருக்கிறார்.

ஆனால் சமீப காலத்தில் இது குறித்து, அதாவது நேருவின் நிலை குறித்து, அநேகருக்குச் சிறிது கவலை ஏற்பட்டிருந்தது.

அவருடைய அத்தியந்த மதிப்புக்கு உகந்தவர்களான ஜனாப் கித்வாய் அவர்களும், இந்தியாவின் உப அக்ராசனர் ராதாகிருஷ்ணன் அவர்களும் சென்னை நகரைப் பற்றிக் 'குரங்கு மத்தியஸ்தம்' செய்ய முற்பட்டிருப்பதாக வதந்தி உலாவியது. "என்னத்திற்கு வீண் சண்டை? சென்னை நகரம் தனி மாகாணமாக இந்திய அரசாங்கத்தின் மேற்பார்வையில் இருந்து விட்டுப் போகட்டுமே" என்ற மாதிரியில் மேற்படி பிரமுகர்கள் மத்தியஸ்தம் செய்யத் தொடங்கினார்களாம்!

அவர்களிடம் நேருஜிக்கு நட்பும் மரியாதையும் அதிகம் உண்டாகையால், ஒரு வேளை அவர்களுடைய பேச்சுக்குச் செவி கொடுப்பாரோ என்ற கவலை ஏற்பட்டிருந்தது.

ஆனால் நட்பும் மரியாதையும் வேறு, நியாயமும் நீதியும் வேறு என்பதில் நேரு உறுதியாயிருப்பது கண்டு மகிழ்கிறோம்.

சென்னை நகரம் தமிழர்களுடையது. தமிழ் நாட்டைச் சேர்ந்தது என்பது வெட்ட வெளிச்சமான விஷயம். அதற்கு ஆதாரம், ருசு எதுவும் வேண்டியதில்லை. கண் உள்ளவர்கள், காது கேட்பவர்கள் அனைவரும் நேரில் பார்த்தும் கேட்டும் தெரிந்து கொள்ளலாம்.

இந்த நிலைமையில், ஆந்திர சகோதரர்களின் வெறும் பிடிவாதத்துக்காகக் 'குரங்கு மத்தியஸ்தத்தை'த் தமிழர்கள் ஒப்புக் கொள்ள முடியாது.

நேருஜியும் இந்த விஷயத்தில் உறுதியாயிருப்பது கண்டு மகிழ்வடைகிறோம்.

# நேரு போட்ட போடு—4

அறிவின் தலை நகரமாகிய சென்னையில் அதி மேதாவிகள் சிலரும் உண்டு. நம்மில் மிகப் பெரியோர்களைக் குறைத்துச் சொல்வதிலும் குற்றம் கண்டு பிடிப்பதிலும் ஒரு திருப்தி. இவர்கள் சொல்வதை யாரும் நம்ப மாட்டார்கள் என்று தோன்றினால், வெளியிலிருந்து யாரையேனும் சாட்சிக்கு அழைத்து வருவார்கள்.

"ராஜாஜி சென்னை மாகாணத்தின் பிரதம மந்திரியானது நேருஜிக்குப் பிடிக்கவில்லை" என்று ஒரு வதந்தியைக் கிளப்பி விட்டார்கள்.

ராஜாஜி சென்னை மாகாணத்தின் பிரதம மந்திரியானது முக்கியமாக யாருக்குப் பிடிக்கவில்லை தெரியுமா? ராஜாஜிக்கேதான்! இம்மாகாணத்தை இக்கட்டான நிலையிலிருந்து தப்புவிப்பதற்கு வேறு வழியில்லையென்று கண்டு, கொஞ்சங்கூடப் பிடிக்காமலேதான் ராஜாஜி இந்தப் பொறுப்பை ஏற்றுக் கொண்டார். ஏற்றுக் கொண்ட பிறகு முழு உற்சாகத்துடன் உலகம் வியக்கும்படி நடத்தி வருகிறார்.

சென்னை மாகாணம் இவ்விதமாக ஒரு பெரிய நெருக்கடியிலிருந்து காப்பாற்றப் பட்டது நேருவுக்கு ஏன் பிடிக்காமலிருக்க வேண்டும்! அதற்கு மாறாக அவர் எவ்வளவோ சந்தோஷப் பட்டிருப்பதுதானே இயற்கை!

அந்தச் சந்தோஷத்தை நேருஜி பட்டவர்த்தனமாக வெளிப்படுத்தியிருக்கிறார்.

"ராஜாஜி இந்த மாகாணத்தின் பொறுப்பை ஏற்றுக் கொண்ட போது நானும் என் சகாக்களும் நன்றியுடையவர்களாயிருந்தோம். இன்றைக்கும் நன்றியுடையவர்களாக இருக்கிறோம். ராஜாஜி மேற்கொண்ட பல திட்டங்கள் வெற்றிகரமாக நடந்து வருவது பற்றி மிக மகிழ்கிறோம்" என்று ஐயத்திற்கு இடமின்றி நேருஜி சென்னைக்கு வந்தவுடனே சொல்லியிருக்கிறார்.

நேருஜியும் இந்திய சர்க்காரில் உள்ள அவருடைய சகாக்களும் வார்த்தையிலே மட்டுமின்றிக் காரியத்திலும் தங்கள் நன்றியைக் காட்டிக் கொள்ள வேண்டும் என்று விரும்புகிறோம்.

முக்கியமாக ஐந்து வருஷம் மழையின்மையால் ஏற்பட்டிருக்கும் பஞ்ச நிலைமையைச் சமாளிப்பதற்கு விரைந்து உதவி புரிய வேண்டும். ராஜாஜி கோரியிருப்பது போல் இந்திய சர்க்காரின் வருமானத்தில் ஒரு பகுதியை மாகாணங்களுக்குத் தர முன் வர வேண்டும். எல்லாவற்றிலும் முக்கியமாக, வேஷ்டி—சேலை செலவைக் கைத்தறிகளுக்கென்று ஒதுக்கித் தந்து, அந்தப் புராதனமான குடிசைத் தொழிலையும் அத்தொழிலில் ஈடுபட்ட லட்சக்கணக்கான குடும்பங்களையும் காப்பாற்ற முன் வர வேண்டும்.




அத்தியாயம் 9

## நாய் குரைத்தது!

மணிமேகலை வந்தியத்தேவனுடைய முகத்தைப் பார்த்த வண்ணம் நின்றாள்.

வந்தியத்தேவனும் புன்னகை புரிந்த வண்ணம் நின்றான். இந்தப் பெண்ணிடம் என்ன சொல்லி விட்டு, எப்படித் தப்பிச் செல்வது என்று அவன் மனம் சிந்தித்துக் கொண்டிருந்தது.

இச்சமயம் எங்கேயோ தூரத்திலிருந்து ஒரு குரல் "அம்மா! என்னை அழைத்தீர்களா?" என்று கேட்டது.

"இல்லையடி, உன் வேலையைப் பார்!" என்றாள் மணிமேகலை. உடனே அவளுடைய திகைப்பு நீங்கியது.

சற்று முன் வந்தியத் தேவன் புகுந்து வந்த துவாரத்தின் அருகில் சென்று உட்பக்கத்துத் தாளை யிட்டாள். பின்னர், வந்தியத் தேவனுக்குச் சமிக்ஞை காட்டி அந்த அறையிலேயே சற்றுத் தூரமாக அழைத்துச் சென்றாள். சட்டென்று திரும்பி நின்று "ஐயா! உண்மையைச் சொல்லும்! சந்திரமதி உம்மை அழைத்ததாகக் கூறினீரே? அது நிஜமா?" என்று கேட்டாள்.

"ஆம், அம்மணி!"

"எப்போது, எங்கே பார்த்து உம்மை அழைத்தாள்?"

"சற்று முன்னால்தான்! அடுத்த அறையில் நான் குரங்கின் பின்னால் மறைந்து நின்ற போது நீங்கள் இருவரும் வந்து பார்த்து விட்டுத் திரும்பினீர்கள். நீங்கள் திரும்பிய பிறகு அவள் என்னைப் பார்த்து, 'குரங்கே? நீ என்னுடைய அறைக்கு வந்து இருக்கிறாயா? வேண்டாத சமயத்தில் வருகிறவர்களைப் பயமுறுத்தி அனுப்பச் சௌகரியமாயிருக்கும்!' என்றாள். அது தங்கள் காதில் விழவில்லை போலிருக்கிறது!"

மணிமேகலை இளநகை புரிந்த வண்ணமாக "காதில் விழுந்திருந்தால் அவளைச் சும்மா விட்டிருப்பேனா?" என்றாள்.

"இளவரசி! தங்கள் தோழி பேரில் கோபிப்பதில் பயன் என்ன? என் முகமும் வாலில்லாக் குரங்கின் முகமும் ஒன்று போலிருந்தால் அதற்குச் சந்திரமதி என்ன செய்வாள்?"

"உமது முகத்துக்கும் வாலில்லாக் குரங்கின் முகத்துக்கும் வெகு தூரம்!"

"குரங்கின் முகத்துக்கும் அதற்கு மேலே தொங்கிய ஆந்தையின் முகத்துக்கும் உள்ள தூரம் போலிருக்கிறது."

"உமது முகம் குரங்கு முகமும் அல்ல; ஆந்தை முகமும் அல்ல. ஆனால், குரங்கின் சேஷ்டை யெல்லாம் உம்மிடம் இருக்கிறது. சில சமயம் ஆந்தையைப் போலவும் விழிக்கிறீர். சற்று முன்னால் இதோ இந்தக் கண்ணாடியில் எட்டிப் பார்த்து விழித்தது நீர்தானே?"

"ஆம், இளவரசி. நான்தான்!"

"எதற்காக உடனே பின் வாங்கிக் கதவைச் சாத்திக் கொண்டீர்?"

"இந்தக் கண்ணாடியில் என் முகத்துக்கு அருகில் ஒரு தேவ கன்னிகையின் முகம் போலத் தெரிந்தது. அந்த தேவ கன்னிகை என் முகத்தைப் பார்த்துப் பயந்து கொள்ளப் போகிறாளே என்று நான் பிடித்திருந்த யானைத் தந்தத்திலிருந்து கையை எடுத்தேன். கதவு தானாகச் சாத்திக் கொண்டது."

"அந்தத் தேவகன்னிகை யார் என்பது உங்களுக்குத் தெரியுமா?"

"அந்த க்ஷணம் எனக்குத் தெரியவில்லை. பிறகு நினைத்துப் பார்த்துத் தெரிந்து கொண்டேன்."

"என்ன தெரிந்து கொண்டீர்?"

"நான் பார்த்தது தேவ கன்னிகை அல்ல; தேவ கன்னிகைகள் ஓடி வந்து அடி பணிவதற்குரிய மணிமேகலா தேவி; கடம்பூர் சம்புவரையரின் செல்வக் குமாரி என்று தெரிந்து கொண்டேன். என்னுடைய ஆருயிர் நண்பன் கந்தமாறனுடைய அருமைத் தங்கை என்பதும் நினைவுக்கு வந்தது."

மணிமேகலையின் புருவங்கள் நெறிந்தன. ஏளனமும் கோபமும் கலந்த புன் சிரிப்புடன், "அப்படியா? என் தமையன் கந்தமாறன் தங்களுடைய ஆருயிர் நண்பனா?" என்றாள்.

"அதில் என்ன சந்தேகம், இளவரசி! நாலு மாதங்களுக்கு முன்னால் நான் இங்கு ஒரு நாள் வந்திருந்தது நினைவில்லையா? அந்தப்புரத்துக்குக்கூட வந்து தாய்மார்களுக்கு வணக்கம் செலுத்தினேனே? அது ஞாபகம் இல்லையா?"

"நன்றாய் ஞாபகம் இருக்கிறது. அதற்குள் மறந்து விடுமா? அந்த வல்லவரையர் வந்தியத்தேவர் என்னும் வாணர் குலத்து இளவரசர் தாங்கள்தானா?"

"ஆம், இளவரசி! தங்குவதற்கு அரண்மனையும் ஆளுவதற்கு இராஜ்யமும் இல்லாமல் 'அரையன்' என்ற குலப் பெயரை மட்டும் தாங்கிக் கொண்டிருக்கும் அந்த ஏழை நான்தான்! ஒரு காலத்தில் தங்கள் தமையன் என்னிடம் தங்களைப் பற்றி எவ்வளவோ சொல்லியதுண்டு. ஒரு காலத்தில் நானும் கந்தமாறனும் வடபெண்ணை நதிக்கரையில் காவல் செய்து கொண்டிருந்தபோது, தங்களைப் பற்றி அடிக்கடி சொல்லுவான். நானும் ஏதேதோ கனவு கண்டு கொண்டிருந்தேன். பிறகு அந்த எண்ணத்தை மறந்து விட்டேன்."

மணிமேகலையின் உள்ளத்தில் ஓர் அதிசயமான எண்ணம் தோன்றியது. இவன் தன்னைக் குத்திக் கொல்ல முயன்றதாகக் கந்தமாறன் கூறினான். அது எதற்காக இருக்கும்? ஒருவேளை தன்னைப் பற்றியதாகவே இருக்குமோ? தன்னை இவனுக்கு மணம் செய்து கொடுக்கப் போவதில்லை என்று சொன்னதற்காகக் கந்தமாறனுடன் சண்டையிட்டிருப்பானோ?—இந்த எண்ணம் அவள் உள்ளத்தில் இன்பப் புயலை உண்டாக்கியது. அதை அவள் கோபப் புயலாக மாற்றிக் கொண்டாள்.

"ஐயா! அந்தப் பழைய கதையெல்லாம் இப்போது வேண்டாம். இந்த அரண்மனையில் நீர் கள்ளத்தனமாகப் புகுந்ததின் காரணத்தைச் சொல்லும்! இல்லாவிடில் உடனே என் தோழியை அழைத்துத் தந்தைக்குச் சொல்லி அனுப்ப வேணும்" என்றாள்.

"இளவரசி! நான் இங்கு வந்த காரணத்தை முன்னமே சொன்னேனே? சில கொலைகாரர்கள் என்னைக் கொல்லுவதற்காகத் துரத்திக் கொண்டு வந்தார்கள். அவர்களிடமிருந்து தப்பி ஓடிவந்தபோது பூமியில் ஒரு துவாரம் தெரிந்தது. அது ஏதோ இரகசியப் பாதை என்று அறிந்து கொண்டேன். அதன் வழியாக ஓடித் தப்பிக்கலாம் என்று வந்தபோது, அந்த வழி இங்கே கொண்டு வந்து சேர்த்தது!"

"ஐயா! சுத்த வீரர் என்றால் உமக்கே தகும். நானும் எத்தனையோ அஸகாய சூரர்களைப் பற்றிக் கேட்டிருக்கிறேன். ஆனால் உம்மைப் போல் ஓட்டத்தில் சூரனைப் பற்றிக் கேட்டதில்லை. உத்தர குமாரன் உம்மிடம் பிச்சை வாங்க வேண்டியதுதான்!"

வந்தியத் தேவன் மனதில் சுரீர் என்றது. தான் அசட்டுப் பெண் என்று நினைத்த மணிமேகலை இப்படித் தன்னைக் குத்திக் காட்டும்படி ஆகிவிட்டதல்லவா?

"தேவி! அவர்கள் ஏழெட்டுப் பேர்! நான் ஒருவன். அவர்கள் ஆயுதபாணிகள். என்னிடம் ஆயுதமே இல்லை. என்னுடைய அருமை வேல் கொள்ளிடத்து வெள்ளத்தில் போய் விட்டது......"

"ரொம்ப நல்லது! அந்தப் படுபாதக வேல், சிநேகிதனைப் பின்னாலிருந்து குத்திக் கொல்லும் வேல், ஆற்றோடு போனதே நல்லது!"

வந்தியத் தேவனுக்குத் தூக்கிவாரிப் போட்டது. அவன் பதில் சொல்ல வாயெடுப்பதற்குள் மணிமேகலை "உன்

மையைக் கூறி விடும். கொலைகாரர்களிடம் தப்புவிப்பதற்காக ஓடிவந்தீரா! கொலை செய்வதற்காக இங்கு வந்தீரா?" என்று கேட்டாள்.

**வ**ந்தியத்தேவன் தீயில் காலை வைத்தவனைப் போல் துடிதுடித்து. "சிவ சிவா! நாராயணா! நான் யாரைக் கொலை செய்வதற்காக இங்கே வர வேணும்? என் ஆருயிர் சிநேகிதரின் அருமைத் தங்கையையா? எதற்காக?" என்றான்.

"நான் என்ன கண்டேன்! 'அருமை சிநேகிதன்' என்று வாய் கூசாமல் பொய் சொல்லுகிறீரே? அப்பேர்ப் பட்ட அருமை சிநேகிதனின் பின்னாலிருந்து முதுகிலே குத்திக் கொல்லுவதற்கு நீர் முயலவில்லையா? அது எதற்காகவோ, அதே காரணத்துக்காக, இங்கே யாரையேனும் கொலை செய்வதற்கு நீர் வந்திருக்கலாம்."

"கடவுளே! இது என்ன வீண் பழி? நானா கந்தமாறனின் முதுகில் குத்தினேன்? அப்படிப்பட்ட காரியத்தைச் செய்வதற்கு முன்னால் என் கையை வெட்டிக் கொண்டிருப்பேனே? இளவரசி! இத்தகைய படுபாதகமான பொய்யைத் தங்களிடம் யார் கூறினார்கள்?"

"என் அண்ணனே கூறினான். வேறு யாராவது கூறியிருந்தால் நான் நம்பியே இருக்க மாட்டேன்."

"கந்தமாறனா இப்படிக் கூறினான்? அப்படியானால் நான் உண்மையில் துர்ப்பாக்கியசாலிதான்! யாரோ அவனை முதுகிலே குத்தித் தஞ்சாவூர் மதில் சுவருக்கு அருகில் போட்டிருந்தார்கள். மூர்ச்சையாகிக் கிடந்த அவனை நான் தூக்கிக் கொண்டுபோய்ச் சேந்தன் அமுதன் குடிசையில் சேர்த்துக் காப்பாற்றினேன். அதற்கு எனக்குக் கிடைத்த வெகுமதியா இது? இளவரசி! எதற்காக அவனை நான் கொல்ல முயன்றேனாம்? ஏதாவது காரணம் சொன்னானா?"

"சொன்னான், சொன்னான்! நீர் என் அழகைப் பழித்து, அவலட்சணம் பிடித்தவள் என்று இகழ்ந்தீராம். தஞ்சாவூர்ப் பெண்கள் என்னைவிட அழகிகள் என்று சொன்னீராம். அதனால் கந்தமாறன் கோபங்கொண்டு உம்மை நன்றாய்ப் புடைத்தானாம். நேருக்கு நேர் சண்டையிடக் கையினாலாகாமல் பின்னாலிருந்து அவனைக் குத்தி விட்டீராம்! இதெல்லாம் உண்மையா, இல்லையா?"

"பொய்! பொய்! பயங்கரமான பொய். தங்களை அவலட்சணம் என்று சொல்வதற்கு முன்னால், என் நாக்கையே துண்டித்துக் கொண்டிருப்பேனே? கந்தமாறன் அல்லவா அவனுடைய சகோதரியை நான் மறந்துவிட வேண்டும் என்று வற்புறுத்தினான்?"

"எதற்காக?"

"இராஜ்யம் ஆளும் பேரரசர்கள் தங்களை மணந்து கொள்ளக் காத்திருப்பதால் தங்களை நான் மறந்துவிட வேண்டுமென்று வற்புறுத்தினான்."

"நீரும் அடியோடு என்னை மறந்துவிட்டீர் ஆக்கும்!"

"என்றால் அடியோடு மறக்க முடியவில்லை. ஆனால் அது முதல் தங்களை என் அருமைச் சகோதரியாகக் கருதத் தொடங்கினேன்.. இளவரசி! உடனே கந்தமாறனிடம் என்னை அழைத்துப் போங்கள்! அல்லது அவனை இங்கே அழையுங்கள். ஏன் இத்தகைய பெரும் பொய்யை அவன் சொன்னான் என்றாவது தெரிந்து கொள்கிறேன். அல்லது உண்மையிலேயே அவன் அப்படி எண்ணிக் கொண்டிருந்தால், அந்தத் தப்பெண்ணத்தைப் போக்குகிறேன்......"

"தஞ்சாவூரில் ஆரம்பித்த காரியத்தை இங்கே பூர்த்தி செய்து விடலாம் என்று வந்தீராக்கும்......"

"அப்படி என்றால்......"

"அங்கே அவனைக் கொல்ல முயன்றீர்; அந்த முயற்சி பலிக்கவில்லை......"

"கடவுளே! கந்தமாறனைக் கொல்லுவதற்கு அவனுடைய அரண்மனையைத் தேடியா வருவேன்!"

"இரகசிய வழியாக வந்தது வேறு எதற்காக?"

"அதோ, உற்றுக் கேளுங்கள்! என்னைக் கொல்ல வந்தவர்கள் அடுத்த அறையில் இன்னும் இருக்கிறார்கள். அவர்கள் நடமாடும் சத்தமும் பேசும் குரல்களும் கேட்கவில்லையா?"

"அவர்கள் எதற்காக உம்மைக் கொல்ல வரவேணும்?"

"அவர்களைப் பார்த்தால் மந்திரவாதிகள் போலிருக்கிறது. ஒருவேளை நரபலி கொடுக்கும் கூட்டமாயிருக்கலாம்......"

"சகல இலட்சணங்களும் பொருந்திய இராஜகுமாரனாகிய உம்மை அதற்காகப் பிடித்தார்கள் போலிருக்கிறது........." என்று கூறி மணிமேகலை சிரித்தாள்.

"அதுதான் எனக்கும் அதிசயமாயிருக்கிறது. இந்த ஆந்தை விழி விழிக்கும் குரங்கு மூஞ்சிக்காரனை அவர்கள் எதற்காகப் பிடிக்க வந்தார்கள் என்று தெரியவில்லை. உங்கள் பேச்சைக் கேட்ட




பிறகு ஒரு சந்தேகம் உதிக்கிறது. ஒருவேளை என் நண்பன் கந்தமாறனே இப்படிப்பட்ட ஏற்பாடு செய்திருப்பானோ என்று. அவனிடம் என்னை உடனே அழைத்துச் செல்லுங்கள்! ஒன்று, அவனுடைய தப்பபிப்பிராயத்தைப் போக்கிக் கொள்ளட்டும்; இல்லாவிட்டால் என்னை அவன் கையினாலேயே கொன்றுவிடட்டும். கொலைகாரர்களை எதற்காக ஏவ வேண்டும்? அம்மணி! உடனே கந்தமாறனை அழைத்து விடுங்கள்!"

"ஐயா! அவ்வளவு அவசரப்பட வேண்டாம். கந்தமாறன் ஊரில் இல்லை."

"எங்கே போயிருக்கிறான்?"

"காஞ்சிக்குக் கரிகாலரை அழைத்து வரப் போயிருக்கிறான். நாளை இரவு எல்லாரும் இங்கு வந்து விடுவார்கள். அதுவரையில் நீர்......"

"அதுவரையில் என்னை இங்கேயே இருக்கச் சொல்கிறீர்களா? அது நியாயமல்ல!"

"இங்கே இருக்கச் சொல்லவில்லை. இன்னும் சற்று நேரத்துக்கெல்லாம் இங்கே பழுவூர் இளைய ராணி வந்து விடுவாள். பிறகு ஈ காக்காய் இங்கே வர முடியாது. பழுவேட்டரையர் எப்பேர்ப்பட்டவர் என்பது உமக்குத் தெரிந்திருக்கும். அவர் உம்மை இங்கே கண்டால் உடனே கண்ட துண்டமாய் வெட்டிப் போட்டுவிடச் செய்வார்! ஆ! அக்கிழவருக்குத்தான் பெண்டாட்டியின் பேரில் எவ்வளவு ஆசை!" என்று சொல்லி மணிமேகலை சிரித்தாள்.

வந்தியத்தேவன் முன் தடவை பழுவேட்டரையர் வந்த போது நடந்ததையெல்லாம் நினைத்துக் கொண்டான்.

"அப்படியா? பழுவேட்டரையருக்குப் பழுவூர் ராணி பேரில் ரொம்ப ரொம்ப ஆசையா?" என்று கேட்டான்.

"அது நாடு நகரம் எல்லாம் தெரிந்தவிஷயம் ஆயிற்றே! போன தடவை, எட்டு மாதங்களுக்கு முன்னால் இங்கே ஒரு தடவை அவர்கள் வந்திருந்தார்கள். பழுவூர் ராணி அந்தப்புரத்துக்கு வரக்கூடக் கிழவர் விடவில்லை! அப்படிக் கண்ணும் கருத்துமாய்ப் பாதுகாக்கிறார். இந்தத் தடவை சில நாள் இங்கே இருக்கப் போகிறார்களாம். பழுவூர் ராணிக்குத் தனி அந்தப்புரம் வேண்டுமென்று ஒரே தடபுடல். இந்தத் தடவை



யாவது எங்களை யெல்லாம் பார்க்கப் போகிறானோ, பார்ப்பதற்குக் கிழவர் விடப் போகிறாரோ, தெரியவில்லை."

"அப்படியானால் நான் இப்பொழுது என்ன செய்யட்டும்?"

"அதுதான் நானும் யோசித்துக் கொண்டிருக்கிறேன்......ஆ! ஒரு யோசனை தோன்றுகிறது. என் தமையன் கந்தமாறனுடைய தனி ஆயுத அறை ஒன்று இந்த மாளிகையில் இருக்கிறது. அதில் உம்மைக் கொண்டு விடுகிறேன். நாளை சாயங்காலம் கந்தமாறன் வந்து விடுவான். அது வரையில் அங்கேயே இரும். நீர் சொல்வதின் உண்மை, பொய்யைக் கந்தமாறனிடம் நேரில் நிரூபித்து விடலாம்......"

"இளவரசி! அது முறையன்று! மிகவும் ஆபத்தான காரியம்!"

"என்ன ஆபத்து?"

"அங்கே நான் எப்படி வந்து சேர்ந்தேன் என்று கந்தமாறன் கேட்டால் என்ன பதில் சொல்லுவது?"

"உள்ளது உள்ளபடி சொல்லுகிறது."

"உள்ளது உள்ளபடி நான் இப்போது சொன்னதை நீங்களே நம்பவில்லையே? அடுத்த அறையில் என்னைத் தேடி வந்த ஆட்கள் இருக்கும் போதே?"

"ஐயா! அதை இப்போதே சோதித்து விடுகிறேன்."

"என்ன சோதிக்கப் போகிறீர்கள்?"

"அடுத்த அறைக்குள் சென்று அந்த மனிதர்களைப் பார்த்து விசாரிக்கப் போகிறேன். அவர்கள் உம்மைக் கொல்ல வந்தவர்களா? அல்லது நீர் அழைத்து வந்தவர்களா என்று தெரிந்து கொண்டு வருகிறேன்."

"ஐயோ! அவர்கள் பொல்லாத துஷ்டர்கள். தாங்கள் அவர்களிடம் தனியாக அகப்பட்டுக் கொண்டால்......"

"என் அரண்மனையில் யார் என்னை என்ன செய்ய முடியும்? இதோ பாருங்கள்!" என்று கூறி மணிமேகலை யாருக்கும் தெரியாமல் தன் இடுப்பில் செருகியிருந்த சிறிய மடக்குக் கத்தியை எடுத்துக் காட்டினாள்.

"யாரும் என் கிட்ட வர முடியாது! அப்படி ஏதாவது ஆபத்து வருவதாயிருந்தால் நீர்தான் சூராதி சூரர் இங்கே இருக்கிறீரே!"

"அம்மணி! என்னிடம் தற்சமயம் ஆயுதம் ஒன்று மில்லை."

"வல்லவனுக்குப் புல்லும் ஆயுதம் என்று நீர் கேட்டதில்லையா? உமது பெயரே வல்லவரையர் ஆயிற்றே? ஆயுதம் கையில் இருந்தால் பெண்பிள்ளைகள் கூடச் சண்டை போடுவார்கள். ஆண்பிள்ளைகள் எதற்கு?... உமக்கு வீண் கவலை வேண்டாம். அங்கே அந்த அறையில் தூக தட்டிக் கொண்டிருந்தவன் எங்கள் அரண்மனை வேலைக்காரன்தான். மற்றவர்களை அவன்தான் இட்டு வந்திருக்க வேண்டும். அவர்களும் எனக்குத் தெரிந்தவர்கள் என்றே தோன்றுகிறது. அவர்கள் எதற்காக இங்கே வந்திருக்கிறார்கள் என்பதைத் தெரிந்து கொண்டு வருகிறேன். கதவுக்கு அருகில் நிற்க வேண்டாம். அதோ அந்த மரக் களஞ்சியத்துக்குப் பக்கத்தில் போய்ச் சிறிது மறைந்து நில்லுங்கள்!"

இவ்விதம் சொல்லிக் கொண்டே மணிமேகலை வேட்டை அறைக்குப் போகும் இரகசிய வாசற் பக்கம் சென்று அதன் கதவைத் திறக்க முயன்றாள்.

வந்தியத்தேவன் அவசரமாக நடந்து மரக்களஞ்சியத்தின் அருகில் சென்று சற்று மறைந்து நின்றான்.

மரக் களஞ்சியத்தின் கதவுகள் திறந்திருந்தன. அதற்குள்ளே தற்செயலாகப் பார்த்தான். அது தானியம் கொட்டும் களஞ்சியம் அல்லவென்று தெரிந்தது. அதற்குள்ளே படிப்படியாக அமைந்திருந்தது. ஒவ்வொரு படியிலும் யாழ், வீணை, மத்தளம், தாளம் முதலிய இசைக்கருவிகள் அடுக்கி வைக்கப்பட்டிருந்தன. மேலே சிறிது அண்ணாந்து பார்த்தான். படிகள் மேற்கூரை வரையில் போவதாகத் தெரிந்தது.

இதற்குள் மணிமேகலை வேட்டை மண்டபத்தின் கதவைத் திறந்து கொண்டு உள்ளே பிரவேசித்தாள்.

அவளுடைய தைரியத்தை வந்தியத் தேவன் வியந்தான். அதே சமயத்தில் மணிமேகலைக்கு ஆபத்து ஒன்றும் நேருவதற்கில்லை என்று மனத்தைத் திடப்படுத்திக் கொண்டான்.

இதற்குள் அந்த அறையின் இன்னொரு பக்கத்திலிருந்து ஒரு கதவு திறந்தது. "அம்மா! அம்மா!" என்று கூவிக்கொண்டே சந்திரமதி உள்ளே வந்தாள்.

வந்தியத் தேவன் திடுக்கிட்டான். அவள் தன்னைப் பார்த்து விடாமலிருப்பதற்காக இசைக் கருவிக் களஞ்சியத்துக்குள் நுழைந்தான்.

"அம்மா! அம்மா! தஞ்சாவூர்க்காரர்கள் கோட்டை வாசலில் வந்து விட்டார்களாம். மகாராணி உடனே தங்களை அழைத்து வரச் சொன்னார்கள்!" என்று கத்திக் கொண்டே சுற்று முற்றும் பார்த்தாள். அவள் எதிரில் திறந்திருந்த வேட்டை மண்டபக் கதவை நோக்கிப் போனாள்.

கதவின் அருகில் நின்று பார்த்தால் வந்தியத் தேவன் களஞ்சியத்துக்குள் இருப்பது தெரிந்து போய்விடும். ஆகையால் அவன் விரைவாகச் சில படிகள் மேலே ஏறினான்.

ஒரு வீணையின்மீது அவன் முழங்கால் இடித்து அது சப்தித்தது.

வந்தியத் தேவன் பீதி அடைந்து மேலும் சில படிகள் ஏறினான். அவன் தலை களஞ்சியத்தின் மேற்பலகையில் முட்டியது. என்ன விந்தை? அந்த மேற்பலகை வந்தியத் தேவனுடைய மண்டை முட்டியபோது சிறிது மேலே சென்றது.

ஏதோ சந்தேகம் தோன்றி வந்தியத் தேவன் அப்பலகையைக் கைகளினால் தெம்பித் தூக்கினான். அது நன்றாய் மேலே போனதுடன், திறந்த இடத்தின் மூலமாக வெளிச்சம் வந்தது. தூரத்தில் சலசலவென்று சத்தம் கேட்டுக் கொண்டிருந்தது. ஒரு பக்கத்தில் வானத்தில் மின்னும் நட்சத்திரங்களும் தெரிந்தன. வந்தியத் தேவனுடைய உள்ளம் உற்சாகத்தினால் துள்ளியது.

பலகையை நன்றாக நகர்த்திவிட்டு மேலே ஏறினான். மாளிகையின் மேல் மச்சில் ஒரு பகுதிக்குத் தான் வந்திருப்பதைக் கண்டான். அதிலும் அந்தப் பகுதி முன்னொரு நாள் அவன் சுகமாகக் காற்று வாங்கிக்கொண்டு படுத்திருந்த பகுதிதான். பெரிய தூண்களின் மறைவில் நின்று சிற்றரசர்களின் கொடிய சதியாலோசனையைப் பற்றித் தெரிந்து கொண்ட அதே இடந்தான்.

பலகையைத் தள்ளி முன்போல் மூடினான். மூடிய பிறகு, கூரையிலிருந்து அப்படி ஒரு வழி இருக்கிறதென்று கண்டு பிடிப்பது சுலபமல்லவென்பதை உணர்ந்தான். அதைப் பற்றி இப்போது யோசிக்கவும் அதிசயப்படவும் அவகாசம் இல்லை. அங்கிருந்து தப்பிச் செல்லும் வழியைப் பார்க்க வேணும்.

இத்தனை நேரமும் தனக்கு உதவி செய்த அதிர்ஷ்ட தேவதை இனியும் உதவி செய்யாமலா இருக்கப் போகிறது?

வந்தியத்தேவன் நாலா புறமும் சுற்றிப் பார்த்தான். எங்கு நோக்கினாலும் கொடிகளும் தோரணங்களும் பறந்து அந்த அரண்மனைப் பிரதேசம் முழுவதும் கண் கொள்ளாக் காட்சியாயிருந்தது. அடாடா! இராஜோபசாரம் என்பது இதுதான் போலும்!

வந்தியத் தேவன் அடிமேல் அடி வைத்து மெள்ள மெள்ள நடந்தான். சுற்று முற்றும் பார்த்துக் கொண்டு நடந்தான். மேல் மச்சில் எங்கும் மனித சஞ்சாரமே இல்லை. அந்த வரையில் நம் அதிர்ஷ்டந்தான். பிறகு கொஞ்சம் விரைவாகவே நடந்தான்.

முன்னொரு தடவை அவன் படுத்திருந்த நிலா மாடத்துக்கு வந்து சேர்ந்தான். அங்கிருந்து பார்த்தபோது அரண்மனையின் வெளிமதிலும், மதிளுக்கும் மாளிகைக்கும் நடுவிலிருந்த முற்றமும், குரவைக் கூத்து நடந்த இடமும், சதியாலோசனை நடந்த இடமும் காணப்பட்டன. ஆனால் அந்த இடங்களிலும் மனிதர்கள் யாரும் காணப் படவில்லை. அதற்குக் காரணம் கண்டு பிடிப்பது

அவ்வளவு கடினமான காரியமாயில்லை. அரண்மனையின் முன் வாசலில் ஒரே அல்லோல கல்லோலமாயிருந்தது. நூற்றுக் கணக்கான தீவர்த்திகள் வெளிச்சம் தந்தன. மேள தாளங்கள் பேரிகை முழக்கங்களுடன் மனிதர்களின் வாழ்த்தொலிகளும் கலந்து பேரொலியாகக் கிளம்பியது. பழுவேட்டரையரின் பரிவாரங்கள் அரண்மனை வாசலை நெருங்கி வந்து விட்டபடியால், அவரை வரவேற்பதற்காக எல்லாரும் அங்கே போயிருக்கிறார்கள். அதனாலே தான் இங்கேயெல்லாம் ஜனசஞ்சாரம் இல்லை. ஆகா! உண்மையில் அதிர்ஷ்ட தேவதை வந்தியத்தேவன் பக்கத்தில் இருந்தாள் என்பதில் சந்தேகமில்லை. தப்பிச் செல்வதற்கு எவ்வளவு அருமையான சந்தர்ப்பம்? அரை நாழிகைக்கு முன்னாலும் இத்தகைய சமயம் கிடைத்திராது: அரை நாழிகை பின்னால் வந்தாலும் இம்மாதிரி வசதி கிட்டியிராது.

சதியாலோசனை நடந்த இடத்துக்குச் சமீபமாக வந்து, வந்தியத்தேவன் இன்னொரு தடவை சுற்று முற்றும் பார்த்தான்; ஒருவருமில்லை. கீழே குனிந்து பார்த்தான்; அங்கேயும் யாரும் இல்லை. எதிரில் மதிள்சுவரைப் பார்த்தான். அங்கேயும் யாரும்...ஆ! இது என்ன? மதிள் மேல், கிளைகளுக்கு நடுவில் ஒரு முகம்! ஆழ்வார்க்கடியானுடைய முகம் போல் தெரிகிறதே!... சீச்சீ! வீண் பிரமை! முன்னொரு தடவை ஆழ்வார்க்கடியானுடைய முகம் போல் தெரிந்த இடம் அது! ஆகையால் அவன் மனம் அவனை அப்படி ஏமாற்றி விட்டது! அதுவும் ஒரு நல்லதற்குத்தான். மதிள் மேல் ஏறிக் குதித்துத் தாண்டுவதற்கு அதுதான் சரியான இடம். அதை அவனுடைய உள் மனம் சுட்டிக் காட்டி ஞாபகப் படுத்தியிருக்கிறது. வரவேற்பு முடிந்து வாசலில் நிற்கும் கூட்டம் உள்ளே வருவதற்குள் அவன் தப்பித்துச் செல்ல வேண்டும். முற்றத்தில் எப்படி இறங்குவது?...ஆ! இதோ ஒரு வழி! இங்கே முற்றத்தில் ஒரு கொட்டகை போட்டிருக்கிறது. குரவைக் கூத்துக்காகப் போட்டிருக்கும் கொட்டகை போலும். கொட்டகைக்காகப் புதைத்திருந்த மூங்கில் மரம் ஒன்று நெடிதுயர்ந்து மேல் மச்சு வரையில் வந்திருந்தது. வந்தியத்தேவன் அதைத் தாவிப் பிடித்துக் கொண்டு சரசரவென்று கீழே இறங்கினான். மீண்டும் சுற்று முற்றும் பார்த்தான். ஒருவரும் இல்லை.

மச்சின் மேலே, தான் சற்று முன் நின்ற இடத்தில் கிண் கிணிச் சத்தம் கேட்டது. ஆகா! மணிமேகலை தன்னைத் தேடி வந்தாள் போலும்! பொல்லாத பெண்! இச்சமயம் அவளிடம் அகப்பட்டுக் கொண்டால் நம் பாடு தீர்ந்தது.

முற்றத்தில் திறந்த வெளியை ஒரே ஓட்டமாக ஓடி வந்தியத்தேவன் கடந்தான். மதில் சுவர் ஓரமாக நின்று திரும்பிப் பார்த்தான். மச்சின் மீது ஒரு பெண் உருவம் தெரிந்தது. மணிமேகலையோ, சந்திரமதியோ தெரியவில்லை. யாராயிருந்தாலும் தான் முற்றத்தை ஓடிக் கடந்ததைப் பார்த்திருக்க வேண்டும். நல்ல வேளையாகக் கூச்சல் போடவில்லை. அவள் யாராயிருந்தாலும் நன்றாயிருக்கட்டும்! மகராஜியாயிருக்கட்டும்!

இவ்விதம் மனதிற்குள் வாழ்த்திக் கொண்டே மதில் சுவர் ஓரமாக வந்தியத்தேவன் விரைந்து நடந்தான். மதில் மேல் ஆழ்வார்க்கடியானுடைய முகம் தெரிந்த இடம் வந்து விட்டது. அங்கே சுவரில் ஏறுவது எப்படி? இவ்வளவு உயரமாயிருக்கிறதே! சுவரில் பிடித்துக் கொள்வதற்கு மேடு பள்ளம் ஒன்றுமே யில்லையே? கடவுளே!......இதோ ஒரு உபாயம்! குரவைக் கூத்துக் கொட்டகைக்காகக் கொணர்ந்த மூங்கிற் கழிகள் சில சற்றுத் தூரத்தில் கிடந்தன. அவை மிஞ்சிப் போனவை போலும்! ஒரே பாய்ச்சலாகப் பாய்ந்து அந்தக் கழிகளில் ஒன்றை எடுத்து வந்தான். மதிலின் பேரில் சாய்த்து வைத்தான். கழியின் உயரத்துக்கும் மதிலின் உயரத்துக்கும் சரியாக இருந்தது. ஆனால் கழி சுவரில் நிலைத்து நிற்க வேண்டுமே? ஏறும் போது நழுவி விட்டால்?—நழுவி விட்டால் கீழே விழவேண்டியதுதான்! அதற்காகக் கையைக் கட்டிக்கொண்டு சும்மா இருந்து என்ன பயன்?

கழியை இரண்டொரு தடவை அழுக்கிப் பார்த்து விட்டு, அதன் வழியாக ஏறத் தொடங்கினான். பாதிச் சுவர் ஏறியபோது கழி நழுவத் தொடங்கியது. 'தொலைந்தோம்! கீழே விழுந்தால் எலும்பு நொறுங்கி விடும்!' என்று எண்ணுவதற்குள், கழி மறுபடியும் உறுதியாக நின்றது. மேலேயிருந்து ஒரு கரம் அதைப் பிடித்துக் கொண்டது போல் தோன்றியது! 'நமக்குப் பைத்தியம் பிடிப்பதுதான் பாக்கி!' என்று எண்ணிக் கொண்டு வந்தியத்தேவன் மேலே ஏறினான். மதில் சுவரின் மேல் முனையை அவன் பிடித்துக் கொண்டதும் கழி நழுவிக் கீழே விழுந்தது! அது விழுந்த சத்தம் இடி முழக்கம் போல் அவன் காதில் விழுந்தது. நல்ல வேளை! கோட்டை வாசலில் ஆரவாரம் இப்போது இன்னும் அதிகமாயிருக்கிறது ஆகையால் யார் காதிலும் விழுந்திராது! ஆனால், எதிரே அந்தப்புர மேல் மாடத்தில் நின்ற பெண்! அவள் காதில் விழுந்திருக்கும்!

மதில்மேல் தாவி ஏறி நின்றபடி மறுபடி ஒரு தடவை வந்தியத்தேவன் அந்தப் பக்கம் திரும்பிப் பார்த்தான். இன்னமும் அப் பெண் அங்கேயே நின்று கொண்டிருந்தாள்!

வந்தியத்தேவனுடைய குறும்புக் குணம் அவனை விட்டுப் போகவில்லை! 'போய் வருகிறேன்!' என்று சொல்கிற பாவனையாகக் கையை ஆட்டி விட்டு, மதிலின் அப்புறத்தில் இறங்கத் தொடங்கினான். இறங்குவதில் அவ்வளவு கஷ்டம் இல்லை. ஏனெனில், மதில் சுவரின் வெளிப்புறம் உட்புறத்தைப் போல் மட்டமாக இல்லை; சில மேடு பள்ளங்கள் இருந்தன. பக்கத்திலிருந்த மரங்களின் கிளைகள் சில சுவரின் மீது மோதி உராய்ந்து கொண்டிருந்தன. அவற்றின் உதவி கொண்டு சரசரவென்று கீழே இறங்கினான். மணிமேகலையைத் தான் ஏமாற்றி விட்டு வந்தது பற்றி நினைத்தபோது அவனுக்குச் சிரிப்பு வந்தது. அந்தச் சிரிப்பின் எதிரொலியைப் போல் இன்னொரு சிரிப்பு எங்கிருந்தோ வந்தது. வந்தியத்தேவனுடைய இரத்தம் அவனுடைய உடம்பில் உறைந்து போயிற்று. கைகள் நடுங்கின. கீழே குதிப்பதற்காகப் பார்த்தான். நாய் ஒன்று அங்கே அவன் மீது பாயக் காத்துக் கொண்டிருப்பதைக் கண்டான். மேலே ஏறுவதைப் பற்றி இனி யோசிப்பதற்கே இல்லை! கீழே குதித்துத் தான் ஆகவேண்டும். குதித்தால், இந்த நாயின் வாயில் ஒரு பிடி சதையையாவது கொடுத்துத் தீரவேண்டும்! சற்று முன் கேட்டது சிரிப்புச் சத்தமா? அல்லது நாய் குரைத்த சத்தமா? பக்கத்தில் யாராவது மறைந்து நின்று நாயை ஏவி விட்டிருக்கிறார்களா?...மேலே ஏறுவதில் அபாயம் அதிகமா? கீழே குதிப்பதில் அபாயம் அதிகமா? வந்தியத்தேவனுடைய உள்ளம் ஊசலாடியது! அவனுடைய கால்களும், எழும்பி எழும்பிக் குதித்த நாயின் வாயில் அகப்படாமல் இருப்பதற்காக ஊசலாடின! (தொடரும்)


தீபாவளியன்று
வெளிவருகிறது
மாப்பிள்ளை
டைரக்ஷன்: டி. ஆர். ரகுநாத்
கதை, வசனம்: வி. என். சம்பந்தம்
பாடல்கள்: டி. என். ராமையாதாஸ்
சங்கீதம்: என். எஸ். பாலகிருஷ்ணன்
& டி. ஆர். பாப்பா
ஸ்டுடியோ: நியூடோன்
G.H.RAO
நேஷனல் புரொடக்ஷன்ஸ் அளிப்பு

# கண்ணீர் வென்றது!

"சசிதேவி"

சூரியன் அஸ்தமிக்கும் வேளை. மேற்கே தொலைவில் வானமும், பூமியும் ஒன்றை ஒன்று ஆனந்தத்துடன் தழுவப் பிரயத்தனம் செய்து கொண்டிருந்தன.

சிந்து நதிக்கரையின் இரு புறங்களிலும் போர் வீரர்களின் உயிரற்ற உடல்கள் சிதைந்திருந்தன. கத்திகளின் கண கண சப்தமும் பேரிகைகளின் கட கட சப்தமும் இன்னும் மலைப்படிவாரங்களில் எதிரொலித்த வண்ணம் இருந்தன.

பாரத சக்ரவர்த்தி ஜஹாங்கிருடைய பாசறைக்கு வெளியே நடந்த யுத்தத்தின் கோரத்தைச் சற்றும் அறியாதவனான அந்த பாதுஷாவின் உலகமே தனியானது! ஆதி முதற்கொண்டே தைரியமற்றவனான அவனை ஸாராபானமும் சௌந்தர்ய மோகமும் சேர்ந்து சௌரியமற்றவனாக்கி விட்டிருந்தது. அவனை ஆட்டுவித்த நூர்ஜஹானின் மேற்பார்வையில் யுத்தம் நடந்ததால் இவன் கவலையற்று நிம்மதியாக இருந்தான்!

வாசலில் குதிரையின் காலடி சப்தம் கேட்டது. வாசல் காப்போன் வந்து வணங்கி, "மகாபத்கான் வந்திருக்கிறார்! ஸம்ராட்டைப் பார்க்க வேண்டுமாம்" என்றான்.

"வரச்சொல்" என்று ஒரே வார்த்தையில் பதில் கொடுத்தான் தூங்கி விழுந்து கொண்டே. சற்று நேரத்துக்கெல்லாம் ஜஹாங்கீரின் மயக்கத்தை "ஸலாம்! ஆலேகும்! ஸம்ராட்!" என்னும் கம்பீரத்வனி கலைத்தது. விழித்துப் பார்த்தான் பாதுஷா. எதிரே ஆஜானுபாகுவான ராஜபுத்ர சேனாபதி மகாபத்கானின் நெடிய உருவம் நின்றது! வீரமும் கோபமும் கலந்து ஜ்வலிக்க அலட்சியமாகத் தன் கைகள் இரண்டையும் சேர்த்து மார்பின்மேல் கட்டிக் கொண்டிருந்தான். போர்க் கடவுளான கார்த்திகேயனைப் போன்றிருந்தான்! போரில் வெற்றி பெற்ற களைப்பும் சோர்வும் அவனுக்கு அலாதியான ஒரு களையை ஏற்படுத்தியிருந்தது. அவனைப் பார்த்த ஜஹாங்கீர் வியப்பு மேலிட்டவனாய், "என்ன மகாபத்! இந்த வேளையில்! அதுவும் இந்த வேஷத்தில்! என்னை நீ பார்க்க வேண்டியதின் அவசியம்! இந்த யுத்தத்திற்குக் காரணம் என்ன!" என்று கேட்டான்.

அவனை நோக்கிய மகாபத்கான், பொங்கி வந்த தன் கோபத்தை அடக்கியவனாய் "ஜஹாம்பனாஹ்! தங்களுடைய அரசாட்சியில் நடக்கும் அக்கிரமங்களையும், அவைகளின் காரணங்களையும் அவைகளை நடத்தும் குற்றவாளிக்குத் தண்டனை யளிக்கவும், தங்களை நேரில் சந்தித்து நியாயம் கேட்கவும் மும்முறை வந்தேன்! மும்முறையும் தங்களைப் பார்க்க அனுமதிக்கப்படவில்லை! தங்களை நேரில் சந்திக்க யுத்தமே ஏற்றது என்று நினைத்தேன்! அதிலும் ஏமாற்றமடைந்தேன்! தங்களுடைய வீரர்களெல்லாம் புறம் காட்டி ஓடிவிட்டார்கள் ஸம்ராட்! தாங்கள் இப்பொழுது என்னுடைய மேன்மை தங்கிய கைதி"

அவனுடைய குரலில் இருந்த எக்காளத்வனி ஜஹாங்கீரை நடுங்க வைத்தது. தன்னுடைய மெய் காப்பாளர்கள் ஒருவரும் அங்கு இல்லை என்பதை அப்பொழுதே கவனித்தான்! அநேகம் ராஜபுத்ரவீரர்களின் நடுவில் அவர்கள் சிறைப்பட்டிருப்பதைக் கண்டான். அவனுடைய ஸர்வாங்கமும் ஒடுங்கிவிட்டது. பரிதாபமாகத் தன்னுடைய பழைய சேனாதிபதியைப் பார்த்தான். உடனே மகாபத்கான், "பயப்படவேண்டாம், பாதுஷா! நான் தங்களை ஒன்றும் செய்துவிட மாட்டேன்! தங்களுடைய சேனாபதியும், வீரர்களும் நதிக்கு அக்கரையில் இருக்கிறார்கள். நடுவில் இருந்த பாலத்தை இப்பொழுதுதான் என் வீரர்கள் உடைத்து விட்டார்கள்! சிந்துவின் பிரவாகம் பயங்கரமாய் ஓடுகிறது! அவர்கள் ஒருவரும் இங்கு வரமுடியாது!" என்றான்.

இந்த வார்த்தைகளைக் கேட்டதும் ஜஹாங்கீருக்குக் கதி கலங்கிவிட்டது! கொஞ்சம் சமாளித்துக் கொண்டு மகாபத்கானைப் பார்த்து, "போகட்டும்; உன் பிழைகளை மன்னித்து விட்டேன்! உன் சேனைகளை அழைத்துக் கொண்டு திரும்பிப் போய்விடு" என்றான்.

உடனே மகாபத்கான் பரிகாசமாக "ஹா...... ஹா...தங்களுடைய உதாரகுணத்துக்கு வந்தனம்! என்ன தாராளம்! பாதுஷா! தாங்கள் எனக்குச் செய்த அவமானத்துக்குப் பழி வாங்காமல் என்னுடைய வீரர்களை நான் போகச் சொன்னாலும் போகமாட்டார்களே!" என்று கூறி நகைத்தான்.

ஜஹாங்கீர் "நீ பேசுவது ஒன்றும் புரியவில்லையே, மகாபத்! உனக்கு ஏதாவது ஜாகீர் வேண்டுமானாலும் கேள், கொடுக்கிறேன்!" என்றான்.

"போதும்! உம்முடைய தானம்! அவையெல்லாம் எனக்கு வேண்டாம்! நான் சொல்வதைத் தாங்கள் கேட்கவேண்டும்! அவ்வளவுதான்! என்ன! சம்மதமா!" என்று கேட்டான் மகாபத்.

ஜஹாங்கீர் "பாரத தேசத்தின் சக்கரவர்த்தியாகிய என்னை நீ இவ்விதம் அதிகாரம் செய்ய நான் என்ன உன் அடிமையா!" என்றான்.

"அடாடா......அபசாரம்! அப்படிச் சொல்லக்கூடாது......ஜஹாம்பனாஹ்! ஸம்ராட் அக்பரின் புதல்வராகிய தங்களை அடிமைப்படுத்த என்னால் முடியுமா! தங்கள் முன்னோர்களின் புகழை நான் அறியாதவனா! ஆயினும், ஸம்ராட்! தாங்கள் ஒன்றை யோசித்துப் பார்க்க வேண்டும். எங்கிருந்தோ வந்த முகமறியா முகலாயர்களாகிய உங்களுக்குத் தங்க இடம் கொடுத்த எங்கள் தாய்நாட்டை அபகரித்தது மில்லாமல், எங்களையே அடக்கி, எவ்வளவோ கொடுமை செய்தீர்கள்! இந்துக்களின் பொறுமைக்கும் ஒரு எல்லை உண்டு. ஸம்ராட்! அக்பரின் ஔதார்ய குணத்தினால் சற்று மறைந்திருந்த ஆவேசம், ஒரு பெண்மணியின் சாகஸத்துக்கு அடிமைப் பட்டிருக்கும் தங்களுடைய ஆட்சியில் மறுபடியும் ஜனித்து விட்டது! இந்துக்களின் கோபம் பொல்லாதது. அவர்கள் சாமர்த்தியம் அளவிடற்கரியது. தேசபக்தி என்னும் பைத்தியம் மட்டும் அவர்களுக்குப் பிடித்து விட்டாலோ, அவ்வளவுதான்! அது கடவுள் பக்தியைவிட காதலைவிட உறுதி கொண்டது. இன்று கொதித்து எழுந்துள்ள இவர்கள் எதைச் செய்யவும் பின்வாங்க

மாட்டார்கள்! ஜாக்கிரதை! இப்பொழுது என்ன சொல்லுகிறீர்கள்!'' என்று கேட்டான் மகாபத்கான். அவனுடைய கோபம் உச்ச நிலையை யடைந்தது. வெறியூட்டப்பட்ட அந்த ஆண் சிங்கத்தின் எதிரில் நரியைப் போன்று தோன்றினான் பாதுஷா! அவனால் நிற்கவும் முடியாமல் கண்களில் நீர் துளிக்கச் சாய்ந்து விட்டான். மகாபத்கானின் மனம் சற்று இளகிற்று. அதைக் காட்டிக் கொள்ளாமல், ''ஜஹாம்பனாஹ்! தங்களிடம் பிரஜை என்னும் முறையில் ஒரு வேண்டுகோள். இதில் உள்ள குற்றங்களுக்காக, குற்றவாளியைப் பாரபட்சமின்றித் தண்டிப்பதாக உத்தரவாதம் கொடுக்க வேண்டும்!'' என்றான்.

ஜஹாங்கீருக்குக் கொஞ்சம் சந்தேகம் தட்டிற்று. ''யார் குற்றவாளி! என்ன குற்றம்! விவரமாகச் சொல்லு'' என்றான்.

மகாபத்கான் கனைத்துக் கொண்டு ''குற்றவாளியின் அந்தஸ்தோ, அன்றி வாசமோ இதில் குறுக்கிடாதென்று நம்புகின்றேன். கடுமையான தண்டனை கொடுப்பதில் தாங்கள் பின்வாங்க மாட்டீர்களே!'' என்று உறுதிமொழி கேட்டான்.

இந்த வார்த்தைகளைக் கேட்டதும் குழப்பமடைந்தான் ஜஹாங்கீர். இது என்ன விதமான சூழ்ச்சிக்கு ஆரம்பமோ! என்ன குற்றமோ! யார் குற்றவாளியோ! பழைய விஷயங்கள் மறுபடி மனதில் நிரை விட்டன. அப்படியானால் யார் குற்றவாளி! யார்! அல்லா! அப்படியும் இருக்குமா! இருக்கக் கூடாது! கூடாது!......இருந்தால்!...பல பல எண்ணிற்று ஜஹாங்கீரின் மனம்.

''உன் இஷ்டப்படியே, ஆகட்டும்'' என்றது அவன் வாய்.

மனமோ எரிமலையாய்க் கனன்றது. சத்தியத்தின் சொரூபத்தை எண்ணி மனம் நடுங்கிற்று.



''பாரத ஸாம்ராக்ஞி நூர்ஜஹான்தான் குற்றவாளி ஸம்ராட்!'' என்ற மகபத்கானின் குரல் அவனுடைய கனவைக் கலைத்தது.

''மகாபத்! உன் பேச்சின் அர்த்தம் உனக்கு விளங்குகிறதா!'' என்று கோபமாகக் கேட்டான்.

''ஹா - ஹா - நன்றாக விளங்குகிறதே! ஏன்! தங்களுக்கு விளங்கவில்லை போலும்! இன்னொரு முறை சொல்லவா!''

''வேண்டாம்! மகாபத்கான்! வேண்டாம்!! உன்னுடைய மொழிகள் என் செவியைச் சுடுகின்றன! நாராசமான இம்மொழிகளின் வேகம் என்னை என்னவோ செய்கின்றது. ஆனால்...... ஆனால்...மகாபத்! இதை என்றாவது ஒருநாள் ஏற்படும் என்று எதிர்பார்த்தேன். ஆயினும் அவளுடைய குற்றம் இவ்வளவு மகத்தானதா மகாபத்!''

''ஸம்ராட்! இது என்ன கேள்வி! இதனைத் தங்களையே கேட்டுக் கொள்ளலாமே! அடிமைப்பட்டுள்ள தங்களுடைய மனச்சாட்சியைக் கேட்கலாமே! ஆனால் தங்களுக்கு ஏது மனச்சாட்சி! அதுதான் என்றோ இறந்து விட்டதே! இல்லாவிடில் இவ்வித அக்கிரமங்கள்......நடக்குமா!...... வெட்டிப் பேச்சு ஏன்! ஸம்ராட்! இதோ எண்ணிக் கொள்ளுங்கள், முதலாவது தங்களுடைய பட்ட மகிஷி ராணி ரேவாதேவியுடைய மகன் குஸ்ருவை மகா பாதகனான பக்கர் ராஜின் உதவியைக் கொண்டு உம்முடைய நூர்ஜஹான் கொன்றாளே! அது உமக்குத் தெரியாதா! மறந்து விட்டதா!

''இரண்டாவது குற்றம்: தன் அருமை மகனை இழந்த ரேவா தேவி அதே ஏக்கத்தால் தன் உயிரை மாய்த்துக் கொண்டாள். அதற்கு யார் பொறுப்பாளி! அதுவும் தெரியாதா ஸம்ராட்!''

''போதும் நிறுத்து. மகாபத்! என்னால் தாங்க முடியவில்லை!''

ஜஹாங்கீரின் கண்கள் கலங்கின. உதடுகள் துடித்தன. மேற்கொண்டு கேட்கச் சகிக்காதவனாகத் தன் காதுகளைப் பொத்திக் கொண்டான்.

''இது போதுமா! போதாது. பாதுஷா! இந்த உணர்ச்சிகள் இத்தனை நாள் எங்கு போயிருந்தன! காலம் கடந்த பின் செய்யும் - எந்த விஷயங்களுக்குமே மதிப்புக் கிடையாது. இன்னும் மிச்சமுள்ளவற்றையும் கேட்டுக் குற்றவாளியைத் தண்டியுங்கள்! மூன்றாவது, அநேக கெட்ட எண்ணங்களையும், பேராசையையும் மனத்தில் கொண்டு தங்களுடைய மற்றொரு மைந்தன் நிரபராதியான குர்ரம்தான் தன்னுடைய சகோதரனைக் கொன்றான் என்று வீண் பழி சுமத்தி அவனை 'தேசத்துரோகி' என்னும் பட்டத்துடன் நாடு கடத்தவில்லையா! அது செய்தது யார்! இதுவும் தெரியாதா!''

''முடியாது! மகாபத்கான்! இனி முடியாது! உன்னுடைய பழியை இவ்வளவு குரூரமான முறையிலா தீர்த்துக் கொள்ள வேண்டும்!''

''இன்னும் கேளுங்கள்! ஸம்ராட்! மனத்தைத் தளரவிட வேண்டாம்!''

சிந்து நதியின் ஓசை பயங்கரமாகக் காதைத் துளைத்தது! கூடாரத்தில் இருக்கு வழியாக பிறைச் சந்திரன் போவாய சாம்ராஜ்யத்தின் மர்மங்களை அறிய ஆவலுடன் எட்டி எட்டிப் பார்த்தான்.

''இதோ சந்திரோதயம் ஆகிவிட்டது! சந்திராஸ்தமனத்திற்குள் என் வேலைகள் முடிய

வேண்டும் கேளுங்கள்! இனிமேல்தான் பழி தீர்த்துக் கொள்ளும் படலத்தைத் துவக்கப் போகிறேன் ஸம்ராட்!

"தன்னுடைய அபார சாமர்த்தியத்தால், தன் மனோபீஷ்டப்படியே — மூன் கூட்டியே — தான் நடத்தும் ஒவ்வொரு வேலைக்கும் தங்களுடைய பெயரை உபயோகித்து, தானே ராஜாங்க வேலைகளை யெல்லாம் நடத்தி, உங்களை ஒன்றும் செய்ய முடியாத நிலைமையில் வைத்து, வேடிக்கைப் பார்த்துக் கொண்டிருப்பது குற்றமாக உங்களுக்குப் படவில்லையா! இந்தக் குற்றங்களுக் கெல்லாம் தாங்களும் தாங்கள் அறியாமலேயே உடந்தையாக்கப் பட்டிருப்பது இப்பொழுதாவது தங்களுக்கு விளங்குகிறதா!"

தன்னைத் தேற்றிச் சமாளித்துக் கொண்டு ஜஹாங்கீர், "மகாபத்! இவைகளை யெல்லாம் நூர்ஜஹான் செய்தாளென்று நீ சொல்லுகிறாய்! அப்படியே அவள் செய்திருந்தாலும், அவளை நான் தண்டிக்க வேண்டுமா!" என்றான்.

மகாபத், "ஏன், சந்தேகமாகவா இருக்கிறது! தங்களைத் தவிர வேறு சாட்சியும் வேண்டுமா! தங்களுக்குத் தெரியாதா! தண்டிக்க வேண்டுமா என்று கேட்கிறீர்! ஆம்; ஸம்ராட்! கண்டிப்பாக இந்தக் குற்றவாளி தண்டிக்கப்பட வேண்டும். அதுவும் இப்பொழுதே, தங்களுடைய கரத்தாலேயே உத்தரவு எழுதப்பட வேண்டும். சீக்கிரம் ஆகட்டும்! தாமதம் வேண்டாம்! ஜஹாம்பனாஹ்."

"மகாபத்!......"

மகாபத், "இல்லை! அதெல்லாம் இல்லை! தர்மத்தின் பெயரால், சத்தியத்தை நிலைநாட்ட, நீங்கள் இதை நிறைவேற்றியே தீரவேண்டும்! நான் முன்பே தங்களைக் கேட்டுக் கொள்ள வில்லையா!" என்றான்.

"உன் இஷ்டத்தைச் சொல்."

"இதில் கையெழுத்திடுங்கள் ஸம்ராட்!"

ஆக்ஞாபத்திரத்தில் கையெழுத்திட்டு நடுங்கும் கைகளால் மகாபத்கானிடம் கொடுத்தான் அதை ஜஹாங்கீர்.

"விஜயஸிங்" என்று கூப்பிட்டான் மகாபத்.

உடனே ஓடி வந்து வணங்கி நின்ற அந்தத் தளபதியிடம் தன் கையிலிருக்கும் பத்திரத்தைக் கொடுத்து, "உடனே பேகம் நூர்ஜஹானின் கூடாரத்திற்குச் செல். வெளியில் காவல் காக்கும் நம்முடைய ஆட்களிடம் இதைக் காட்டிவிட்டு உள்ளே சென்று பேகம் நூர்ஜஹானுக்கு இதைத் தெரிவித்து, இதிலுள்ள கட்டளையை உடனே நீயே நிறைவேற்றி விடு" என்று கூறினான் மகாபத்கான். விஜயஸிங் ஒரு கணம் தயங்கினான். அடுத்த கணம் அது தன் தலைவனின் கட்டளை என்ற நினைவு வந்ததும் அவ்விடத்தை விட்டு அகன்றான். விஜயஸிங் போகும் குதிரையின் சப்தம் கேட்டது.

ஜஹாங்கீர் "உனக்கு திருப்தி தானே மகாபத்" என்று கேட்டான்.

மகாபத் "ஜஹாம் பனாஹ்! இது எனக்கு மட்டும் திருப்தியளிக்கும் விஷயமல்ல. இந்தப் பாரத மக்களுக்கே — ஏன், கடவுளுக்குக்கூட திருப்தியளிக்கும் விஷயம், ஸம்ராட்!"

கூடாரத்தின் வெளியே சப்தம் கேட்டது. அடுத்த கணமே விஜயஸிங்கின் பின்னால் ஆகாயத்துச் சந்திரனே உள்ளே வந்திருப்பது போன்று நூர்ஜஹான் வந்து நின்றாள். அந்த மோகனப் பொழுதினிலே அண்ட சராசரங்களின் அழகெல்லாம் ஒரு உருக் கொண்டது போன்று வந்து நின்றாள். கால் வரையில் தொங்கிய அவளது அழகிய கருங்கூந்தல் அவிழ்ந்து கிடந்தது! மெல்ல அசைந்து தன் நிகரற்ற அழகிய நடை நடந்து ஜஹாங்கீரை அடைந்து குனிந்து அவனுக்குச் சலாம் செய்தாள். அவளுடைய மக்மல் அங்கி அவன்மேல் பட்டு அவனைப் புளகாங்கிதமடையச் செய்தது. அந்த அமுத வினாடியில், சுகமான சூழ்நிலையில், தன்னையே மறந்தான் ஜஹாங்கீர்! தன் நிலையை மறந்தான்! தான் கொடுத்த தண்டனையையும் மறந்தான்! ஏன்! எதிரில் நிற்கும் மகாபத்கானையே அடியோடு மறந்து விட்டான்!

"ஜஹாம்பனாஹ்! தங்களுடைய கட்டளையைப் பார்த்தேன். ஆனால் அது தங்களுடைய கையெழுத்துதானா! தாங்கள் மனமுவந்து அடிமைக்கு அளித்த தண்டனைதானா! இவைகளைச் சந்தேகமின்றித் தெரிந்து கொண்டும், நான் சாவதன் முன் என் ஹிருதயேசுவரனை ஒரு முறை பார்த்து விட்டுப் போகவும் வேண்டியே இப்பொழுது இங்கு வந்தேன்! இதில் உனக்கு ஒன்றும் ஆக்ஷேபனை இல்லையே, மகாபத்கான்!" என்றாள்.

மின்னலை காதம் போன்ற அவளுடைய மென் குரலின் இன்னொலி ஜஹாங்கீரைக் கிறுகிறுக்க வைத்தது. தலை குனிந்து மௌனமாக நின்றான்.

"இனிமேல் சந்தேகமில்லை! இதில் ஏதாவது சூது இருக்குமோ என்று சந்தேகித்தேன்! ஸம்ராட்டின் மௌனம் இதனை சத்யமென்றே சாதிக்கின்றது. ஜஹாம்பனாஹ்! நான் இறக்கத் துணிக்





நண்பர் :—எங்கே ஸார், உங்களைக் காணோமே, இல்லை ! இரண்டு வாரங்களுக்கு முன்னால் இங்கே வந்து டிபன் சாப்பிட்டு விட்டுப் போனதுதான் நீங்கள் ! அப்புறம் உங்களைக் கண்ணிலேயே காணோம்.

மற்றவர் :—அப்புறம் நான் டாக்டர் சர்மாவினிடம் போகும்படியாகி விட்டது. இரண்டு வாரம் தங்கி யிருந்தேன் !

நண்பர் (கவலையுடன்):—அடாடா, ஏன் ஸார் ?

மற்றவர் :—அவர் பெண்ணுக்குக் கல்யாணமோ இல்லையோ ! ரொம்ப தூரம் வற்புறுத்தி அழைத்திருந்தார் என்னை. அதனாலே போய்க் கடைசி வரையில் தங்கும்படியாகி விட்டது !

தவன். அதற்காக நான் வருத்தப்படவோ, பயப்படவோ மாட்டேன். ஏன் பேசாமல் இருக்கிறீர்கள் பிரபு !'' என்று ஜஹாங்கீரைப் பார்த்துக் கேட்டாள்.

அவளுடைய முகத்தைப் பார்க்கத் தைரியமில்லாமல் ஜஹாங்கீர், "நூர் ! பிரியே ! இந்தத் தண்டனையை நான் என் முழு மனதுடன் உனக்கு விதித்திருப்பேன் என்று நீ நம்புகின்றாயா? இவைகளெல்லாம் மகாபத்கானின் இஷ்டப்படியே நடத்தப் பட்டுள்ளன ! நீ என்ன ஆயிர மாயிரம் பிழைகள் செய்திருந்த போதிலும்கூட நீதான் என் உயிர், என் உலகம் என்பது உனக்குத் தெரியாதா ! என்னைப் பொறுத்தமட்டில் என்றாவது நான் உன்னைக் கடிந்ததுண்டா ! அப்படிப்பட்ட நானா உனக்கு மரண தண்டனை விதிப்பேன் !''

அவளுடைய கரங்களை மெதுவாகப் பற்றி அணைத்துக் கொண்டான். தினமும் தான் உபாசிக்கும் சௌந்தர்ய தேவதையின் முன் தன்னுடைய கடமையை மறந்து விட்டான். அவனுடைய செயலற்ற நிலைமையை அறிந்து நூர்ஜஹான் மெதுவாகத் தன் வேலையை ஆரம்பித்து, கோபம் கொண்டவளாக மகாபத்கானை முறைத்துப் பார்த்தாள். அவனும் பதிலுக்கு அவளைப் பார்த்து விழித்தான். அம்மா!......இருவருடைய பார்வைகளிலும்தான் என்ன கோரம் ! ஒன்றை ஒன்று விழுங்கத் தயாராக இருக்கும் இரண்டு புலிகளைப் போன்ற ஆவேசம் ! இரண்டு மாபெரும் சக்திகளான ஆக்கும் சக்தியும், அழிக்கும் சக்தியும் நேருக்கு நேராக சந்தித்தது போன்ற வேகம் !

"மகாபத் !'' என்று கூப்பிட்டாள் பேகம். சற்றுமுன் இருந்த மதுரக் குரலினா இப்பொழுது இத்தனை கடுமை சொட்டுகிறது !

"ஏன் !'' என்று கேட்டுவிட்டு நின்றான் மகாபத்கான்.

"மகாபத் ! இதெல்லாம் உன்னுடைய சூழ்ச்சி தானே !'' என்றாள்.

"இவைகளெல்லாம் சூழ்ச்சியே அல்ல ! பேகம் ஸாஹிபா ! நேர்வழியேதான் !''

"ஆனால் சரியான காவலில்லாத சமயத்தில், ஒருவனைக் கைதுசெய்து அவனைக் கொண்டு, அவனுக்கு மனமின்றியே அவனுடைய மனைவியையே கொல்விக்க உத்திரவிடக் கட்டாயப் படுத்திக் கையெழுத்து வாங்குவது சூழ்ச்சியன்றி வேறென்ன ! மகாபத் ! உன்னுடைய சபதத்தை நீ நிறைவேற்றி விட்டாய் ! என்னை அவமானம் செய்து உன் ஆவலைப் பூர்த்திசெய்து கொண்டு விட்டாய் ! ஆனால் மகாபத்கான் ! நீ வெற்றியடைந்து விட்டதாக எண்ணிக் கர்வமடையாதே ! நீ ஜெயித்துள்ள எதிரி கேவலம் ஒரு பெண், பலமற்றவள் ! பேதை ! இதில் உனக்கு ஒன்றும் பௌருஷமில்லை ! நானே தலைகுனிந்து என் தோல்வியை ஏற்றுக் கொள்ளுகிறேன் ! ஏனெனில் நான் வேறு ஒன்றும் செய்ய முடியாதவள் ! ஆனால் ஒரு வேண்டுகோள். என்னுடைய கடைசி விருப்பத்தையாவது நிறைவேற்றுவாயா !'' என்று கேட்டாள் நூர்ஜஹான்.

"என்னவென்பதைச் சொன்னால் தங்களுடைய கடைசி கோரிக்கைக்குக் கருணை காட்டப்படும்'' என்றான் மகாபத் மிடுக்குடன்.

"சந்தோஷம் ! கடைசியாக நான் வேண்டுவது எனக்கு அளிக்கப் பட்டிருக்கும் தண்டனை, எனக்கு எந்தக் கரங்கள் மாலையிட்டு மகிழ்ந்ததோ, எந்தக் கரங்கள் என்னை அன்புடன் அணைத்ததோ, எந்தக் கரங்கள் எனக்குத் தண்டனையை விதித்ததோ அதே பொற் கரங்களாலேயே நிறைவேற்றப்பட வேண்டும் என்பதே. என் அந்தமான அன்புக்கு இணையற்ற காதலுக்குப் பிரதியாக என் கணவர் எனக்களித்த பரிசாக எண்ணி வரவேற்று மகிழ்வேன் ! என் பிராணநாதா ! நான் போகிறேன் ! எங்கே தங்களுடைய கர கமலங்களுக்கு என்னுடைய காணிக்கையை செலுத்துகிறேன் !'' என்று கூறி ஜஹாங்கீரின் கைகளை முத்தமிட்டாள் நூர்ஜஹான். அளவற்ற துக்கத்தை அடக்கிக் கொண்ட ஜஹாங்கீருக்கு இப்பொழுது தாங்க முடியவில்லை.

"இல்லை ! இல்லை ! நூர் ! இப்படிப் போகாதே ! என்னால் தாங்க முடியவில்லை ! என்னை விட்டுப் போகாதே ! என் ஹிருதயேச்வரி.''

"இனி எதுவும் சாத்தியமில்லையே ! பிரபு !''

அவனுடைய மார்பில் தன் முகத்தை புதைத்துக் கொண்டு விம்மினாள் நூர்ஜஹான். "என் அன்பரே, நான் போகிறேன் ! ஆம். கொஞ்சமும் மனமின்றியே போகிறேன். நான் ஏன் போக வேண்டும் ! உலகில் யாராவது சாக விரும்புவார்களா ! நான் மட்டும் ஏன் சாக வேண்டும் ? நோயாளிகளும்கூட நோயுடன் நூறாண்டு இருக்க விரும்புகின்றனர். வயிற்றுக்கு வகையாக உணவு இல்லாத ஏழையும், பட்டினியாகவேனும் பிழைத்திருக்கவேதான் விரும்புகிறான். வயோதிகனும் மரணத்தைக் கண்டு அஞ்சுகிறான். நான் ஏன் சாக வேண்டும் ! எனக்கு எதில் குறைவு ! நிகரில்லாத அழகை ஆண்டவன் அளித்திருக்கிறான். என்

அழகின் வன்மையால இந்தப் பரத கண்டத்தையே செண்டாக ஆடி விருக்கிறேன். அறிவில் குறைவா! எத்தனையோ கோடி கோடி கனவுகளையும், கற்பனைகளையும் தங்களைக் கொண்டு நினைவாக்கி விருக்கிறேன்; எத்தனையோ சிற்றரசர்களின் மணி முடியிலுள்ள சிரோ ரத்னங்களை யெல்லாம் என் சிலம்பில் அணிந்து மகிழ்ந்திருக்கிறேன்! தேவர்களும் கண்டு பொறாமைக் கொண்டு பொருமக் கூடிய தங்களை என் பதியாக அடைந்திருக்கிறேன். நான் ஏன் சாக வேண்டும்! என் அபிலாஷைகள் இன்னும் பூரணமாக வில்லை! என் ஆவல் இன்னும் அடங்கவில்லை! ஆயினும் நான் விருப்பமின்றியே போகிறேன்! ஸம்ராட் உங்கள் வேலையைச் செய்யுங்கள்! தங்களுடைய உண்மைக் காதலின் ஜோதி என் மரணாந்தகாரத்தில் வெளிச்சம் காட்டட்டும்! என் உயிரே! என்ன யோசனை!" என்று கூறி மாலை மாலையாகக் கண்ணீர் மார்பில் வழிய ஜஹாங்கீரைப் பார்த்தாள் நூர்ஜஹான்.

அவனுடைய ஹிருதயமே வெடித்து விட்டது போலிருந்தது. "என்னால் முடியாது. நூர்! கண்ணே! உன்னை என் கைகளால் கொல்வேனு! என்னால் முடியாது!" என்று அலறினன். மெள்ள மனத்தைத் தேற்றிக்கொண்டு, "மகாபத்! உன்னிடம் ஒரு வேண்டுகோள்!" என்று கேட்டான்.

மகாபத், "ஸம்ராட்! தாங்கள் 'வேண்டுகோள்' என்று சொல்லக்கூடாது! ஆக்ஞை என்று சொல்லுங்கள்!" என்றான். அவனுக்கும் இந்தக் காட்சி மனத்தைக் கலக்கி விட்டது. மகாபத்கானும் மனித உள்ளம் படைத்தவன்தானே!

"மகாபத்! நூர்ஜஹானுக்குப் பிராண பிக்ஷை கொடு! எனக்காகக் கொடு! நீயே பார்! அவள் எப்படி அழுகிறாள் என்று!" என்றான் ஜஹாங்கீர்.

"உங்கள் எண்ணம் நிறைவேறும் ஸம்ராட்" என்று சொல்லி மகாபத்கான் புன்சிரிப்புத் தவழ நூர்ஜஹானைப் பார்த்தான். "உங்களுக்கு விடுதலை யளித்துவிட்டேன், பேகம் ஸாஹிபா! நான் எத்தனையோ போர்க்களங்களைப் பார்த்திருக்கிறேன். எத்தனையோ வீராதி வீரர்களைப் புறமுதுகிட்டு ஓடச் செய்திருக்கிறேன். எத்தனையோ மதோன்மத்தம் பிடித்த மன்னர்களைத் தலை வணங்கச் செய்திருக்கிறேன். இன்றுவரை நான் தோல்வி என்பதையே அறியாதவனாக இருந்தேன். ஜெயிக்க முடியாத இந்த விச்வ விஜயனை மகாபத்கானைத் தங்களுடைய சௌந்தர்யம் ஜெயித்து விட்டது; தங்களது புத்தி கூர்மையும் வாசாலகமும் ஜெயித்து விட்டது; கண்ணீர் ஜெயித்து விட்டது!" என்றான்.



தம்பி :—அண்ணா, குழந்தை ரொம்பக் கனக்கிறது! நீ அதைத் தூக்கிக் கொள். என்னிடம் சர்பத் சீசாவைக் கொடு!

அண்ணன் :—உம்! அதெல்லாம் முடியாது. நீ சீசாவைக் கீழே போட்டு விடுவாய்!

## பரத நாட்டிய அரங்கேற்றம்

பந்தணை நல்லூர் மீனாட்சி சுந்தரம் பிள்ளையைக் கௌரவ ஆசிரியராகக் கொண்ட The Indian Institute of Fine Arts (எழும்பூர்) சென்ற எட்டு ஆண்டுகளாக அரிய கலைத் தொண்டாற்றி வருகிறது.



மேற்படி கழகத்தின் ஆதரவில் சென்ற மாதம் 26உ சென்னை மியூஸியம் தியேட்டரில் சௌபாக்யவதிகள் ஜயா, உமா ஆகிய இரு குழந்தைகளின் நாட்டிய அரங்கேற்றம் சிறப்பாக நடந்தேறியது. இந்த அரங்கேற்ற வைபவத்துக்குத் தலைமை வகித்த "கல்கி" ஆசிரியர் அவர்கள் நாட்டிய மாடிய ஜயாவையும் உமாவையும் பாராட்டி குழந்தைகளை ஆசீர்வதித்தார். இந்தச் சிறுமிகளைப் பிரமாதமாக நாட்டியமாடும்படி தயார் செய்த நாட்டிய கலா விசாரத பந்தணை நல்லூர் ஸ்ரீ சொக்கலிங்கம் பிள்ளையின் திறமையைப் பாராட்டி அவர் மேலும் நாட்டியக் கலைக்குத் தொண்டாற்ற வேண்டும் என்று கேட்டுக் கொண்டார். மேற்படி அரங்கேற்ற விழாவுக்குச் சென்னை நகரிலுள்ள பிரமுகர்களும் கலா ரஸிகர்களும் விஜயம் செய்து சிறப்பித்தனர்.

# போச்சு பூசனிக்காய்!

டி. ஜி. எஸ்.

ஸ்ரீமான் கல்யாண கிருஷ்ணனுக்கு அப் பெயரை விட 'கல்யாண பூசனிக்காய்' என்ற பெயர் பொருத்தமாயிருக்கும் என்பது அவரைத் தெரிந்தவர்கள் எல்லோருடைய அபிப்பிராயம். காரணம், மற்றக் கறிகாய்களைவிட அந்தக் காயை அவர் உயர்வாகக் கருதியது தான். உள்ளூர் மார்க்கெட்டில் அந்தக் காய் கிடைக்கா விட்டால், அது கிடைக்கும் இடத்தைத் தேடிப்போய் அதை வாங்கி வரும் அளவுக்கு அவருடைய பூசனிக்காய்ப் பைத்தியம் முற்றிப் போயிருந்தது!

தாம் குடியிருந்த வீட்டின் புறக்கடையில் அவர் சில கல்யாண பூசனி விதைகளை நட்டு வைத்தார். அவர் நட்ட விதைகளில் ஒன்றே ஒன்றுதான் முளைவிட்டுத் தலை தூக்கிற்று. அது கொடியோட ஆரம்பித்ததும் கல்யாண கிருஷ்ணனுக்கு உள்ளத்தில் குதூகலம் பிறந்தது.

"பார்வதி! பூசனிக் கொடி ஓட ஆரம்பித்து விட்டது. இனி நம் வீட்டில் பூசனிக்காய்க்குக் குறைச்சலே யில்லை" என்று குழந்தையைப் போல் கூவினார் அவர்.

பூசனிக்கொடி பரவ ஆரம்பித்ததும் அவர் தம் இதர அலுவல்களை மறந்தார். அதற்கு வேண்டிய எரு போடுவதும், பூச்சி அரித்த இலைகளைக் கொடியிலிருந்து நோகாமல் கிள்ளி எறிவதும், சாம்பலைச் சன்னமாகப் பொடியாக்கித் தூவுவதுமாகவே அவர் பொழுது கழிந்து வந்தது.

அந்தக் கொடியும் கல்யாண கிருஷ்ணனின் ஆசையைப் போலவே வளர்ந்து ஒரு மொட்டும் விட்டு விட்டது. அப் பூசனி மொட்டைப் பார்த்த அவர் இன்பவெறி அடைந்தார்.

"பார்வதி! பார்வதி! செடி பூக்க ஆரம்பித்து விட்டது. இன்னும் நாலு நாளில் பிஞ்சும், பூவுமாக நிரப்பித் தள்ளி விடும். முதல் பிஞ்சு பெரிதானதும் கடலைப் பருப்பு சேர்த்துக் கூட்டுப் பண்ணிச் சாப்பிட வேண்டும். இனிமேல் பையைத் தூக்கிக் கொண்டு மார்க்கெட் போக வேண்டிய அவசியமே கிடையாது" என்று மனைவியை அழைத்துப் போய்க் காட்டிப் பரவச மடைந்தார்.

இரண்டு நாட்கள் கழித்துப் பூசனிக் கொடியில் ஒரு பிஞ்சும், பூவும் சேர்ந்து காட்சியளித்தன. கல்யாண கிருஷ்ணன் அந் நாளை ஒரு திருநாளாகவே கொண்டாடினார். ஆனால் மறுநாள் காலையே அந்தப் பிஞ்சு வெம்பிப் போயிற்று. அதேபோல புதிதாக வரும் ஒவ்வொரு பூசனிப் பிஞ்சும் வெம்பி, விழுந்து கொண்டிருந்தது.

பல வருடங்கள் தவமிருந்து பெற்ற பிள்ளை தீராத நோய் வாய்ப்பட்டுத் துடிப்பதைக் கண்டு பெற்றோர்கள் படும் வேதனையைவிட அதிகமாய் வேதனைப் பட்டார் கல்யாண கிருஷ்ணன். பூசனிக் கொடிக்குப் பிடித்த வியாதி தன் கணவருக்கும் பிடித்துவிட்டதோ என்று அவர் மனைவி கவலைப்பட்டாள்.

கடைசியில் இயற்கையும் தெய்வமும் அவர் வேதனைக்கு விடுதலை அளிக்கத் தீர்மானித்தன. மற்றவைகளைப் போல் இரண்டு நாட்களில் வெம்பிப் போய் விழாமல் ஒரு பிஞ்சு மட்டும் நாளொரு மேனியும், பொழுதொரு வண்ணமுமாக வளர்ந்தது. அவர் பழையபடி சாப்பிடவும், கல கலப்பாய்ப் பேசவும் ஆரம்பித்தார். பார்வதி மானசீகமாகத் தெய்வத்திற்குத் தன் வணக்கத்தைத் தெரிவித்துக் கொண்டாள்.

அதற்கப்புறம் கல்யாண கிருஷ்ணனுக்கு உலகம் அந்த ஒற்றைப் பூசனிக்காயாய்த் தானிருந்தது. சாப்பிடும் போதும் அதன் நினைவுதான்; தூங்கும் போதும் அதன் நினைவுதான்.

கடைசியில் ஒரு நாள் அவர் தம் மனைவியிடம் "இன்றைக்கு நாலாம் நாள் அமாவாசை. அன்றைக்கு நம் வீட்டுக் காயை உடைத்துச் சமைத்து விடலாம்" என்று சொல்லி விட்டார்.

அமாவாசையன்று காலை மூன்று மணிக்கே அவர் எழுந்து விட்டார். கையில் அரிக்கேன் விளக்கை எடுத்துக் கொண்டு புறக்கடைப் பக்கம் போன அவர் பூசனிக்காய் இருந்த இடத்தைப் பார்த்ததும் திடுக்கிட்டார்.

தாம் இரவு பன்னிரண்டு மணிக்கு வந்து பார்த்தபோது இருந்த காய் அப்போது இல்லாததைப் பார்த்ததும் அவர் உள்ளத்தில் யாரோ வேல்கொண்டு தாக்கியது போலிருந்தது. தாம் அப்படி இராப் பகலாய்க் கண் விழித்து வளர்த்த அந்தக் காய் நிஜமாகவே அவ்விடத்தில் இல்லை என்பதை அவரால் நம்ப முடியவில்லை.

"பார்வதி! போச்சு! போச்சு! குடி முழுகிப் போச்சு! பூசனிக்காயை எந்தக் களவாணிப் பயலோ அடித்துக் கொண்டு போய் விட்டான்" என்று கூவினார். அவரால் அந்த அதிர்ச்சியைத் தாங்க முடியவில்லை. விளக்கைக் கைசோர விட்டு அப்படியே விழுந்து மூர்ச்சையானார்.

'யாராவது திருடிக் கொண்டு போய் விடப் போகிறார்களே' என்ற பயத்தில் அதற்குக் கொஞ்ச நேர முன்னர்தான் பூசனிக்காயைக் கொடியிலிருந்து நறுக்கி உள்ளே கொண்டு வைத்திருந்த பார்வதியின் காதில் அவர் குரல் விழவில்லை. அவள் கவலையற்ற நிம்மதியான தூக்கத்தி லிருந்தாள்.

# உள்ளம் நிறைந்தது!

**அம்புஜம்**

சுபத்ரா துண்டை எடுத்துக் கொண்டு குளிக்கும் அறையை நோக்கிப் போனாள். அவள் உடலும் கைகளும் மிகவும் சோர்ந்திருந்தன. இரண்டு நாட்களாகப் ப[illegible] பட்சணங்கள் பண்ணியதால் மிகவும் களைத்துப் போயிருந்தாள். மறுநாள் தீபாவளி யாதலால் வீடு கழுவி, வெந்நீர் அண்டாவைத் தேய்த்து வைத்து விட்டு அப்போது தான் அலுப்பும் அழுக்கும் தீரக் குளிக்கப் புறப்பட்டாள். உடலைப் போலவே உள்ளமும் சலித்திருந்தது. தீபாவளிக்குப் புதுப் புடவை இல்லை என்றால் நிறைவாகவா இருக்கும்!

அவள் குளித்து விட்டு உள்ளே வருவதற்குள் பக்கத்து வீட்டில் விளையாடிக் கொண்டிருந்த உமாவும் ரமாவும் அவளிடம் ஓடி வந்தார்கள். "அம்மா பக்கத்து வீட்டுப் பெண்ணுக்குத் தீபாவளிக்குப் பட்டுப் பைஜாமா தைத்திருக்கிறார்கள்" என்று இழுத்தாள் உமா.

சின்னவள் படபடப்பாக, "நீயும் புதுச் சட்டை வாங்கித் தருகிறேன், தருகிறேன் என்று சொல்லி ஏமாற்றி விட்டாய். நாளைக்குத் தீபாவளி. 'இனி மேல் எப்போது வாங்கித் தரப் போகிறாய்!" என்றாள்.

சுபத்ராவுக்குத் துக்கம் தொண்டையை அடைத்தது. பெரியவர்கள் கஷ்டத்தை உணர்ந்து சமாதான மடைந்து விடுகிறார்கள். குழந்தைகளுக்கு அவ்வளவு சுலபமாக விவேகம் வந்து விடுமா! "இந்தத் தடவை அப்பாவிடம் பணம் இல்லையம்மா. உனக்கும் அக்காளுக்கும் ஜுரம் வந்ததல்லவா! அதனால் அப்பாவுக்குப் பணம் அதிகம் செலவாகி விட்டது. துணி வாங்க முடியவில்லை. அடுத்த வருஷம் உங்கள் இரண்டு பேருக்கும் ஸாடின் பைஜாமாவும் ஸாடின் சொக்காயும் தைத்துத் தருவார். சரிதானே!" என்று சமாதானம் செய்ய முயன்றாள்.



டாக்டர்:— ஆபரேஷனுக்காகக் 'குளோரபாரம்' கொடுத்தேனே, அப்பொழுது உமக்கு எப்படி இருந்தது?

நோயாளி:—ஏதோ சொர்க்கத்தில் இருப்பது போல் இருந்தது. ஆனால் பிறகு கண்ணைத் திறந்து உங்களைப் பார்த்தபோதுதான் சொர்க்கம் இல்லை என்று தெரிந்தது!

உமாவும் ரமாவும் அடுத்தடுத்து 'டைபாயிட்' ஜுரத்தில் படுத்துக் குணமாகி இரண்டு மாதங்கள் ஆகின்றன. டாக்டர் 'பீஸ்'க் கென்று வாங்கிய கடனை எப்படி அடைப்பதென்று கலங்கிக் கொண்டிருந்த அவர்கள் தந்தை தீபாவளி சமயத்தில் காரியாலயத்தில் கொடுக்கும் 'போனஸை' ஆவலுடன் எதிர் பார்த்துக் கொண்டிருந்தார். 'இந்த வருஷம் 'போனஸ்' கொடுக்காவிட்டால் கடனை அடைப்பது எப்படி!' என்ற கவலையில் சுபத்ராவும் அவள் கணவனும் இரவுத் தூக்கமின்றிப் பல நாட்கள் கஷ்டப்பட்டிருக்கிறார்கள்.

போன வருஷத் தீபாவளியை நினைத்துப் பார்த்தாள் சுபத்ரா. பட்டுப் புடவையும் பட்டுச் சட்டைகளும் வாங்கா விட்டாலும் பார்வைக்கு அழகான, சுமாரான துணிகள் வாங்கினார்கள். பக்கத்து வீட்டவர்கள் எல்லோரும் பட்டுப் புடவையும் ஸில்க் சூட்டுமாக ஜமாய்த்திருக்க நாம் மட்டும் இப்படி இருக்கிறோமே என்ற குறை சுபத்ராவுக்கு ரொம்ப இருந்தது. குறைந்த சம்பளம் என்றாலும் 'நமக்கு இவ்வளவுதான்' என்று திருப்தி அடைந்து விடலாம். கணவன் கை நிறையச் சம்பாதித்தும் இஷ்டம்போல் செலவு செய்ய முடியவில்லை. அவன் முக்கால் வாசியையும் தன் பெற்றோருக்கும் சகோதர சகோதரிகளுக்கும் கொடுத்து விடுகிறான். 'செய்ய வேண்டியதுதான்; பெற்றோரையும் ஆதரிக்க வேண்டியதுதான். இருந்தாலும், அதற்கு ஓர் அளவு இல்லையா! குழந்தைகளின் ஆசையாவது பூர்த்தி செய்யக் கூடாதா! பெற்றோருக்கும் உடன் பிறந்தவருக்கும் செய்ய இவர் ஒருவர்தானா இருக்கிறார்! இவரை விட அதிகச் சம்பளம் வாங்கும் இவருடைய அண்ணா இல்லையா! கணவனும் மனைவியுமாகக் குடும்பத்தில் இருவர்தா னென்றாலும் ஒரு தடவை கூடத் தங்கைகளுக்கு ஒன்றும் கொடுத்தது கிடையாது. பெற்றோருக்கு ஒரு தடவையாவது பொருளுதவி செய்திருக்கிறாரா! அதற்குத்தான் இவர் இருக்கிறாரே! கடன் வாங்கியாவது தங்களுக்குச் செய்யும் இந்த அண்ணாவை விட அந்தப் பணக்கார அண்ணாவிடம் தான் எல்லோருக்கும் அன்பும் மதிப்பும்! இவருக்கு அதெல்லாம் தெரியவே இல்லை' என்று நினைத்துக் கொண்டாள் சுபத்ரா.

குழந்தைகளின் வைத்தியச் செலவுக்குக் கடன் வாங்கியிருக்க வேண்டியதே இல்லை. அவ்வப்பொழுது போஸ்டாபீஸில் போட்டு வைத்த பணம் அதற்கு உதவியிருக்கும். அவன் தங்கைக்கு ஒரு புதுவித நெக்லெஸ்மீது திடீரென்று ஆசை விழுந்து விடவே, அந்தப் பணம் அவள் கைக்குப் போய்ச் சேர்ந்து விட்டது.

இந்த இளம் வயதில் எத்தனை கவலைகள்! இரண்டு குழந்தைகளுக்குத் தாயாகி விட்டதனால் இருபத்தைந்து வயதிலேயே அவள் கிழவியாகி விடவேண்டுமா! "கடன் இருந்தால் இவனுக்கு என்ன கவலை! பாடுபட்டு உழைத்துச் சம்பளம்

வாங்கிக் கடனை அடைக்கப் போவது நான்தானே! இவள் என்ன செய்துவிடப் போகிறாள்!'' என்று புருஷர்கள் நினைக்கலாம். கடன் தொல்லையினால் ஏற்படும் கஷ்டங்கள் வீட்டில் தானே அதிகம் பிரதிபலிக்கின்றன! காலம் எல்லாம் வீட்டிலேயே அடைந்து கிடக்கும் பெண்கள் தானே அந்தக் கஷ்டத்தை அதிகம் உணருகிறார்கள்! ஆண்கள் ஏனோ இதை அறிவதில்லை!

அவள் குடும்பம்தான் இப்படி என்றால் அவன் பிறந்தகமோ அதைவிட மோசமாக இருந்தது. வடநாட்டில் ஒரு கல்லூரியில் பேராசிரியராக இருந்த அவன் தந்தை நன்கு சம்பாதித்துக் கொண்டிருந்தார். பெரிய குடும்பமாக இருந்தும் வசதியாக வாழ்ந்து வந்தார்கள். அப்படிப்பட்ட குடும்பம் வகுப்புத் துவேஷக் கலகத்தால் தென்னாட்டிற்கு ஓடிவர நேர்ந்தது. அவர்கள் வட நாட்டிலிருந்து வரும்போது சுபத்ராவுக்கு விவாகமாகிச் சில மாதங்களாகி யிருந்தன. அவன் தந்தை தென்னாட்டுக்கு வந்த பின் பல இடங்களில் வேலைக்காக அலைந்தார். கல்லூரி வேலை இல்லை என்றானதும் பள்ளிக்கூடங்களை முற்றுகை யிட்டார். வேலை தேடும் முயற்சியிலேயே ஒரு வருடம் உருண்டோடி விட்டது. ஒரு பெரிய குடும்பம். வருமானம் என்ற பெயரில் ஒரு சிறு தொகை கூடக் கிடைக்காமல் ஒரு வருஷத்தை ஓட்டுவது எப்படி! அந்தக் குடும்பத்தின் தலைவி தன் நகைகளை ஒவ்வொன்றாக இழந்தாள். வயது வந்த குழந்தைகள் இதைப் பார்த்து மனம் குமைந்தனர். இப்படியே போய்க் கொண்டிருந்தால் கடைசியில் இந்தக் குடும்பம் என்ன ஆகுமோ என்ற ஏக்கம் பிடுங்கித் தின்றது.

கணவனுடன் புது வாழ்க்கை தொடங்கியிருந்த சுபத்ராவுக்கு இதை எல்லாம் கேட்கும் பொழுது வாழ்வு வாழ்வாகவா இருக்கும்! இருவருமாகச் சினிமாவுக்குக் கிளம்பினால், 'நம் தம்பி தங்கைகள் எதற்கெல்லாம் பஞ்சப் படுகிறார்களோ! நாம் மட்டும் உல்லாசமாகச் சினிமாவுக்குப் போகிறோமே' என்று தோன்றும். ஒரு பண்டிகை கொண்டாடினாலும் மனத்தில் உற்சாகமே இருக்காது. எந்தச் சந்தோஷமான சந்தர்ப்பத்திலும் 'அவர்கள் என்ன செய்கிறார்களோ' என்ற கவலையும் கூடவே இருக்கும்.

* * *

சுபத்ரா தன் கணவனுடன் தலை தீபாவளிக்குப் பிறந்தகம் சென்றிருந்தாள். அவள் பெற்றோர் தென்னாட்டிற்கு வந்து அப்போது ஓரிரு மாதங்களாகி யிருந்தன. 'அம்மா எப்போதும் கவலைப் பட்டுக் கொண்டே யிருப்பாள்' என்று நினைத்தாள் சுபத்ரா. 'தலை தீபாவளிக் கொண்டாட்டம் வேண்டாம்' என்று அவளும் அவள் கணவனும் எத்தனை தடவை சொல்லியும் அவள் பெற்றோர் ஒத்துக் கொள்ளவில்லை. அங்கே போய்ச் சேர்ந்த பிறகும், "குடும்ப நிலை இப்படி இருக்கும் போது பண்டிகை ஆர்ப்பாட்டங்கள் ஒன்றும் வேண்டாம். சாதாரணமாகக் கொண்டாடினால் போதும்'' என்று இருவரும் மன்றாடியதை அவர்கள் காதிலேயே வாங்கிக் கொள்ளவில்லை.

"அடுத்தாற்போல் உன் தங்கைக்குக் கலியாணமாகும். அவள் தலை தீபாவளிக்குள் நல்ல நிலைமை வராமலா போகும்! அப்பொழுது நன்றாகக் கொண்டாடுவோம். உன் தலை தீபாவளி சோடையாகப் போய்விட்டதே என்று இருக்கும். அப்பொழுது உன் தலை தீபாவளி மறுபடியும் வருமா!'' என்றாள் அம்மா.



"இன்றைக்குச் சாம்பார் ரொம்ப ஜோர்! நீ, இன்றைக்குச் சாம்பாரில் வழக்கமாகப் போடறது எதையோ மறந்துபோய் விட்டாய்!''

குடும்பம் நிலைகுலைந்த வருத்தத்தைச் சிறிதும் வெளியே காட்டிக் கொள்ளமாட்டாள் சுபத்ராவின் தாய். குழந்தைகள் அதைப் பற்றிப் பேசினால்கூட, "கஷ்டம் வருவது சகஜம் தான். அதற்காக மனமிடிந்து போய் விடுவதா! நாம் இப்படியேயா இருந்து விடுவோம்! நல்ல நிலைமை வந்துவிடும். இப்பொழுது வருத்தப் படுவதெல்லாம் வீண்தானே!'' என்பாள். குழந்தைகள் மனது கஷ்டப்படக் கூடாதென்பது அவள் எண்ணம்.

சுபத்ரா திரும்பி வந்த சில மாதங்களில் அவள் தந்தைக்கு ஒரு ஹைஸ்கூலில் எண்பது ரூபாய் சம்பளத்தில் ஆசிரியர் வேலை கிடைத்தது. "எண்பது ரூபாய் சம்பளத்தில் அம்மா எப்படித்தான் குடும்பத்தை நடத்துகிறாளோ'' என்று கவலைப் படுவாள் சுபத்ரா. அதையும் அங்கே போன பின் பார்த்து விட்டாள்.

ஒரு நாள் விசேஷமில்லாமலே விருந்துச் சமையலாக இருந்தது. "இதெல்லாம் எதற்கு!'' என்று கேட்டாள் சுபத்ரா. முன் தினம் ரேஷன் வாங்கப் பணம் இல்லாமல் அதை விட வேண்டி யிருப்பதாகச் சொன்னது அவளுக்கு நினைவு வந்தது. "எதற்கு இந்த அநாவசியச் செலவு எல்லாம்!'' என்று கேட்டாள்.

"சாப்பிடும் போது இந்தப் பேச்செல்லாம் எதற்கு!'' என்று அம்மா அடக்கிவிட்டாள்.

அவள் எதையோ மறைப்பதை அவள் முகம் காட்டி விட்டது. சாப்பிட்டு முடிந்த பின் சுபத்ரா தன் கணவருக்கு வெற்றிலை கொடுக்க வெள்ளி வெற்றிலைத் தட்டைத் தேடினாள். அது கிடைக்கவில்லை. "வேறு ஏதாவது தட்டில் கொண்டுபோய்க் கொடேன்! அவசரத்தில் அது வேண்டுமென்றால் கிடைக்குமா!'' என்று கடிந்து கொண்டாள். சுபத்ரா திடுக்கிட்டாள். அம்மா தானா பேசுகிறாள்! எந்தப் பொருளையும் அதனதன் இடத்தில் வைக்காவிட்டால் அம்மாவுக்கு இருப்புக் கொள்ளாதே! டப்பாக்களுக்குக் கூட ஒவ்வொன்றுக்கு ஒவ்வொரு இடம் ஏற்படுத்தியிருப்பாள். இடம் மாற்றி வைத்தால் அவளுக்குப் பிடிக்காது. கை தவறி ஒரு பொருளை அதற்குரிய



தோட்டத்துச் சொந்தக்காரர் :— ஏண்டா பயலே, 'உள்ளே ஒருவரும் நுழையக் கூடாது' என்று வாசல் பக்கத்திலே போர்டு போட்டிருப்பதைப் பார்க்கவில்லையா?

பையன் :— அது எனக்கு எப்படித் தெரியும்? நான் பின்புறமாக அல்லவா சுவர் ஏறிக் குதித்து வந்தேன்?

இடத்திலில்லாமல் வேறெதிலாவது வைத்தால் சகிக்காது. அப்படிப்பட்ட அம்மா எப்படி மாறி விட்டாள்! மறு நாள் பேச்சு வாக்கில் அந்த வெள்ளித் தட்டு விற்கப்பட்டு விட்டதை அறிந்தாள்.

அம்மாவின் மனம் எப்படிப்பட்டது! ஒவ்வொரு ஸ்திரீகள் சின்னச் சின்ன விஷயங்களை எல்லாம் எப்படிப் பிரமாதப் படுத்துகிறார்கள்! சர்க்கரை இல்லை என்பதற்காகக் குறை சொல்ல ஆரம்பித்து, பழைய நாட்களில் மாமியாருடன் சேர்ந்து கொண்டு கணவன் தன்னைப் படுத்தியதை இடித்துக் காட்டி அழும் ஸ்திரீகள் எத்தனை பேர்! அம்மாவோ இத்தனை பெரிய காரியத்தைச் சிறிதும் சத்தம் இல்லாமல் செய்து விட்டாள். செலவுக்குப் பணம் இல்லாமல் வெள்ளித் தட்டை விற்றது அவளைத் தவிர யாருக்குத் தெரியும்!

"பெரிய சாமான் ஏதாவது விற்றால் இப்படித்தான் அன்று விசேஷச் சமையல் செய்வேன்" என்றாள் அம்மா.

சுபத்ராவின் கண்கள் நிறைந்துவிட்டன. அவள் இங்கு வந்த மறுநாள் நடந்த சம்பவம் நினைவுக்கு வந்தது. அம்மாவின் கைகளில் ஒரே ஜோடி வளையலைப் பார்த்துச் சந்தேகத்துடன், "மற்ற வளையல்கள் எங்கே!" என்று கேட்டாள் அவள். அவை லேவாதேவிச் செட்டியார் கடைக்குப் போய்விட்ட சமாசாரத்தை மிகவும் சாவதானமாகச் சொன்னாள் அம்மா. சுபத்ரா எவ்வளவு கஷ்டப்பட்டும் கண்ணீரை அடக்க முடியவில்லை. "சுபத்ரா, உனக்குக் கல்யாணத்தில் அப்பா மூன்று ஜோடி வளையல் போட்டிருந்தாரே! ஏன் ஒரு ஜோடி வளையலை மட்டும் போட்டுக் கொண்டிருக்கிறாய்!" என்று கேட்டாள் அம்மா.

"எல்லாவற்றையும் போட்டுக் கொண்டால் அநாகரிகமாக இருக்கிறது" என்றாள் சுபத்ரா.

"நானும் அப்படியே கழற்றி வைத்திருப்பதாக நினைத்துக் கொண்டால் போயிற்று. குழந்தைகளும் காய்ச்சலில் தவிக்கும்போது மருந்துக்கு உதவாத வளையல் வேறு எதற்கு! இல்லாவிட்டால் அப்பா கடன் வாங்க வேண்டும். அது ஒரு சுமைபோல் தோன்றும். வளையலை விற்றுவிட்டதால் அந்தச் சுமை இல்லை பார்" என்றாள்.

அம்மா வறுமையின் கொடுமையில் நேராகத் தாக்கப்பட்டும் கலகலப்பாக இருந்தாள். அத்தனை மனக் கஷ்டம் இருந்தும் இரவில் படுத்தால் உடனே தூங்கி விடுவாள். அவள் நிம்மதியாகத் தூங்குவதைக் காணும்போது சுபத்ராவுக்குக் கண்ணீராவியாக இருக்கும். "பாவம்! குறையற்றவள்போல் அமைதியாகத் தூங்குகிறாளே!" என்று நினைத்துக் கொள்வாள்.

அப்பா அதற்கு நேர் எதிராக இருந்தார். குடும்பக் காரியங்கள் எதிலும் அவர் கலந்து கொள்ள மாட்டார். அம்மா எந்தக் கடையில் சாமான் வாங்குகிறாள் என்பது கூட அவருக்குத் தெரியாது. வறுமையின் கஷ்டத்தை நேரடியாக அனுபவிக்கா விட்டாலும் அவருக்கு மன நிம்மதியே இல்லை.

முன்பெல்லாம் குடும்பம் நல்ல நிலைமையில் இருந்த போது அதிகாலையில் விழிப்பு ஏற்பட்டு விட்டால் அப்பா அருமையான தேவாரப் பாடல்களைப் பாடுவார்.

"...............காடுடைய சுடலைப் பொடி பூசி; என்னுள்ளம் கவர் கள்வன்..." என்று அவர் உச்ச ஸ்தாயியில் பாடும் போது எப்பேர்ப்பட்ட நாஸ்திகனானாலும் சிவ பக்தனாகி விடுவான்.

இப்போதோ சுபத்திரா தப்பித் தவறி இரவில் விழித்துக் கொண்டால், அப்பாவின் நீண்ட பெருமூச்சுக்களைத்தான் கேட்க முடிந்தது.

சுபத்திரா பிறந்தகத்திலிருந்து திரும்பி வரும் போது மனத்தில் பெரிய பாரத்துடன் வந்தாள். 'இந்தக் குடும்பத்திற்கு விடிவு காலம் எப்போது வரப் போகிறதோ!' என்ற எண்ணமே அன்றிலிருந்து அவள் மூச்சுக் காற்றாயிற்று.

* * *

மாலை நெருங்கிக் கொண்டிருந்தது. சுபத்ரா காப்பி போட ஆரம்பித்தாள்.

"சுபத்ரா!" என்று குதூகலத்துடன் அழைத்த படியே உள்ளே நுழைந்தான் சுபத்ராவின் கணவன். பிறந்தகத்தைப் பற்றிய கவலையில் மூழ்கியிருந்த சுபத்ரா அசுவாரஸ்யமாக "ஏன்" என்ற படியே அவன் எதிரே வந்தாள்.

"புடவை இல்லை என்ற துக்கத்தை அப்புறம் கொண்டாடலாம். நல்ல செய்தி கொண்டு வந்திருக்கிறேன். முகத்தைக் கொஞ்சம் சந்தோஷமாக வைத்துக் கொள், பார்ப்போம்" என்றான். பிறகு அதைத் தொடர்ந்து "உன் அப்பாவுக்கு மதராசில் ஒரு காலேஜில் புரொபஸர் வேலை ஆகியிருக்கிறதாம். நல்ல சம்பளம் என்று எழுதியிருக்கிறார்" என்றான். சுபத்ராவுக்கு மயக்கம் வருவது போலிருந்தது. அப்பாடா! கடைசியில் விடிவு காலம் வந்து விட்டதா! ஏழு வருஷங்களாகப் பட்ட கஷ்டத்திற்கு முடிவு வந்து விட்டதா!

போன வருஷத் தீபாவளிக்குத் துணிமணிகள் வாங்கி நன்றாகக் கொண்டாடியும் மனம் நிறைவுற்றதா! பிறந்தகத்துக் கவலை இருந்து கொண்டே இருந்தது.

இந்த வருஷம் தீபாவளிக்குப் புதுத் துணி இல்லை என்ற குறை பெரிதாக இருந்தது. இருந்தாலும் அப்பாவுக்குத் தகுந்த வேலை கிடைத்து விட்ட சந்தோஷச் செய்தி மனத்தை நிறைத்து விட்டது.

# இன்றே ஆரம்பியுங்கள்....



கூந்தலின் வளர்ச்சிக்கு குழந்தை பருவத்திலிருந்தே போஷாக்கு அவசியம்.

உங்கள் பெண்ணும், நீண்ட பளபளப்பான அழகிய கூந்தலுடன் விளங்க வேண்டுமானால் இப்பொழுதிலிருந்தே ஸ்வஸ்திக் வாஸனை கேஸ்டர் ஆயில் உபயோகியுங்கள்.




ஸ்வஸ்திக்

## வாஸனை கேஸ்டர் ஆயில்

கூந்தல் அழகிற்கும், முகமலர்ச்சிக்கும்

ஸ்வஸ்திக் ஆயில் மில்ஸ் லிமிடெட், வடாலா, பம்பாய்

S. O. M. .77

பாப்பா மலர்

# ஒரு நாள் ராஜா



## 4. மீண்டும் அரண்மனைவாசம்!

முதல் சில நாட்களுக்குப் பைத்தியக்கார ஆஸ்பத்திரியில் ஹாஸன் அடிபட்டதால் கலங்கவில்லை. தான் சொன்னதையே திரும்பத் திரும்பச் சொல்லி வந்தான். ஆனால் அடிமேல் அடி வைத்தால் அம்மியும் நகருமல்லவா? அது போல அடி தாங்காமல் ஹாஸன் ஓரளவு சுயநினைவு பெற்றான். தான் உண்மையில் கலிபா வாயிருந்தால் இப்படி ஆஸ்பத்திரியில் பூட்டி வைத்து அடிப்பார்களா என்று யோசித்துப் பார்த்தான். இந்த யோசனையின் பயனாக, தான் கலிபா அல்ல, அபூஹாஸன்தான் என்ற முடிவுக்கு வந்தான்.

இவ்வாறு சுயநினைவு ஏற்பட்ட பின் ஒரு நாள் அவன் தாயார் அவனைப் பார்க்க வந்தாள். முன் போலவே கோபித்துக் கொண்டு தன்னை அடிப்பானோ என்று பயந்து கொண்டே தான் அவள் வந்தாள். ஆனால் அவனைப் பார்த்ததும் ஹாஸன், "அம்மா! நான் செய்த தவறுக்கு என்னை மன்னித்து விடு. நான் கலிபா அல்ல உன் அருமை மகன் தான். தெரிந்து கொண்டு விட்டேன். நடந்ததை யெல்லாம் மறந்து விடு அம்மா" என்று அன்புடன் வேண்டிக் கொண்டான். மகன் புத்தி தெளிந்து பேசியதைக் கண்ட தாய் சந்தோஷம் தாங்காமல் அவனை அணைத்துக் கொண்டாள். இந்தக் காட்சியைப் பார்த்த ஆஸ்பத்திரி அதிகாரியும் ஹாஸனின் பைத்தியம் நீங்கி விட்டதென அவனை அவன் தாயாருடன் அனுப்பி வைத்தார்.

எப்பொழுதும் யாருடனாவது தமாஷாகப் பேசிக் காலம் கழித்தவனுக்குத் தன்னந் தனியாக வாழ்வது சற்றுச் சலிப்பாக இருந்தது. ஆகையால் முன் போலவே தினம் ஒரு அன்னியனை அழைத்து உபசரிக்கும் திட்டத்தை மறுபடியும் கைக் கொண்டான்.

இந்தத் திட்டப்படி நகர் எல்லையில் காத்துக் கொண்டிருக்கையில் மறுபடியும் கலிபா ஹாரூன் அலாரஷீத் வியாபாரி உடையில், பழைய வேலைக்காரனுடன் நகருக்குள் நுழைவதைக் கண்டான். இவனால்தான் தனக்குச் சமீபத்தில் பல கஷ்டங்கள் ஏற்பட்டதை உணர்ந்த ஹாஸன் அவனை மறுபடியும் வரவேற்று, துன்பத்தை விலைக்கு வாங்கத் தயாராயில்லை. ஆகையால் அவனைப் பார்த்தும் பார்க்காதது போல் இருந்தான். ஆனால் கலிபா ஹாஸனை அடையாளம் கண்டு கொண்டான். அவனால் தான் அடைந்த சந்தோஷத்தை அவன் மறந்து விடவில்லை. மறுபடியும் அவன் வீட்டில் விருந்துண்டு அவனுடைய வேடிக்கைப் பேச்சை ரஸிக்க விரும்பினான். ஹாஸன் பராமுகமாகச் சென்றது அவனுக்கு ஆச்சரியத்தை அளித்தது. ஆனால் அவன் மனம் தளரவில்லை. அவனைப் பின் தொடர்ந்து, "நண்பரே! சில நாட்களுக்கு முன்பு தங்களுடைய விருந்தாளியாக நான் இருந்தது உங்களுக்கு மறந்து விட்டதா?" என்று கேட்டான். இதற்கு ஹாஸன் பதில் கூறினான்: "நான் எப்படி மறக்க முடியும்?

நீங்கள் செய்த மந்திரத்தால் நான் பட்ட கஷ்டத்தை மறந்தால் அல்லவா நீங்கள் என் விருந்தினராயிருந்ததை மறக்க முடியும்?"

இவ் வார்த்தைகளைக் கேட்ட வியாபாரி வேஷத்திலிருந்த கலிபா, "நண்பரே! நீங்கள் கூறுவது எனக்கு விளங்கவில்லை. நான் உங்களை விட்டுப் பிரிந்த பிறகு நடந்தவைகளைக் கூறினால் ஒரு வேளை புரிந்து கொள்ளலாம்" என்று கேட்டான்.

ஹாஸனும் தான் கலிபாவானதிலிருந்து பைத்தியக்கார ஆஸ்பத்திரியில் அடைபட்டு அடிபட்டது வரையில் கூறிவிட்டு, "ஐயா! இப்பொழுது நீங்களே சொல்லுங்கள். நீங்கள் ஏதாவது மாயம் செய்திராவிட்டால் எனக்கு இந்தக் கஷ்டங்கள் எல்லாம் ஏற்பட்டிருக்குமா?" என்று கேட்டான்.

ஹாஸனின் அநுபவங்களைப் பற்றிக்கேட்ட கலிபாவுக்கு உண்மையிலேயே வருத்தமாயிருந்தது. தன்னை மகிழ்வித்த இளைஞனுக்கு இவ்வளவு கஷ்டம் ஏற்பட்டது பற்றி வருத்தப்பட்டான். இந்தக் கஷ்டத்திற்குத் தகுந்த பரிகாரம் செய்வதுடன், அதன் மூலம் தான் மீண்டும் மகிழ்ச்சியடைவதற்கான திட்டம் செய்தான். உடனே ஹாஸனைப் பார்த்து, "நண்பரே! மீண்டும் என்னை இன்று உபசரியும். நாளைக்குள் நிலைமை சரியாகி விடும்" என்று கூறினான்.

இதற்குள் ஹாஸனின் மனசும் சமாதானமடைந்தது. கலிபாவை அழைத்துக் கொண்டு தன் வீட்டிற்குச் சென்றான். அங்கு ஹாஸனின் தாய் சுவையான விருந்து தயாரித்து அவர்கள் இருந்த அறைக்கு அனுப்பினாள். இருவரும் நன்கு சாப்பிட்டு விட்டு வெகு நேரம் வேடிக்கையாகப் பேசிக் கொண்டிருந்தனர். முன் தடவை போலவே கலிபா, ஹாஸன் அறியாமல் அவனுடைய ரஸக் கோப்பையில் தூக்க மருந்தைக் கலந்து விட்டான். அதை அருந்தியவுடன் ஹாஸன் சாய்ந்து தூங்கி விட்டான். உடனே தூங்குகின்ற அவனை அரண்மனைக்கு எடுத்து வரும்படி தன் வேலைக்காரனுக்குக் கட்டளை விட்டுக் கலிபா முன்னால் சென்றான். அரண்மனையில் ஹாஸனுக்கு கலிபா உடை அணிவிக்கப் பட்டது. முன் போலவே பிரபுக்களுக்கும், பெண்களுக்கும் ஹாஸனைக் கலிபாவாகவே மதித்துப் பணிவிடை செய்யும்படி உத்தரவிட்டு, நடக்கப் போகும் விஷயங்களைக் கவனிப்பதற்காக கலிபா திரைமறைவுக்குச் சென்றான்.

மறுநாள் காலை ஹாஸன் விழித்துக் கொண்டவுடன் மீண்டும் தான் அரண்மனையிலிருந்து அறையில் இருப்பதைக் கண்டான். பழைய பிரபுக்கள், பழைய பணிவிடைப் பெண்கள், சுற்றிலும் பழைய பட்டுப் படுதாக்கள், வர்ண சித்திரங்கள் காட்சியளித்தன. எப்படி மறுபடியும் கலிபாவின் அரண்மனைக்கு வந்தோம் என ஆச்சரியமடைந்தான்.

"மேன்மை தங்கிய மன்னரே" "ஆஸ்திகர்களின் ரட்சகரே" என்று பிரபுக்கள் அழைத்துப் பிரார்த்தனைக்கு வரும்படி தன்னைக் கூப்பிட்டதைக் கேட்டதும் அவனுக்கு என்ன செய்வதென்றே தெரியவில்லை. மறுபடியும் பழைய துன்பங்களே சம்பவிக்குமோ என நினைத்துப் பயப்பட்டான். கண்களைக் கசக்கிக் கொண்டு சுற்றியுள்ளவர்களைப் பார்த்து, "உங்களை எனக்குத் தெரியாதே! என்னை நீங்கள் மன்னனென்றும் கலிபாவென்றும் அழைப்பது தவறு" என்று கூறினான். இதைக் கேட்ட பிரபுக்களில் ஒருவர், "மன்னாதி மன்னரே! நீங்கள்தான் கலிபா! நாங்கள் உங்களுடைய ஊழியர்கள், நேற்று நீங்கள் விருந்தறையிலேயே தூங்கி விட்டீர்கள். உங்களை எழுப்பி தொந்தரவளிக்க நாங்கள் விரும்பாததால் அப்படியே விட்டு விட்டோம்" என்று கூறினார்.

இதற்கு ஹாஸன், "நீங்கள் சொல்வதை என்னால் நம்ப முடியாது. நேற்றெல்லாம் நான் பைத்தியக்கார ஆஸ்பத்திரியில் அடிபட்டுக் கொண்டிருந்தேன" என்றான். உடனே மெய்காப்பாளர்களில் ஒருவன், "மன்னரே! நீங்கள் ஏதோ கனவு கண்டிருக்கிறீர்கள். அதனால்தான் இப்படிச் சொல்கிறீர்கள்" என பதில் கூறினான். ஹாஸனின் ஆச்சரியம் அதிகரித்தது. "அப்படியானால் நீர் வந்து என் காதைக் கடியும். நான் தூங்குகிறேனா விழித்துக் கொண்டிருக்கிறேனா பார்க்கலாம்" என ஒரு பிரபுவை அழைத்தான். அந்தப் பிரபுவும் முன் வந்து ஹாஸனின் காதை வெடுக்கென்று கடித்ததால்

அவன் அலறிவிட்டான். அந்தச் சமயத்தில் அறையிலிருந்த பிரபுக்களும் பெண்களும் ஹாஸனை வட்டமிட்டுக் குதித்துப் பாட ஆரம்பித்து விட்டனர்.

மீண்டும் ஒருமுறை எப்படியோ கலிபா வாழ விட்டதாக நம்பினான் ஹாஸனும். அவனும் வேடிக்கைகளில் உற்சாகமாகக் கலந்து கொண்டான். அது மட்டுமல்ல, தான் அணிந்து கொண்டிருந்த கலிபா உடைகளை உதறி எறிந்துவிட்டு, அங்குள்ள பெண்களுடன் கை கோத்துக் கொண்டு வேடிக்கை விசித்திரம் எல்லாம் பேசி, பாடிக் களித்தான். இதை யெல்லாம் திரை மறைவிலிருந்த கலிபா பார்த்துத் தன்னையு மறியாமல் உரக்கச் சிரித்து விட்டான். எல்லோரும் சிரிப்பொலி கிளம்பிய பக்கம் திரும்பிப் பார்க்கையிலே கலிபா மறைவிலிருந்து வெளியே வந்து, "அபூஹாஸன்! அபூஹாஸன்! சிரித்துச் சிரித்து நான் சாகவேண்டும் என்பது உன் எண்ணமா?" என்று கேட்டு விட்டு அவனைத் தட்டிக் கொடுத்தான்.

உண்மைக் கலிபாவின் குரல் கேட்டவுடன் ஆடல் பாடல் நின்றது. எல்லோரும் மௌனமாயிருந்தனர். அபூஹாஸன் கலிபாவைப் பார்த்ததும் அவன்தான் வியாபாரியுடையிலிருந்த தனது விருந்தாளி என்பதை அறிந்து கொண்டான். ஆனால் ஹாஸன் கலங்கிவிடவில்லை. தமாஷாகக் கலிபாவைப் பார்த்து, "ஐயா, சிரித்ததால் இதுவரையில் யாரும் செத்ததாக நான் கேள்விப்படவில்லை. உங்களுடைய வேடிக்கைத் திட்டத்தினால் கஷ்டப்பட்டவன் நான்தான். ஆனால் அதற்காக உங்கள்மீது எனக்கு எள்ளளவும் கோபம் இல்லை" என்று கூறினான்.

அபூ ஹாஸன் தன்னிடம் கோபம் கொள்ளவில்லை என அறிந்த கலிபா நடந்ததை யெல்லாம் அவனுக்கு விளக்கிக் கூறிவிட்டுக் கடைசியாகச் சொன்னான்: "எல்லாவற்றையும் தமாஷாக நினைத்துத்தான் நான் செய்தேன். அதனால் உங்களுக்குக் கஷ்டம் ஏற்படும் என நான் எதிர்பார்க்கவே யில்லை. நடந்தது நடந்து விட்டது. இனி என்னால் தங்களுக்காக வேண்டியது என்ன சொல்லுங்கள்."

இதற்கு அபூ ஹாஸன் கூறினான்:

"நான் அடைந்த கஷ்டத்தை மறந்து விட்டேன். உங்கள் முன்னிலையி லிருப்பது எனக்கு மிகுந்த மகிழ்ச்சி யளிப்பதால் நான் விரும்பும்போது தங்களைப் பார்த்து விட்டுப் போக அனுமதிக்க வேண்டும். இதுவே என் கோரிக்கை."

ஹாஸனின் கோரிக்கை, கலிபாவுக்கு மிகவும் சந்தோஷத்தை அளித்தது. தன் அரண்மனைக்கு வர அனுமதித்ததுடன் அவனுக்கு உயர்ந்த ஆடைகளும் ஆயிரம் பவுனும் பரிசாக அளித்தான். பிறகு அவன் "ஹாஸன், உங்கள் வருகையால் எனக்கு அதிக சந்தோஷம் ஏற்படுவதால் அரண்மனையில் ஒரு பகுதியில் தாங்கள் வந்து வசிக்க வேண்டும்" என்று கூறிவிட்டு ஹாஸன் வசிப்பதற்கான அறைகள் ஏற்பாடு செய்யும்படி தன் ஆட்களுக்கு உத்தர விட்டான்.

இந்த அழைப்பு ஹாஸனுக்கும் மகிழ்ச்சியை அளித்தது. உடனே தன் தாயிடம் சென்று இந்த நற்செய்தியைத் தெரிவித்து விட்டு அரண்மனையில் வசிப்பதற்கு வந்து சேர்ந்தான்.

* * *

வெகு சில நாட்களுக்குள் ஹாஸன் கலிபாவுக்கும் அவன் ராணி ஸுபேதாவுக்கும் மிகவும் வேண்டியவனாகி விட்டான். அரண்மனையில் நடக்கும் எந்த விருந்திலும் ஹாஸன் இல்லா விட்டால் பெரும் குறையாகக் கருதப்பட்டது. அவன் தமாஷ் பேச்சுக்களைக் கேட்டு ரசிக்காதவர்க ளில்லை. ஹாஸனின் வரலாற்றை அறிந்த அவனுடைய பழைய நண்பர்கள் கூட மறுபடியும் அவன் நேசத்தைப் பெற முயற்சித்தனர்.

ராணி ஸுபேதாவுக்குப் பணிவிடைசெய்ய பல அழகிய அடிமைப் பெண்கள் இருந்தனர். இவர்களில் நௌஷாத் என்பவள் மிகவும் அழகியவள். அவளிடம் ஹாஸன் மிகவும் ஆசையா யிருந்தான். இதை அறிந்த ராணி, நௌஷாவைக் கலியாணம் செய்து கொள்ள ஹாஸனுக்கு அனுமதி யளித்தாள். அவர்களுடைய திருமணத் தன்று அரண்மனையில் ஆடம்பரமான விருந்து நடந்தது. அன்று கலிபாவும் ராணியும் அவர்களுக்கு விலையுயர்ந்த பல பரிசுகள் அளித்தனர். இதைத் தவிர அவர்கள் சுகமாகக் காலம் கழிப்பதற்கான பணமும் ஏராளமாகக் கொடுத்தனர்.

சிலகாலம் புதிய கணவனும் மனைவியும் சந்தோஷமாக வாழ்ந்தனர். தினந்தோறும் நண்பர்களுக்கு விருந்தளித்தனர். விருந்துக்குப் பிறகு ஆடல் பாடல் முதலிய கேளிக்கைகளில் பணம் செலவானது தெரியாமல் அளவில்லா சந்தோஷம் அடைந்தனர். ஆனால் பணம் சிறிது சிறிதாகக் கரைந்து விட்டது. திடீரெனப் பணம் இல்லாது போனவுடன் அவர்கள் மனத்தில் கவலை தோன்றியது. இனி செலவு செய்யப் பணம் கண்டு பிடிப்பது எப்படி என்று ஆலோசிக்கலாயினர்.

கலிபாவைக் கேட்டால் மறுபடியும் பணம் கொடுப்பான். ஆனால் ஏற்கனவே அவனும் அவன் மனைவியும் ஏராளமாக உதவி யிருக்கையில் அவர்களைக் கேட்பது நியாயமல்ல என்று அவர்களுக்குத் தோன்றியது. ஒரு வேளை கலிபாவைக் கேட்டால் அவன் கோபித்துக் கொண்டால் என்ன செய்வது என்றும் அவர்கள் பயந்தனர். தமாஷ் என்றால் கலிபாவுக்கு ரொம்ப பிடிக்கும் என்பது ஹாஸனுக்குத் தெரியுமாகையால் அவனிடமிருந்து பணம் பறிக்க ஒரு நாடகம் திட்டமிட்டான். "இனி கவலைப்பட வேண்டாம்" என்று தன் மனைவிக்கும் ஆறுதல் கூறினான். (தொடரும்)

# அரு மருந்து

**பீஷ்மன்**

ஜன்னலைத் திறந்து விட்டு வெளியே பார்த்தான் ஜானகிராமன்.

"அ...ம்...மா...!"

அவனை வரவேற்ற அந்த ஈனக்குரல் அவன் நெஞ்சைப் பிளந்தது.

உள்ளே, ரேழியில் ஒரு புறத்தை அடைத்துக் கிடந்த அந்தப் பெரிய கட்டிலின் மேலே மெலிந்து உருமாறிப் போயிருந்த அவன் மனைவி சுருண்டு கிடந்தாள். உடற்கட்டுத் தேய்ந்து, அழகிழந்து, வாடிய புஷ்பம் விழுந்து கிடப்பதைப் போல, அந்தப் பெரிய கட்டிலின் நடுவில் அவள் படுத்திருக்கும் கோலத்தைப் பார்க்கையில், அவனுக்குக் கண்ணீர் முட்டிக் கொண்டு வந்தது.

ஓசைப்படாமல் மெதுவாக நடந்து கட்டிலுக்கருகே போய் நின்றான்.

மூடியிருந்த கண்களை மெதுவாகத் திறந்து அவள் அவனைப் பார்த்தாள்.

"உடம்பு வலியெல்லாம் இப்போ எப்படியிருக்கு, புஷ்பா?" என்று கேட்டான் அவன்.

"தேவலை" என்றாள் மெதுவாக. சொல்லிக் கொண்டே சற்றுப் புரண்டு கொடுத்த அவளால் அப்போது உடலில் கணுக்கணுவாய்த் தெறித்த வலியின் வேதனையை மறைக்க முடியவில்லை. "அ...ம்...மா" என்று வாய் விட்டுக் கதறி அதை வெளிப்படுத்தாதிருக்கவும் முடியவில்லை.

அவன் கவலையுடன் அவளைப் பார்த்தான்.

வெளியே கால் பூட்ஸ் ஓசை கேட்டது. "டாக்டரய்யா வராரு!" என்று சொல்லிக் கொண்டே வேலைக்காரி வந்தாள். கட்டிலிலிருந்து கீழே இறங்கி நின்று கொண்டான் ஜானகிராமன்.

"'குட் ஈவினிங்' மிஸ்டர் ஜானகிராம்!" என்று சொல்லிக் கொண்டே வந்த டாக்டர் கட்டிலருகே வந்து, "இப்போ நேற்றைவிடக் கொஞ்சம் தேவலையா அம்மா?" என்று கேட்டார்.

சிரமப்பட்டு எப்படியோ எழுந்து உட்கார்ந்து கொண்டாள் புஷ்பா. டாக்டர் அவளைப் பரிசோதித்துக் கொண்டிருக்கையில், 'அவர் முகத்தோற்றத்திலிருந்து எதையேனும் புரிந்து கொள்ள முடியுமா' என்ற ஆராய்ச்சியில் இருந்தான் ஜானகிராமன்.

"கொஞ்ச ரத்தமா உடம்பிலிருந்து வெளியேறியிருக்கு? அதனாலே ஒரே தளர்ச்சியா இருக்கு. உடம்பை அலட்டிக்கக் கூடாது. நான் போய் மருந்து கொடுத்தனுப்பறேன். நாளடைவில்தான் உடம்பு பழைய உடம்பாக ஆகணும்" என்றார் டாக்டர்.

"இந்தா, ரங்கம்மை! அம்மாவை மெதுவாய்ப் பிடிச்சுப் படுக்க வை!" என்று வேலைக்காரிக்கு உத்தர விட்டு விட்டு டாக்டருடன் நடந்தான் ஜானகிராமன்.

"ஏற்கெனவே உடம்பு ரொம்ப பலவீனம். அதிலும் இந்தக் கருச் சிதைவு காரணமாய் ரத்தமே சுத்தமாய் இல்லாமல் போய்விட்டது! மெள்ள மெள்ளத்தான் தேறணும்!" என்று வழக்கமான தோரணையில் பேசிக் கொண்டு போனார் டாக்டர்.

அவர்கள் வாசலுக்கு வந்து விட்டார்கள். 'போர்ட்டிகோ'வில் நின்ற காரின் கதவைத் திறந்து கொண்டு உள்ளே ஏறி உட்கார்ந்தார் டாக்டர். ஏதோ பலமான யோசனையில் இருப்பது போன்ற பாவம் முகத்திலே ஏறியிருந்தது.

"இப்போ இருக்கிற உடம்பிலே சின்ன அதிர்ச்சியைக்கூட அவங்க மனசு தாங்க முடியாது. இது விஷயத்திலே கொஞ்சம் ஜாக்கிரதையா இருக்கணும். எந்த விதமான ஏக்கமும் ஏமாற்றமும் ஏற்படாமல் பார்த்துக்குங்கோ! நான் வரட்டுமா?"

டாக்டர் காரின் கதவைப் பட்டென அடைத்துக் கொண்டார். 'கர்...கர்' என்ற சத்தத்துடன் கார் ஓடி மறைந்தது.

அந்தப் பிரம்மாண்டமான வீட்டில் மூலை முடுக்குகளிலெல்லாம் மின்சார விளக்குகளின் ஒளி பளிச்செனப் பரவியிருந்தது. வாசல் திண்ணையில் வேலைக்காரர்கள் இரண்டு பேர் ஜானகிராமன் இடும் ஏவலைச் செய்யக் காத்துக் கிடந்தனர். புஷ்பாவுக்கு வேண்டியதைச் செய்ய ஏற்கெனவே நர்ஸாக இருந்து அனுபவம் பெற்ற ரங்கம்மை அமர்த்தப்பட்டாள். சமையல் வேலைகளைக் கவனிக்க வேறு ஆள் இருந்தாள். வேண்டிய செலவுக்குப் போதுமான பணம் அவன் பையில் எப்போதும் புரண்டது. ஊரிலேயே பெரிய கண்ணாடித் தொழிற்சாலையின் நிர்வாகம் அவனிடம் இருந்தது. தொழிலாளிகளின் அபிமானமும், ஆதரவும் அவனுக்குப் பரிபூரணமாகக் கிடைத்தது.

ஆனால் அவன் வாழ்க்கையில் எதிர்பார்த்த மன அமைதி அவனுக்குக் கிடைக்கவில்லை. அதிலும் புஷ்பாவுக்கு உடம்புக்கு வந்ததிலேயிருந்து அவன் மனத்திலே சதா சர்வதா வேதனைச் சிந்தனைகள் சுழித்துப் பொங்கின.

அவன் உள்ளே போனபோது, கையில் ஏதோ புஸ்தகத்தைப் பிரித்து வைத்துக் கொண்டிருந்தாள் புஷ்பா.

அருகே அவன் வந்ததும், புஸ்தகத்தை மூடி வைத்து விட்டு அவள் அவனைப் பார்த்தாள்.

"இந்த உடம்போடே புஸ்தகமெல்லாம் படிக்கணுமா, புஷ்பா?" என்றான் அவன் அவளுக்கருகே கட்டிலில் உட்கார்ந்து கொண்டே.

"பொழுதைத்தான் பின்னே எப்படிப் போக்குகிறது?" என்று கேட்டாள் அவள்.

அவன் அவளருகே கிடந்த அந்தப் புஸ்தகத்தை எடுத்துப் புரட்டினான்.

'முகுந்தமாலை — ஸ்தோத்திரப் பாடல்கள்' —அவன் முகத்தைச் சுளித்தான்.

அவன் இருக்கும் இந்த உடல் நிலையிலே அவளுக்குப் பிடிக்காத விஷயத்தைப்பற்றி அவளிடம் பேசுவானேன் என்று அவனுள்ளேயே ஒரு எண்ணம் ஓடியது.

"உடம்பை வீணாக அலட்டிக் கொள்வானேன் என்று சொன்னேன். அவ்வளவுதான்" என்று சொல்லிக் கொண்டே புஸ்தகத்தை மூடிக் கீழே வைத்தான், ஞானகிராமன்.

வாசலில் மோட்டார் காரின் ஹார்ன் சப்தம் கேட்டது.

"நம்ம கஷ்டம் அவாளுக்கு எங்கே புரியறது? ஏதோ நாடகமாம். அந்தக் கம்பெனி முதலாளி தான் வந்திருக்கார் காரிலே! நான் போய் வரட்டுமா, புஷ்பா!" என்று சொல்லிவிட்டு எழுந்தான் அவன்.

"ரங்கம்மா, அம்மாவைக் கவனிச்சுக்கோ! எங்கேயும் வம்பளக்கப் போயிடாதே!" என்று கூறிவிட்டு வாசலுக்குப் போனான்.

தலையை உயர்த்தி, அவன் போவதைப் பார்த்து விட்டு மறுபடியும் தலையணையில் சாய்ந்து கொண்டாள் புஷ்பா.

பக்கத்தில் கிடந்த 'முகுந்த மாலை' புஸ்தகத்தை எடுத்துக் கண்களில் ஒற்றிக் கொண்டாள். அவள் கண்களிலே துளித்திருந்த நீர் முத்துக்கள் புஸ்தகத்தின் மேலட்டையை நனைத்தன.



"பகவானே! அவர் உன்னைக் கனவிலே கூட நினைக்கிறாரோ, என்னவோ? அதற்காக அவரை ஒன்றும் செய்து விடாதே! அவர் நல்லவர். யாரோ அவர் மனசைக் கலைத்து விட்டார்கள். நீதான் அவர் மனசை மாற்றி நல்ல படியாக எங்களை வாழ வைக்கணும்" என்று தனக்குள் வேண்டிக் கொண்டாள்.

★

அவள் படித்த பெண்தான். கல்லூரி வாழ்க்கையையும் அனுபவித்து பி. ஏ. பட்டம் பெற்றவள். அறிவின் சாதனைகளையும், விஞ்ஞானத்தின் விளைவுகளையும் பற்றி அவளும் ஓரளவு அறிந்திருந்தாள். கலாசாலைப் படிப்போடு மட்டுமின்றி அறிவியல் நூல்கள் பலவற்றின் மூலம் விஞ்ஞான வளத்தைப் பற்றி நன்றாகத் தெரிந்து கொண்டிருந்தாள்.

மேனாட்டுக்குச் சென்று கல்வி கற்றுத் திரும்பிய ஞானகிராமன், தன் மனத்திலே கற்பனை செய்து வைத்திருந்த லட்சியப் பெண்ணின் லட்சணங்கள் புஷ்பாவிடம் இருந்ததனால் தான், அவளை மணந்து கொள்ளச் சம்மதித்தான். புஷ்பாவின் தகப்பனார் ஸப் கலெக்டராக இருந்து 'ரிடையர்' ஆனவர். மேலும் ஞானகிராமனின் சொந்த ஊர்க்காரர். எப்படியோ அவளுக்கும் அவனுக்கும் காலம் முடிச்சுப் போட்டு வைத்துவிட்டது.

கலியாணமாகி ஓரிரண்டு மாதங்களிலேயே புஷ்பாவைத் தன்னுடன் அழைத்து வந்து விட்டான். அவன் கண்ணாடித் தொழிற்சாலை கன ஜோராய் நடந்து கொண்டிருந்தது. ஊருக்கு ஒதுக்குப் புறமாய் மேட்டு நிலத்தில் அமைந்திருந்த மாடி வீடு, வேலையாட்கள், கச்சேரி, சினிமா, விருந்து, நாடகம் என்று அமர்க்களப் பட்ட அந்தப் புது மண வாழ்க்கை அவளுக்கு மிகவும் பிடித்திருந்தது. தனது மகிழ்ச்சி நிறைந்த புதுக் குடித்தனத்தைப் பற்றிப் பெருமிதத்துடன் ஊருக்குக் கடிதங்கள் எழுதினாள் அவள்.

ஐப்பசி மாதம் பிறந்தது. தலை தீபாவளிக்கு ஊருக்குப் புறப்பட்டு வரும்படி அவள் தகப்பனார் கடிதம் எழுதியிருந்தார். அந்தக் கடிதத்தைப் படித்ததும் தலைகால் தெரியாத மகிழ்ச்சியில் துள்ளினாள் அவள்.

உள்ளே ஊஞ்சலில் உட்கார்ந்து கற்பனையில் ஆழ்ந்து கிடந்த அவள் காதுகளில் வாசலில் கார் வந்து நின்ற சப்தமும், அதிலிருந்து ஞானகிராமன் இறங்கித் 'தடதட'வென்று படிகளில் ஏறும் ஓசையும் கேட்டன. துள்ளிக் குதித்து, தலைப் பின்னல் அசைந்தாட மாடிப் படிகளில் அவனைத் தொடர்ந்தாள், புஷ்பா.

மாடி ஹாலில் சுழல் நாற்காலியில் உட்கார்ந்து பூட்டைக் கழற்றிக் கொண்டிருந்தான் ஞானகிராமன். மாடிப் படிகளின் மேல் படியில் வந்து கைப்பிடிச் சுவரில் சாய்ந்து

நின்றாள் அவள். அவள் முகத்திலே மகிழ்ச்சி அலை தெரிந்துக் கொண்டிருந்தது.

"என்ன ராணியம்மா, அங்கேயே நிற்கி றீங்களே!" என்றான் கேலியாக.

"போதுமே!" என்று முகத்தை நொடித்துக் கொண்டே ஆடி நடந்து வந்தாள் அவள்.

"உங்களுக்கு வந்த கடிதாசை நான் பிரிச்சுப் பார்த்துட்டேன். கோபமில்லையே!" என்று கொஞ்சலாகக் கேட்டாள் அவள்.

"ரொம்ப ரொம்பக் கோபம்! எங்கே அக்கடிதாசை இப்படிக் கொடு!" என்றான் கோபம் கொள்வது போன்ற பாவனையுடன்.

"கோபித்துக்கொண்டால் நான் அதை எப்படிக் கொடுப்பேனாம்!" என்றாள் அவள்.

அவன் சிரித்தான். அவளும் சிரித்துக் கொண்டே, தான் கொணர்ந்திருந்த கடிதத்தை அவன் கையில் கொடுத்தாள்.

"அப்பா எழுதி யிருக்கார். அதனால்தான் பெண்ணு இத்தனை துள்ளுகிறது!" என்றான் ஜானகிராமன், அவளைப் பார்த்துச் சிரித்துக் கொண்டே.

"படித்துவிட்டுத்தான் பேசுங்களேன்!" என்றாள் புஷ்பா. அவளுக்கு அவ்வளவு ஆத்திரம். அவன் பேசாமல் படித்து முடித்தான். படிக்கும்போதே ஏதோ ஏளனம் தோய்ந்த நகைப்பு அவன் முகத்திலே தோன்றி மறைந்தது.

"தீபாவளி, கார்த்திகை என்று பட்டாசு சுட்டு விளையாடுவதற்கு நாம் குழந்தைகளா, புஷ்பா?" என்று கேட்டான் அவன் கடிதத்தை மடித்து வைத்துக் கொண்டே.

அவன் குரலிலே இருந்த தீவிரமும், கண்டிப்பும் அவளது சொந்த அபிப்பிராயத்தை அமுங்க அடித்து விட்டன.

இன்ன செய்வது என்று புரியாமலே 'உம்' என்று தலையை ஆட்டி விட்டாள் புஷ்பா.

தலை தீபாவளிக்கு அவர்கள் ஊருக்குப் போகவில்லை.

அவள் மனசை ஏதோ ஒன்று அரித்துத் தின்று கொண்டிருந்தது. ஊருக்குத் தான் போகவில்லை. இங்கேயாவது பண்டிகை தினத்தைக் கொண்டாடலாம் அல்லவா? மற்ற விஷயங்களில் எல்லாம் அவளிடம் கொஞ்சிக் கொஞ்சிப் பேசும் ஜானகிராமன் இதைப் பற்றிய பேச்சை எடுத்தாலே முற்றிலும் மாறிப் போய் விடுகிறானே!

தீபாவளி நாளன்று காலையில் கண் விழித்ததும் அவளுக்கு ஊரின் நினைவுதான் வந்தது. அங்கே இப்போது எத்தனை கோலாகலமாக இருக்கும்? இங்கே மட்டும் என்ன? இவர் மனசு வைத்தால்......

அன்று முழுவதும் அவளுக்கு என்னவோ பைத்தியம் பிடித்தது போல இருந்தது.

கார்த்திகை வந்தது.

மாடி வராந்தாச் சுவரில் வரிசையாக அகல் விளக்குகள் ஏற்றிவைத்தால் எத்தனை அழகாக இருக்கும் என்று எண்ணிக் கொண்டாள், புஷ்பா. விளையாட்டுப் போல ஜானகிராமனிடம் சொல்லியும் பார்த்தாள்.

"சூரிய வெளிச்சத்திலே மெழுகுவர்த்தியை ஏற்றி வைக்கப் பாரேன்! இத்தனை மின்சார விளக்கு வெளிச்சமும் வெளிச்சமாகத் தோன்றவில்லை யாக்கும்!" என்று கொடுத்து விட்டான் அவன்.

அவள் மனத்திலே தலை தூக்கிய தெய்வ பயம் நன்றாய் ஓங்கி வளர்ந்தது.

இந்தப் போராட்டத்தை, இதனால் விளைந்த நெஞ்சப் பளுவை எல்லாம் புஷ்பா யாரிடமும் தெரிவிக்கவில்லை. ஊருக்குக் கடிதம் எழுதும் போதெல்லாம் தனக்கு இங்கே இருக்கும் சௌகரியங்களைப் பற்றித்தான் வர்ணித்திருந்தாளே தவிர வேறொன்றுமே எழுதவில்லை.

நாட்களின் ஓட்டத்தில், அவள் மனத்தின் மூலையில் தெய்வ பயம் முளைத்து வளர்ந்து கொண்டிருக்கும்போதே அவள் வயிற்றிலே கருவும் வளர்ந்தது. ஜானகிராமன் மகிழ்ந்து போனான்.

அவளுக்கு வேண்டிய பணி விடைகளைச் செய்ய நர்ஸ் ரங்கம்மையை வீட்டோடு இருக்க வேலைக்கு அமர்த்தினான் அவன்.

நான்கு மாதம் ஆயிற்று. இந்த நான்கு மாதங்களுமே அவளுடம்பை ஏதாவது படுத்திக் கொண்டே தான் இருந்தது. தனக்குச் சற்றே தலையை வலித்தாலும் தெய்வத்தை அறவே மறந்து வாழ்வதனால் நேர்ந்த விபரீதம் தானோ இது என்று எண்ணிக் கலங்கினாள் புஷ்பா. அவள் எண்ணத்தை



உறுதிப் படுத்துவதற்கே ஏற்பட்டது போல் தாங்கமுடியாத வயிற்றுவலி அவளைத் திடீரென்று வந்து தாக்கியது.

அந்த வட்டாரத்திலேயே பிரசித்தி பெற்ற டாக்டர் வந்து பார்த்தார்.

அவள் வயிற்றிலே ஜனித்திருந்த 'கரு' சிதைந்து விட்டது. அதனால் விளைந்த பலவீனத்தை விட அதற்குக் காரணத்தை ஆராய்வதன் பயனாய் அவள் மனசுக்குள் தலை நீட்டிய தெய்வ பயம்தான் அவளை உருக்குலைத்து விட்டது.

ஜானகிராமன் அதிர்ந்து போய் விட்டான்.

ஊரிலேயிருந்து புஷ்பாவின் தகப்பனார் வந்தார், பெண்ணை ஊருக்கு அழைத்துப் போகலாம் என்ற எண்ணத்துடன். ஆனால் 'இந்த நிலையில் அவள் பிரயாணம் செய்வது உசிதமில்லை' என்று டாக்டர் கூறி விட்டார். இரண்டு வாரங்கள் தங்கியிருந்து மறுபடியும் அவர் தம் ஊருக்குத் திரும்பி விட்டார்.

தன் மனத்தை அரிக்கும் பீதியையும் போராட்டத்தையும் பற்றித் தந்தையிடம் புஷ்பா ஒரு வார்த்தை சொல்ல வில்லை. தனக்குள்ளேயே அதைப் புழுங்க வைத்து மறுகினாள். தான் செய்த அபசாரங்கள்தான் இந்தக் கருச் சிதைவுக்குக் காரணம் என்று அவள் மனசு தீர்மானமாக முடிவு கட்டி விட்டது. இந்த நினைப்பிலேயே தன்னை மாய்த்துக் கொள்ளும் அவளிடம் நோயும் க்ஷீணமும் 'எங்கே, எங்கே' என்று தொற்றிக் கொண்டன.

அவள் வயிற்றுப் புண்ணை ஆற்றுவதற்குத் தான் வைத்தியர்களால் மருந்து கொடுக்க முடிந்தது. அவள் மனத்திலே சீழ் பிடித்திருக்கும் புண் இருப்பதை அவர்களால் புரிந்து கொள்ளக்கூட முடியவில்லை.

உண்மையில், புஷ்பா தன் வியாதியைப் பற்றிக் கூட அவ்வளவாகக் கவலைப்பட வில்லை. ஒரு நாளில்லா விட்டால் ஒரு நாள் தெய்வத்தின் கோபத்துக்கு ஜானகிராமன் எங்கே ஆளாகி விடுவானோ என்றுதான் அவள் பயந்தாள். விழித்துக் கொண்டிருக்கும் போதெல்லாம் அவளுக்கு ஒரே தெய்வ சிந்தனை! அம்பிகையின் நாம உச்சாடனம்! அதைக்கூட இரைந்து முணு முணுக்க மாட்டாள், மனத்திற்குள்தான்.

அன்றைக்கு நர்ஸ் ரங்கம்மை 'முகுந்த மாலை' புஸ்தகம் கொண்டு வந்திருந்தாள். கோவிலுக்குத் தான் போகவில்லை. போக முடியவில்லை இந்த ஸ்தோத்திரங்களையாவது சொல்லிக் கொண்டிருப்போமே என்று அவளுக்குத் தோன்றியது.

அந்தச் சுலோகங்களைப் படித்த போது அவளுக்கு ஏதோ சற்று மனப் பளு குறைந்தது போல இருந்தது. படுத்தவாறே அந்தப் புத்தகத்தைப் புரட்டி அதன் பக்கங்களில் அருளுருவைக் காண முயன்றாள் புஷ்பா.

★

அடுத்த நாள் காலையில் ஜானகிராமன் அவளருகே வந்தபோது அவள் முகுந்த மாலையின் வரிகளில் தான் ஆழ்ந்திருந்தாள். 'இந்த உடம்போடு இந்தப் புஸ்தகத்தைக் கட்டிக் கொண்டு உயிரை விடுகிறாளே!' என்று எண்ணிக் கொண்டான் அவன். அவன் வந்ததைக் கூடக் கவனிக்காமல் அவள் சுவாரஸ்யமாய் ஏதோ சுலோகத்தைப் படித்துக் கொண்டிருந்தாள். இந்த நொந்த உடல் நிலையில் அவளுக்கு அந்தப் புஸ்தகத்திலிருந்த ஈடுபாடு அவனுக்கு ஆச்சரியமாய் இருந்தது.

அவன் வந்து கட்டிலில் தன் பக்கத்தில் உட்கார்ந்த பின்புதான் அவள் அவனைக் கவனித்தாள்.

"நேற்றைக்கு நாடகம் எப்படியிருந்தது?" என்றாள் புஷ்பா, புஸ்தகத்தை மூடிக் கொண்டே.

"உன் உடம்பைச் சொல்லு முதலிலே!"

"நேற்றைய விட இன்றைக்குக் கொஞ்சம் வலி விட்டிருக்கிறது" என்று கூறினாள் அவள். புஷ்பாவின் பேச்சிலே நிஜமாகவே ஓரளவு தெளிவு இருந்தது.

"நேற்றைக்கு நாடகம் எப்படியிருந்தது என்று கேட்டேன். பதிலே சொல்ல வில்லையே!" என்று மறுபடியும் கேட்டாள்.

"நன்றாய்த்தான் இருந்தது. ஆனால் நீ இல்லாமல் நான் மட்டும் தனியே பார்க்கிறது என்றால் எனக்கு எதுவுமே ரஸிக்கிறதில்லை."

அவள் முகத்தில் பெருமிதத்தின் புன்னகை படர்ந்தது.

அவன் எழுந்து குளிக்கப் புறப்பட்டான். கட்டிலி லிருந்து அவன் எழுந்ததுமே அவள் புஸ்தகத்தைக் கையில் எடுத்துக்கொண்டாள். அவனுக்கு அவள் செய்கை வியப்பாயிருந்தது. "இந்த உடம்பு வலியோடேயே படிச்சு வேறு ஏன் சிரமப்படுத்திக் கொள்கிறாய்?" என்றுதான் அவன் கேட்க நினைத்தான். ஆனால், டாக்டர் அவனிடம் தனிமையில் சொல்லியிருந்தவை நினைவுக்கு வந்தன.

"உங்க மனைவிக்கு என்னமோ மனசுதான் ரொம்ப அதிர்ந்து போயிருக்கு. அவங்களைக் கொஞ்சம் சந்தோஷமா இருக்கும்படி பார்த்துக்குங்க! உடம்பு தன்னாலே நாளா வட்டத்திலே தேறிப்போகும்!" என்று முந்தின நாளிரவு நாடகக் கொட்டகையில் அவனைச் சந்தித்தபோது டாக்டர் கூறியிருந்தார்.

எப்படியாவது அவள் உடம்பு தேறினால் சரிதான் என்று எண்ணிக் கொண்டான் அவன். அவளுக்கு அப்படி என்ன மனக் கஷ்டம் இருக்கும் என்று யோசித்தான். எந்த விதமான சௌகரியத்துக்கும் குறைச்சல் இல்லாமல் செய்து வைத்திருக்கிறானே அவன்? அப்படியிருக்கையில் அவளுக்கு மனக் கஷ்டம் எப்படி வந்திருக்கும் என்று தான் அவனுக்குப் புரியவில்லை. எதற்கும் இன்னும் கொஞ்ச நாளைக்கு அவள் என்ன செய்தாலும் அதற்கு எதிராக ஒன்றும் பேசுவதில்லை என்று தனக்குத் தானே தீர்மானித்துக் கொண்டான். அவனது நடத்தையில் ஏற்பட்ட இந்த மாறுதல் வியப்பாயிருந்தாலும் ஒரு வகையில் புஷ்பாவுக்கு அது மிகவும் அனுகூலமாக இருந்தது.

ஒரு வாரம் ஓடி விட்டது.

புஷ்பாவின் உடம்பு முன்னைவிடக் கொஞ்சம் தேறியிருந்தது. வீட்டினுள்ளே தாராளமாய் எழுந்து நடமாடினாள். டாக்டர் கூட அவ்வளவு சீக்கிரத்தில் அவள் இவ்வளவு தேறுவாள் என்று எதிர்பார்க்கவில்லை. ஞானகிராமனுக்கு இப்பொழுதுதான் போன மூச்சுத் திரும்பியது போல இருந்தது.

பழைய 'குஷி' திரும்பிக் கொண்டிருந்தது.

அன்று தொழிற்சாலையில் வருஷாந்தரக் கொண்டாட்டம். இரவு திரும்புவதற்கு வெகு நேரமாகும் என்று காலையில் 'பாக்டரி'க்குப் புறப்படும்போதே சொல்லிவிட்டுப் போயிருந்தான் ஞானகிராமன். ஆனால் எதிர்பாரா வகையில் சில சாமான்களை எடுத்துப் போக சாயங்காலம் ஆறு மணிக்கு வீட்டுக்கு வரும்படி நேர்ந்தது.

அவனே தன் காரை எடுத்துக் கொண்டு புறப்பட்டான்.

பாதி வழி வந்து கொண்டிருக்கும் போதே தூரத்திலே தெரிந்த அம்மன் கோவில் வாசலில் அவன் கண்ட காட்சி அவனைத் திடுக்கிட வைத்தது. புஷ்பாவும் ரங்கம்மையும் அம்மன் கோவிலுக்குள் நுழைந்து கொண்டிருந்தனர். புஷ்பா கையில் பூக்குடலை இருந்தது.

அன்று வீட்டுக்குத் திரும்பியதும், அவள் தான் அவனைக் கோவிலில் பார்த்ததாகக் காட்டிக் கொள்ளவேயில்லை.

ஆனால், மற்ற எல்லா நாட்களையும் விட அவள் முகத்திலே அசாதாரண அமைதியும், மகிழ்ச்சியும் பொங்கிப் பெருகின. அவனுக்கு இதைப் பார்க்க வியப்பாயிருந்தது.

அன்றிரவு சரியான தூக்கமே இல்லை. என்னென்னவோ யோசனைகளுடன் புரண்டான்.

அதன் பின் புஷ்பாவின் போக்கைத் தினமும் அணு அணுவாய்க் கவனிக்கத் தொடங்கினான். வெள்ளிக் கிழமை தோறும் அவள் கோவிலுக்குப் போய் வருவது பற்றி அவளும் அவனிடம் ஒன்றும் தெரிவிப்பதில்லை அவனும் விசாரிப்பதில்லை. ஆனால், கோவிலுக்குப் போகத் தொடங்கிய நாளிலிருந்தே அவள் உடலில் புதியதொரு தெம்பும், தைரியமும் பிறந்திருந்தன. அவளிடத்தில் ஏற்பட்ட இந்த அபூர்வ குணம் அவனை ஆச்சரியத்தில் ஆழ்த்தியது.

கிட்டத்தட்ட ஒரு மாதத்தில் அவள் பழைய புஷ்பாவாகவே ஆகிவிட்டாள்.

அன்று இருட்டுப் பரவும் வேளையில் ஞானகிராமனும் டாக்டரும் காரில் வந்து கொண்டிருந்தனர். புஷ்பாவின் வைத்தியம் தொடங்கிய நாளிலிருந்து டாக்டர் அவனது அத்யந்த நண்பராக ஆகியிருந்தார்.

"உங்க மனைவி எதையோ நினைச்சுக் கஷ்டப்பட்டுண்டே இருந்திருக்கா, ஸார்! அது ஒரு வேளை சாதகமா ஆகியிருக்கணும். அதனால்தான் இவ்வளவு சீக்கிரத்தில் இந்த 'இம்ப்ரூவ்மெண்ட்'!" என்றார் டாக்டர், ஏதோ பேச்சின் இடையே.

ஞானகிராமன் கண்களில் பாதையோரத்தில் சற்றுத் தள்ளி நின்ற அம்மன் கோவில் விளக்கொளி தெரிந்தது. தெய்வம், கோவில், பண்டிகை என்ற வழி வழி வந்த பண்பாட்டில் ஊறியிருந்த அவன் மனைவியின் மனத்திலே மின்னொளிரும் நம்பிக்கைச் சுடரையும் அதனூடே அவன் கண்டான்.

அந்த நம்பிக்கைச் சுடரின் குளிரொளிபட்டு புஷ்பாவின் மேனியில் புது மெருகு ஏறுவதை அவன் மானஸிகமாய்ப் பார்க்க முடிந்தது.

டாக்டர் இறங்க வேண்டிய இடம் வந்தது. "நான் வரேன் ஞானகிராம்" என்று சொல்லிவிட்டு டாக்டர் இறங்கிப் போனார். மறுபடியும் மனத்திலே புரண்ட யோசனைகளுடன் மேலே காரை ஓட்டினான் ஞானகிராமன்.

பிடிபடாத லட்சியங்களும், கொள்கைகளும் மனித வாழ்வில் செய்ய முடியாத அதியற்புத மன அமைதியையும், உள்ள நிறைவையும் நம்பிக்கைச் சுடர் தருவதை அவனால் உணர முடிந்தது.

வைத்தியங்களுக்கும் கட்டுப்படாத அவளது உடல் மெலிவை, தீர்க்கும் அருமருந்தாய் அவளுள்ளேயே கனன்ற அந்தத் தெய்வீக நம்பிக்கையை நினைத்தபோது அவனுக்கு மேனியெல்லாம் புல்லரித்தது.

அவன் வீட்டுக்குள் நுழையும்போது, ரேழியின் ஓரமாய்க் கிடந்த கல்மணையில் தேய்த்துப் பொட்டிடப் பட்டிருந்த குத்துவிளக்கை ஏற்றி நமஸ்கரித்துக் கொண்டிருந்தாள்.

ஞானகிராமனின் கரங்கள் அவனையறியாமலே கூப்பின.

புஷ்பா திரும்பிய பொழுது கூப்பிய கரங்களுடன் விளக்கெதிரே ஞானகிராமன் நிற்கும் ஆச்சரியம் காத்திருந்தது.

அவள் கண்கள் அகல விரிந்தன. கண்களின் ஓரத்தில் திரையிட்ட 'அவர் என்ன சொல்லப் போகிறாரோ' என்ற பயம் தானாகவே விலகி மறைந்தது. மகிழ்ச்சி அவள் உள்ளத்தில் நிறைந்து பொங்கியது.

"இப்பத்தானே உடம்பு நன்றாய்க் குணமாயிருக்கிறது! இன்றைக்கு ஆடி வெள்ளிக் கிழமை. அதனால்தான் உள்ளேயிருந்து இந்த விளக்கை எடுத்துத் தேய்த்து ஏற்றி வைத்தேன்!" என்றாள் அவள்.

ஞானகிராமன் உள்ளத்திலேயும் புதிதாய்ப் பளபளவென நின்ற குத்து விளக்கின் குளிர் ஒளி பரவிக் கொண்டிருந்தது.



### எப்படி வேலை?

"நான் சிபாரிசு செய்து அனுப்பினேனே, அந்தப் பையன் நேராக வேலை செய்கிறானா?"

"ஆமாம். அப்படித்தான் செய்கிறான். அவன் உடம்பை வளைப்பது கூடக் கிடையாது!"




## 11. பாடுங்கள்! பாடுங்கள்!

மன்னர்களுக்குக் குடை பிடிக்கிறார்கள் என்றால் மழைக் கல்ல; வெயிலுக்கும் அல்ல. கொலு மண்டபத்துக்குள்ளும் பிடிக்கிறார்கள் அல்லவா? மன்னர்கள் குடிகளை நன்றாய்ப் பாதுகாத்து வருகிறார்கள் என்பதைக் குறிக்கு மடையாளம் குடை. அவ்வளவுதான்.

இன்னொரு விஷயம்: குடைக்கு வெளிப்புறம் செம்பட்டும் சரிகையும்; உள்ப்புறம் வெண்பட்டு. செம்பட்டும் சரிகையும் மிக்க பிரகாசத்தோடு கண்ணைக் கூசச் செய்யும்.

உள்ப் பக்கத்திலுள்ள வெண்பட்டோ சந்திரனது நிலவுபோல்க் குளிர்ந்த பிரகாசத்தைக் கொடுத்துக் கொண்டிருக்கும்.

செம்பட்டும் சரிகையும் அயல் நாட்டரசரை பயமுறுத்தும்; வெண் பட்டு தன் நாட்டு மக்களுக்குப் பாதுகாப்பை அளிக்கும் என்பது குறிப்பு.

இன்றைய ராஜாங்கக் குடைகளிலும் இந்த நிற வித்தியாசம் உண்டு.

தொண்டைமானது ராஜ்யம் விரிந்து கொண்டே போகிறது. பல தேசத்து மன்னர்கள் தொண்டைமானது ஆணைக்கு உட்பட்டுக் கப்பம் கட்டி வருகிறார்கள்.

பார்த்தார் கவிஞர். குடை விரிந்து கொண்டே போவதாகத் தெரிகிறது; தோற்றந்தான்.

கொலு மண்டபத்து மேடையின் முகப்புக்கு வருகிறார். இடது பக்கத்தில் உட்கார்ந்திருக்கும் புலவர்களைப் பார்த்துக் கையை உத்ஸாக பாவத்தோடு காட்டி, "பாடுங்கள்! பாடுங்கள்!" என்கிறார்.

பிறகு வலது பக்கத்தில் இருக்கும் புலவர்களைப் பார்த்து, "பாடுங்கள் பாடுங்கள்" என்று முழங்குகிறார்.

கடைசியாக மேடைக்கு எதிரிலே உட்கார்ந்திருக்கும் பெரிய பெரிய கவிஞர்களைப் பார்த்துச் சொல்லுகிறார்: "உங்கள் நாவில்த்தான் உண்மையான தமிழ்ப் பாடல்கள் வந்து சப்பணம் போட்டு உட்கார்ந்திருக்கின்றனவே. கேட்பானேன்! உங்கள் பாட்டெல்லாம் கடாக்ஷம் வாய்ந்த பாடல்கள்தான். பாடுங்கள்! நன்றாய்ப் பாடுங்கள்!" என்று உத்ஸாகப் படுத்துகிறார், ஆஸ்தான வித்வான்.

"பாடுகோ பாடுகோ!
பாடுகோ பாடுகோ!!
பாவிற் றிருந்த
புலவீர்காள் பாடுகோ!!!
ஞாயிற் றொளியால்
மதிநிழற்றே தொண்டையார்
கோவிற் றிருந்த
குடை!"

[ஞாயிற்று ஒளியால்: சூரியனது பிரகாசத்தோடு ஒளி வீசுகிறது வெளிப்புறம்; ஞாயிற்று என்பது ஞாயிற்று என்று நீண்டு கொண்டது. அதில் ஒரு தனியான இசைப் பண்பு. மதிநிழற்றே: சந்திரனது குளிர்ந்த நிழலோடு கூடியது குடை; பாடுங்கள் பாடுங்கள்.]

அழகான நாடக இயல் அமைந்திருக்கிறது பாடலில். அனுபவிக்க நாம் இருக்கிறோம்.




## 7. வீண் பழி

அந்தக் கூட்டத்திலிருந்த ஒவ்வொருவருடைய முகத்திலும் ஒரு ஆவலும் ஆர்வமும் தோய்ந்திருந்தன. அவர்கள் எவ்வளவு நேரம்தான் தங்கள் ராணியைப் பார்க்காமல் பொறுமையோடு இருப்பார்கள்! அந்தக் குழந்தையைப் பார்ப்பதற்காகத்தான் அவர்கள் அந்தக் குடிசை வரையில் வந்து நின்று கொண்டிருந்தனர்.

"இதென்ன கூட்டம்!" என்றாள் வள்ளி மிகுந்த ஆச்சரியத்துடன்.

"நாங்கள் எங்கள் ராணியைப் பார்க்க வந்திருக்கிறோம்......" என்ற குரல் வந்தது.

பெத்தண்ணன் அப்பொழுது அக் கூட்டத்தை விலக்கிக் கொண்டு முன்னால் வந்து, "வள்ளி! குழந்தையை எடுத்துக்கிட்டு வந்து எல்லோரிடமும் காட்டு. இனிமேல் அவங்க பொறுமையோடு இருக்க மாட்டாங்க" என்றான்.

அவள் சட்டென்று உள்ளே போய் ஏணையில் கிடந்த குழந்தையை எடுத்துக் கொண்டு குடிசைக்கு வெளியே வந்து எல்லோரிடமும் குழந்தையைக் காட்டினாள். அந்தக் கூட்டத்தினர் அவள் கையில் ஏந்தியிருந்த குழந்தையை ஒருவரையொருவர் தள்ளி நெருக்கிக் கொண்டு பார்த்தனர். அவர்களுக்கு அந்தக் குழந்தையைப் பார்க்க ஆவலும் ஆசையும் அதிகமாகியது. ஏனென்றால் அதைப் போல அவ்வளவு அழகான குழந்தை அது வரையில் அந்தக் கூட்டத்தில் யாருக்குமே பிறக்கவில்லை. அது அவர்கள் கண்ணுக்கு ராணியாக மட்டும் படவில்லை. வேறு ஏதோ அவதாரப் பிறவியாகவே அவர்களுக்குத் தோன்றியது.

குழந்தையைப் பார்த்தபின் அந்தக் கும்பலில் உள்ள பெண்கள் ஒருபுறமாகச் சென்று உட்கார்ந்து குழந்தையைப் பற்றிப் பேசலாயினர். போத்தியம்மாவும் சிறிது தூரத்தில் போய் உட்கார்ந்து அவர்கள் பேசுவதைக் கவனிக்கலானாள்.

ஒருத்தி வியப்போடு, "என்ன அதிசயம்! குழந்தை தங்கச் சிலைமாதிரி அல்லவா இருக்கிறது! ஜாடையிலே தகப்பனையும் கொள்ளவில்லை. தாயையும் கொள்ளவில்லை. ரொம்ப அழகாக இருக்கிறது. இந்தமாதிரிக் குழந்தையை நான் இதுவரை என் கண்ணாலே கண்டதில்லை......" என்றாள்.

"ஆமாம்! ஆச்சரியமாய்த்தான் இருக்குது. நம்ம கூட்டத்திலேயே இதை ஒரு தெய்வீகப் பிறவி என்றுதான் சொல்லணும்......" என்றாள் மற்றொருத்தி.

இந்த வார்த்தைகளெல்லாம் போத்தியின் செவியிலும் விழுந்தன. அவள் மனத்துக்கு வள்ளியின் குழந்தையைப் பற்றிப் பலரும் பெருமையாகப் பேசிக் கொள்வது எரிச்சலை உண்டாக்கியது. அவள் அக் கூட்டத்தினரிடம் 'அந்தக் குழந்தை அவர்களுடைய ராணியல்ல!' என்று சொல்லத் துடித்தாள். ஆனால் அவர்கள் கண்மூடித்தனமாக அந்தக் குழந்தையைக் கொண்டாடி மரியாதை செய்யும்போது அவர்களிடம் துணிந்து இந்த உண்மையைச் சொன்னால் அவர்கள் அதை நம்பாமல் அவளைக் கோபத்தில் ஏது வேண்டுமானாலும் செய்து விடலாமல்லவா! ஆனால் வஞ்சனை நிறைந்த அவளுடைய உள்ளம் தீவிரமாகச் சிந்தித்து வள்ளிக்கு ஏதேனும் கெடுதல் உண்டாக்க நினைத்தது. அந்தக் கூட்டத்தினரின் சுபாவமும் உணர்ச்சிகளும் அவளுக்கு நன்றாகத் தெரியும். ஆகவே, அந்தக் கூட்டத்தினரிடம் ஒரு சந்தேகத்தையும் கிளர்ச்சியையும் தந்திரமாக ஏற்படுத்தி விட அவள் முயற்சித்தாள்.

அவள் திடீரென்று ஒரு முடிவுக்கு வந்தவள் போல் அந்த ஸ்திரீகளின் கூட்டத்தில் போய் உட்கார்ந்தாள். அவள் அப்படித் திடீரென்று வந்து தங்களுக்கிடையே வந்து உட்கார்ந்தது மற்றவர்களுக்கெல்லாம் சிறிது ஆச்சரியத்தை உண்டாக்கியது. போத்தியம்மா அப்படி வந்தால் அதில் ஏதாவது விசேஷமிருக்கும் என்று அவர்களுக்குத் தெரியும். ஆகவே, அவர்கள் ஒவ்வொருவரும் அவளுடைய முகத்தை வியப்போடு பார்க்கலாயினர். போத்தியம்மா ஒரு தடவை கனைத்துக் கொண்டு பேச ஆரம்பித்தாள். "ஏ குவி! நீதானே சொன்னே, அந்தக் குழந்தை தெய்வமாக வந்து பிறந்திருக்கிறது என்று! ஹூம்! நீங்கள் எல்லாரும் பைத்தியக்காரிகள். அந்தக் குழந்தையைப் பார்த்தால் மல்லய்யனுக்குப் பிறந்ததாகத் தோணுதா! அல்லது அவனைச் சேர்ந்தவங்க ஜாடையிலாவது ஒட்டி இருக்குதா! முகம், மூக்கு, விழி எல்லாம் எப்படி இருக்குது!" என்றாள்.

அவளுடைய வார்த்தைகளுக்கு எவருமே அங்கு பதில் சொல்லவில்லை. எல்லோரும் அவளுடைய முகத்தையே பார்த்துக் கொண்டிருந்தனர். அவர்கள் அப்பொழுது இருந்த நிலைமை போத்திக்கு இன்னும் கொஞ்சம் தாராளமாகப் பேசுவதற்கு இடம் கொடுத்தது போலிருந்தது. அந்தக் கூட்டத்தில் பாதிப்பேர்களாவது தன்னுடைய வார்த்தைகளை நம்பினார்களானால் நிச்சயம் வள்ளிக்கு எதிராக ஒரு கிளர்ச்சியை உண்டாக்கி விடலாமென்று அவளுக்குத் தோன்றியது.

"அந்தச் சாகசக்காரி வள்ளி என்னிடமிருந்து தப்பிப் போய் இந்தக் குழந்தையைப் பெத்

றெடுத்ததற்குக் காரணம் என்ன? அவளுக்குத் தெரியும், நான் ஆதியிலிருந்து அவள்மீது சந்தேகம் வைத்திருக்கிறேன் என்று. எனக்கு அந்தக் குழந்தைக்குத் தகப்பன் மல்லய்யன்தானா என்ற சந்தேகம். இது இப்போ உலகமறியத் தெரிந்து போச்சு. வள்ளிக்குத் துளிகூட இந்தக் கூட்டத்திலே பிடிப்பில்லே ஆமாம்! நான் சொல்லி விட்டேன். இந்தக் குழந்தையையும் அவள் அப்படித்தான் வளர்க்கப் பார்க்கிறாள்.''

வள்ளி தன் கணவனுக்குத் துரோகம் செய்து வேறு யாரோ வெளி மனிதனிடம் கெட்ட நட்பு வைத்திருந்தாள் என்று அர்த்தப்படும் வகையில் போத்தியம்மா வார்த்தைகளை ஜோடித்துச் சொல்லி அந்த ஸ்திரீகளின் மனத்தில் வள்ளியைப் பற்றிக் கெட்ட அபிப்பிராயம் ஏற்படும்படி செய்தாள். அந்தச் செய்தி அந்தக் கூட்டத்தில் உள்ள ஆண் பெண் எல்லோருடைய செவிக்கும் எட்டிக் கதையாக வளர்ந்து விட்டது.

ஆதாரமில்லாமல் கட்டிவிடப் பட்ட இந்தக் கதை ஒவ்வொருவருடைய ரத்தத்தையும் கொதிப்படையச் செய்தது. பலர் அவளை அந்தக் குழந்தையோடு அந்த இடத்தை விட்டு அடித்துத் துரத்திவிட வேண்டுமென்று முடிவு கட்டி வள்ளியின் குடிசை வாசலில் வந்து நின்று பலவிதமான கேள்விகளைக் கேட்கத் தொடங்கினர். பலர் வசை மாரி பாடத் தொடங்கினர். வள்ளி குடிசைக்கு வெளியே வந்து பார்த்தாள். பலருடைய காரசாரம் போன்ற வார்த்தைகளைக் கேட்டு அவள் மனம் பொங்கிப் பொருமியது. அவமானமும் துக்கமும் அவள் நெஞ்சைப்பிளந்தன. இவையெல்லாம் போத்தியின் சூழ்ச்சிதானென்று அவளுக்கு எளிதாக விளங்கியது.

இந்த நெருக்கடியான நிலைமையில் பெத்தண்ணன் அங்கு தோன்றினான். மிகவும் பிரயாசையுடன் எல்லோரையும் அமைதியாக இருக்கும்படி சொல்லிவிட்டு, ''இந்த விஷயத்தை நாளையதினம் பல பெரியோர்கள் முன்னிலையில் வைத்து விசாரணை செய்து வள்ளியிடம் குற்றமிருக்குமாயின் தக்கபடி தண்டிக்கலாம்'' என்றான்.

எல்லோரும் அதற்குச் சம்மதித்து அவரவர் இடத்திற்குச் சென்று விட்டனர். வள்ளி மாத்திரம் தனித்திருந்து சிந்தனை செய்தாள். நாளைய தினம் அவளைப் பற்றி விசாரணை செய்யப் போகிறார்கள், அவள்மீது சுமத்






தப்பட்ட அருவருப்பான அபாண்டமான பழிக்காக, அவள் உண்மையில் குற்றவாளியா! தான் குற்றவாளி அல்ல என்பதை நிரூபித்துக் காட்ட அவளிடம் போதுமான ஆதாரங்கள் உண்டா! நாளைய தினம் விசாரணையில் அவள் என்ன சொல்லுவாள்! அந்தக் குழந்தையைப் பற்றி அவள் என்ன சொல்லுவாள்! அவள் தன் கணவனுக்குக் கனவிலும் துரோகம் நினைக்கவில்லை என்பது உண்மை. ஆனால் அந்தக் குழந்தை......! அது அவளுடைய குழந்தையல்லவே! அவளுடைய குழந்தை பட்டக்காரர் வீட்டில் அல்லவா இருக்கிறது! நாளைய தினம் விசாரணையில் உண்மையை மறைக்க முடியாது. அந்த உண்மை வெளியானால் எப்படி முடியுமோ!

அவள் எந்த ரகசியத்தையும் வெளியிட இஷ்டப்படவில்லை. அவள் அன்று இரவே அந்த இடத்தை விட்டுப் போய் விட வேண்டும் என்று தீர்மானித்தாள். பட்டக்காரர் வீட்டுக் குழந்தையை அவர்களிடம் கொண்டுபோய் ஒப்புவித்துவிட்டுத் தன் குழந்தையை அவர்களிட மிருந்து பெற்றுக் கொள்வதுதான் நல்லதாகப் பட்டது. பட்டக்காரரிடம் தன் துயரங்களைச் சொல்லி, தான் செய்த தவறுகளுக்கு மன்னிப்புக் கேட்டுக் கொண்டால் தன்னையும் தன் குழந்தையையும் அவர் தம் வீட்டோடு வைத்துக் கொள்ளச் சம்மதித்தாலும் சம்மதிப்பார். அப்படி அவர் சம்மதித்து விட்டால் வாழ்க்கையில் அவளுக்கு வேறு என்ன வேண்டும்!

போத்தியம்மா பெத்தண்ணனிடம் இரவு வேளையில் வள்ளி அந்த இடத்தை விட்டு ஓடிப் போனாலும் ஓடிப் போய் விடுவாள். பத்திரமாகப் பார்த்துக் கொள்ளு என்று எச்சரித்திருந்தாள். பெத்தண்ணன் அதைப் பற்றி அவள் கவலைப்பட வேண்டா மென்றும், தான் பார்த்துக் கொள்வதாகவும் சொன்னான்.

நடு இரவு. எங்கும் அமைதி சூழ்ந்திருந்தது. வள்ளியின் மனத்தில் ஒரு பயம், தன்னை வஞ்சம் தீர்க்க நினைக்கும் போத்தி நாம் இரவில் எங்காவது ஓடி விடுவோம் என்று முன் எச்சரிக்கையாக அதற்கு வேண்டிய பாதுகாப்பு ஏற்பாடுகளைச் செய்திருப்பாளோ என்று! எப்படி இருந்தால் என்ன! வள்ளி அன்று இரவு ஒருவருக்கும் தெரியாமல் போய்விடுவது என்று தீர்

மானித்து விட்டாள். ஆகவே, அவள் அந்தக் குழந்தையை ஒரு துணியால் மூடிப் பத்திரமாக அணைத்து எடுத்துக் கொண்டு மெதுவாகக் குடிசைக்கு வெளியே வந்தாள்.

எல்லோரும் அந்தத் திறந்த வெளியில் அப்படியும் இப்படியுமாக மூலைக்கு மூலை படுத்து உறங்கிக் கொண்டிருந்தனர். அப்பொழுது அந்த இடத்திலிருந்து ஒரு நாய் குரைத்தால் கூடப் போதும், எல்லோரும் எழுந்து விடுவார்கள். அவள் இருதயம் பட பட வென்று அடித்துக் கொண்டது. தேகமெங்கும் வியர்த்தது. அவள் இரு புறமும் பார்த்துக் கொண்டே அடிமேல் அடி வைத்துப் பூனை போல் நடந்தாள். ஒழுங்கில்லாமல் மனம் போனபடி படுத்து உறங்கிக் கொண்டிருந்தவர்களை யெல்லாம் தாண்டிக் கொண்டு அவள் வந்து விட்டாள். இனிமேல் பயமில்லை என்று அவளுக்குத் தோன்றியது. சிறிது வேகமாக நடக்கத் தொடங்கினாள். அப்பொழுது திடீரென்று அங்கிருந்த மரத்தடியிலிருந்து ஒரு உருவம் வெளிப் பட்டு அவள் எதிரே வந்து கையை நீட்டி வழியை மறைத்தது. அவள் பேயைக் கண்டு கூட அவ்வளவு நடுங்கி இருக்க மாட்டாள். அந்த உருவத்தைக் கண்டதும் அவ்வளவு நடு நடுங்கிப் போய் விட்டாள்.

பெத்தண்ணன் கேலியாகச் சிரித்துக் கொண்டே மீசையை முறுக்கிய வண்ணம் அவள் எதிரில் நின்று கொண்டிருந்தான். "வள்ளி! கொஞ்சம் பொறு. எதற்காக இப்படி ஓடணும்! ஓடி விட்டால் உன்மேலே இருக்கிற பழி போயிடுமா...!" என்று கேட்டான்.

வள்ளி அவன் முகத்தைப் பார்த்துக்கொண்டே, "ஓடாவிட்டாலும் அந்தப் பழி போகப் போகிறதில்லை, மாமா!" என்றாள். அப்பொழுது அவள் குரலில் சோகம் தோய்ந்திருந்தது.

"நாளைய தினம் விசாரணை நடத்தப்போகிறோம். உன் மேலே குற்றமில்லாட்டி நீ தாராளமாகச் சொல்லேன். இதற்காக ஓடவேணுமா!" என்றான் பெத்தண்ணன்.

அவன் இப்படிச் சொல்லிக் கொண்டிருக்கும் பொழுது பேச்சுக் குரலைக் கேட்ட நாய் ஒன்று குரைக்கத் தொடங்கியது. மற்ற நாய்களும் அதோடு சேர்ந்து கொண்டன. எல்லோரும் விழித்துக் கொண்டு விட்டார்கள். அவ்வளவுதான். பெத்தண்ணனும் வள்ளியும் நின்று பேசிக் கொண்டிருந்த இடத்தில் பெருத்த கூட்டம் கூடிவிட்டது.

"நீங்கள் என்னைப் பற்றி என்ன நினைத்தாலும் எனக்கு அதைப் பற்றிக் கவலை இல்லை. நான் என் புருஷனுக்கு ஒரு நாளும் துரோகம் நினைக்கவில்லை. இதற்கு ஒரு விசாரணை வேண்டாம். உங்கள் விசாரணையில் நான் குற்றமில்லாதவள் என்று தீர்மானமானாலும் அதனால் எனக்கு என்ன லாபம்! என்மேல் சந்தேகப்பட்டு நீங்கள் விசாரணை என்று வைக்கிறதே எனக்குப் பெரிய அவமானம். எனக்கு உங்களோடு சேர்ந்து வாழவே பிடிக்கவில்லை. நான் போகிறேன். என்னை விட்டுவிடுங்கள். நான் சுகமாக வாழ்ந்த வீட்டை விட்டுவிட்டு உங்களோடு சேர்ந்து ஊர் ஊராகச் சுற்றி வயிறு வளர்க்கணும் என்று என் தலைச் சுழி இருந்தது. நான் யாரை நம்பி எல்லாக் கஷ்டத்தையும் ஏற்றுக் கொண்டேனோ, அவர் இறந்து போயிட்டாரு. இனிமேல் இங்கே எனக்கு என்ன சுகம்! எங்காவது போய் இதைவிட நிம்மதியாக வாழலாம் என்று பார்க்கிறேன்......" என்றாள் வள்ளி கண்டிப்பும் சோகமும் நிறைந்த குரலில்.

இதைக் கேட்ட பெத்தண்ணன், "நீ எங்களையெல்லாம் விட்டுப் பிரிந்து எங்கேயாவது சுகமாக வாழ்வதில் எங்களுக்குத் தடையில்லை. இந்தக் குழந்தை நிஜமாக எங்கள் ராணியாக இருந்தால் அது எங்களோடுதான் இருக்கணும். அதை நீ எடுத்துக் கொண்டு போக முடியாது. நீ இந்த இடத்திலேயிருந்து நல்லபடியாப் போகவேணுமானால் எங்கள் வார்த்தைக்குக் கட்டுப்பட்டாகணும். இப்போ இங்கே இருக்கிறவங்க எதிரே உன் புருஷன் மல்லய்யனுக்கு எவ்விதத் துரோகமும் செய்ததில்லை. நான் சுத்தமானவள்தான் என்று சத்தியம் செய்து விட்டு இந்தக் குழந்தையையும் எங்களிடம் கொடுத்துவிட்டுப் போகணும்" என்றான் ஆவேசம் வந்தவன் போல.

"நான் இதோ சத்தியம் செய்கிறேன்" என்றாள் வள்ளி. அப்பொழுது அவள் குரலில் ஒரு அழுத்தமும் வேகமும் இருந்தன. அவள் முகம் சிவந்தது. கண்கள் கலங்கின. "கடவுள் ஆணையாக நான் என் புருஷனைத் தவிர வேறு யாரையும் மனத்தால் நினைச்சதில்லை. அப்படி இருந்தால் இறந்து போன என் புருஷனே பேயாக வந்து என்னைத் தூக்கிக் கொல்லட்டும்" என்றாள்.

அவளுடைய ஆவேசம் நிறைந்த வார்த்தையைக் கேட்டு எல்லோரும் பிரமிப்படைந்து நின்றனர். வள்ளி மனக் கொதிப்போடு சொல்லிய வார்த்தைகள் எல்லோரையும் பெட்டிப் பாம்பாக்கி விட்டன. "இனிமேல் உன்மீது எங்களுக்குச் சந்தேகமே இல்லை" என்று பல குரல்கள் எழுந்தன.

"வள்ளி! உனக்கு எங்களைப் பிடிக்காவிட்டால் பாதகமில்லை. எங்களோடு இருக்க இஷ்டப்படாவிட்டால் நீ தாராளமாய் எங்கு வேண்டுமானாலும் போ. நீ உன் புருஷனுக்குத் துரோகம் நினைக்கவில்லை என்று ஆணையிட்டுச் சொன்னதே எங்களுக்குப் போதும். எங்கள் ராணியை மாத்திரம் எங்கள் கிட்டே கொடுத்து விட்டுப் போய்விடு. அவளை நாங்கள் வளர்க்கிறோம். அந்த உரிமையை நாங்கள் விட முடியாது" என்றான் பெத்தண்ணன்.

"தாராளமாய் வாங்கிக் கொள்ளுங்க!" என்று சிறிதும் மனங் கலங்காமல் கூறி, வள்ளி தன் கையிலிருந்த குழந்தையைப் பெத்தண்ணனிடம் நீட்டினாள். பெத்தண்ணன் இரண்டு கரங்களையும் நீட்டி அதை வாங்கிப் பக்கத்தில் நின்று கொண்டிருந்த ஒரு பெண்ணிடம் கொடுத்து விட்டுத் திரும்பிப் பார்ப்பதற்குள் வள்ளி வேகமாக நடந்து இருளோடு கலந்து மறைந்தாள்.

அந்தக் கூட்டத்திலிருந்து ஒதுங்கி நின்ற போத்திக்கு அவர்கள் அந்தக் குழந்தையைத் தங்கள் ராணி என்று ஏற்றுக் கொண்டு வள்ளியையும் தண்டிக்காமல் போக விட்டது ஆத்திரத்தையும் வேகத்தையும் கொடுத்தது. அவள் கண்களில் குரூர விஷம் பரவியது. அவள் எல்லோரையும் தள்ளிக்கொண்டு முன்னே வந்து, "அவள் இந்தக் குழந்தையை உங்கள் கிட்டே தள்ளிவிட்டு ஓடிப் போயிட்டாளா! அவள் இப்பவும் உங்களைத் தந்திரமாக ஏச்சுப்பிட்டாள். என் வார்த்தையைக் கேளுங்க. நிச்சயமா இது உங்கள் ராணியில்லை" என்று ஆவேசமாகக் கூறினாள். அப்போது பின்னாலிருந்து யாரோ அவளைப் பிடித்துத் தள்ளவே, அவள் கீழே விழுந்து விட்டாள்.

கீழே விழுந்த அந்தக் கிழவியைப் பெத்தண்ணன் தூக்கி நிறுத்தினான். அவள் கை கால்கள் துவண்டன. தலை சாய்ந்தது. அந்தக் கூட்டத்தில் ஒரு பரபரப்பு ஏற்பட்டது. போத்தியம்மா இறந்து விட்டாள். பெத்தண்ணன் அவள் உடலைக் கீழே கிடத்தினான். அவளுக்கு ஏற்பட்ட வஞ்சனையும் பொறாமையும் தான் நெஞ்சை அடைத்திருக்க வேண்டும். ஆத்திரமும் புகைச்சலும்தான் மூச்சை நிறுத்தி இருக்க வேண்டும். (தொடரும்)

# அந்த வயிற்று சங்கடத்தை இப்போதே தீர்த்துக் கொள்ளுங்கள்!



## அலக்ஷியப்படுத்தப் பட்ட அஜீரணம் அபாயகரமானது

மக்ளீன் பிராண்ட் ஸ்டமக் பவுடர் ஒரு டோஸ் உட்கொண்டால் எல்லா அசௌகரியங்களும் நீங்கிவிடும். அப்படி இருக்க அஜீரணம், அதனால் ஏற்படும் வயிற்று உப்புசம், குமட்டல், மார்வலி ஆகியவற்றினால் ஏன் கஷ்டப்படுகிறீர்கள்? மக்ளீன் பிராண்ட் ஸ்டமக் பவுடர் சாஸ்திரீகமான முறையில் தயாரிக்கப்பட்டது. ஆகவே மேற்கண்ட நோய்களைச் சுலபமாய்க் குணப்படுத்துகிறது.




# மக்ளீன் பிராண்ட் ஸ்டமக் பவுடர்

வியாபாரிகளுக்கு: ஜே. எல். மாரிஸன், ஸன் அண்ட் ஜோன்ஸ் (இந்தியா) லிமிடெட். தபால் பெட்டி, 6527 பம்பாய் 26: தபால் பெட்டி 387, கல்கத்தா: தபால் பெட்டி 1370, சென்னை.

MSY-3_TAM

# யானைக் கண்ணீர்

—சந்தானம்—



அன்று மாலை நாங்கள் மகாபலிபுரம் போயிருந்தோம். துல்லிய பௌர்ணமி நிலவில் அங்குள்ள சிற்பங்களைக் காண்பதிலே உள்ள ஆனந்தத்தை என்னவென்று சொல்வது? பஞ்சபாண்டவ ரதம், பகீரதன் தவம் ஆகிய எழில்பாடு மிக்க கலைச் சிற்பங்களைப் பார்த்துக் கொண்டே நாங்கள் அந்தக் கல் யானைக்கு முன் வந்தோம். எங்களுக்கு வழி காட்டியாக வந்தவன், "இதைப் பார்த்தீர்களா?" என்றான். அவ்வெண்ணிலவில் அந்தக் கல் யானை கண்ணீர் விட்டுப் பெருமூச்சு விடுவது போல் இருந்தது.

"இதில் ஏதோ விசேஷம் இருக்க வேண்டும்" என்று பேச்செடுத்தேன்.

"ஆமாம்" என்று தலையசைத்தான் அவன்.

"என்ன அப்பா விசேஷம்? சொல்லேன்!" என்றேன். அவன் சொல்ல ஆரம்பித்தான்.

* * *

தொண்டை மண்டலத்தை மகேந்திர பல்லவர் ஆண்டு வந்த காலம் அது. வருஷா வருஷம் நவராத்திரியை மகேந்திர பல்லவர் வெகு சிறப்பாகக் கொண்டாடுவது வழக்கம். நவராத்திரி ஒன்பது நாளும் காஞ்சி, பூலோகமோ கைலாசமோ என்றிருக்கும். அந்த வருஷத்திய நவராத்திரிப் பண்டிகையை உத்தேசித்துக் காஞ்சியில் இருந்த தேவாலயங்களும் அரண்மனையும் வெகு மும்முரமாகப் பழுது பார்க்கப்பட்டு வந்தன.

அன்று நவராத்திரிக்கு முந்திய நாள். மகேந்திரர் தம் கட்டளை சரிவர நிறைவேறிற்று என்று பார்த்து வருவதற்காக நேரில் புறப்பட்டு ஒவ்வொரு இடமாகப் பார்த்து வந்தார். தேவாலயங்களுக்குள்ளும் செல்ல வேண்டியிருந்ததால் நடந்தே வந்தார். ஐந்து வயது நிரம்பிய தம் இளைய மகனையும் அன்புடன் கையைப் பிடித்து அழைத்து வந்தார்.

கடைசியாக அரண்மனைக்கு அருகிலுள்ள யானைக் கூடத்தைப் பார்வையிட அதனுள் நுழைந்தார். ஒவ்வொரு யானையாகப் பார்த்துக் கொண்டே வந்தவர் தம் பட்டத்து யானையாகிய மாதங்கத்தின் அருகிலும் வந்தார். சக்கரவர்த்திக்கு அதனிடம் மிகவும் பிரீதி. கொஞ்ச நேரம் அதன் துதிக்கையைப் பரிவுடன் தடவிக் கொடுத்தார்.

இதற்குள் ஐந்து வயதுப் பாலகனான இளவரசனும் மாதங்கத்தினிடம் வந்தான். அதுவும் ஆதரவோடு அவனைத் தன் துதிக்கையினால் தடவிக் கொடுத்தது. திடீரென ராஜகுமாரன் கண்ணில் ஒளி வீசியது. அவன் குறும்புச் சிரிப்புடன் மெதுவாகத் தன் இடுப்பிலிருந்து ஒரு சிறு கத்தியை எடுத்தான். யானை துதிக்கையை நீட்டும் பொழுதெல்லாம் அதன் நுனியைக் குத்த ஆரம்பித்தான். யானையின் சின்னஞ் சிறு கண்கள் சிவந்தன. ஆனாலும் அது சிறுவன்தானே என்று எவ்வளவோ சகித்துப் பார்த்தது. அதை மேலும் கோபமூட்டி வேடிக்கை பார்க்க வேண்டும் என்று இளவரசனுக்கு ஆசை. சிறுவன்தானே? இந்த முறை துதிக்கையின் நுனியில் சற்று ஆழமாகவே வெட்டி விட்டான். யானையினால் வலியைப் பொறுக்க முடியவில்லை. தனது மிருக உணர்ச்சி தலை தூக்கவே, அது வெகுண்டு சிறுவனை அப்படியே துதிக்கையினால் தூக்கித் தரையில் ஓங்கி அறைந்து விட்டது.

அதைக் கண்ட அனைவரும் திடுக்கிட்டுப் போனார்கள். இளவரசன் மண்டை உடைந்து ரத்த வெள்ளத்தில் பிணமாகக் கிடந்தான்.

யானையின் துதிக்கை நுனியில் வெட்டுப்பட்ட இடத்திலிருந்து ரத்தம் கசிந்து கொண்டிருந்தது. மகேந்திர பல்லவர் சிறிது நேரம் திகைப்புடன் அதைப் பார்த்தார். சிறுவனின் கையிலிருந்த கத்தியைக் கண்டதும் நடந்ததை ஊகித்துக் கொண்டார். அரசர் என்ன உத்தரவு இடுவாரோ என்று எல்லோரும் நடுநடுங்கிக் கொண்டிருந்தார்கள்.

ஆனால் மகேந்திரர் "யானையை ஒன்றும் செய்யாதீர்கள்!" என்று கம்பிய குரலில் கூறிவிட்டு முகம் கவிழ்ந்தபடி அரண்மனை வந்து சேர்ந்தார். அறைக் கதவைத் தாளிட்டுக்கொண்டு மகனின் பிரிவை எண்ணி எண்ணி மனம் வருந்தினார். மகன் இறந்த செய்தியைக் கேட்டு அரசியும் மூர்ச்சையானாள். இளவரசனின் சவத்தை உரிய மரியாதைகளுடன் அடக்கம் செய்தபோது கூட மகேந்திரர் வெளியே வரவில்லை. அறையில் அவர் வேதனையால் பெருமூச்சு விடுவது மட்டுமே காதில் விழுந்தது. எவருக்கும் அரசரிடம் போகத் துணிவு உண்டாகவில்லை.

இங்கே பட்டத்து யானை ராஜகுமாரன் விழுந்த இடத்தையே வெறித்துப் பார்த்தபடி நின்றது. பாகன் வாழைத்தண்டும் கரும்பும் கொண்டுவந்து அதனிடம் நீட்டினான். அப்போதும் அது அப்படியே இருந்தது. இரை எடுக்கவில்லை. மாதங்கத்திற்கு மதம் பிடித்து விட்டது என்று எல்லோரும் பேசிக் கொண்டார்கள்.

மகாராஜா துக்கத்தில் ஆழ்ந்திருக்கும் போது நவராத்திரி எப்படி நடக்கும்? ஊரே சோபை குன்றியிருந்தது. எட்டு நாள் யானை இரை எடுக்காமலும் நின்ற இடத்தை விட்டு அசையாமலும் இருந்தது. பாகன் எவ்வளவு ஆசுவாசப்படுத்தியும் பயனில்லை. புத்திர சோகம் ஒரு புறம். தம் அருமை மாதங்கம் தீனி எடுக்காமல் கிடக்கிற வருத்தம் மறு புறம். அரசர் உள்ளம் வெதும்பினார்.

மகேந்திர பல்லவரும் எட்டு நாள் இரவு பகல் உண்ணாமல் உறங்காமல் இருந்தார். களைப்பு மேலிடவே, சற்றுக் கண்ணயர்ந்தார். அருணோதய வேளையில் அரசருக்கு விழிப்பு ஏற்பட்டது. அவர் மனத்தில் என்றும் இல்லாத அமைதி அன்று நிலவியது. "தவிர்க்க முடியாத ஒன்றை நினைத்து எத்தனை நாள் தான் வருந்துவது? நாம் மாதங்கத்தைப் போய்ப் பார்த்து அதற்கு ஆறுதல் சொல்லி வரலாம்" என்று நினைத்துப் பாகன் பின் தொடர யானைக் கூடத்தை அடைந்தார்.

மகேந்திர பல்லவரைக் கண்டதும் மாதங்கம் பெருமூச்சு விட்டு அவரை அழைப்பது போல் தன் துதிக்கையை நீட்டிற்று. "ஏதோ ஆத்திரத்தில் உன் அருமை மைந்தனைக் கொன்று விட்டேன். என்னை மன்னிப்பாயா?" என்று கெஞ்சிக் கேட்பது போல் இருந்தது, அதன் ஒளி மங்கிய நீர் ததும்பிய பார்வை. மகேந்திரர் கருணையே உருவாக அதனிடம் சென்றார். "மன்னித்து விட்டேன். பயப்படாதே!" என்று அதைத் தடவிக் கொடுத்தார். அப்போது யானையின் சிறு விழிகளிலிருந்து மடை விண்டது போல் கண்ணீர் பெருகி ஓடியது. சக்கரவர்த்தி தம் கையாலேயே ஒரு கருப்பங் கழியை அதனிடம் நீட்டினார். அதை வாங்கித் தன் வாயருகில் கொண்டு போகும்போது மாதங்கத்தின் தலை சுழன்றது. அது உடனே தொப்பென்று விழுந்து உயிர் விட்டது. பாவம், தன் எஜமானரின் மகனைக் கொன்றதுமே அதன் உள்ளம் உடைந்து விட்டது. இவ்வளவு நாள் அரசரிடம் மன்னிப்புக் கோருவதற்கே போல் அது உயிர் வைத்திருந்தது.

பிற்காலத்தில் மகேந்திர பல்லவர் இந்த ரதங்களைச் செதுக்கும்போது மாதங்கத்தின் ஞாபகார்த்தமாக இந்தக் கல்யானையையும் செதுக்கி வைத்தார்.

அவன் கதையை முடித்ததும் என்னுடன் வந்த சுந்தரராஜன் ஏளனச் சிரிப்புடன், "கல் யானையாவது, கண்ணீர் விடவாவது? எல்லாம் வெறும் கட்டுக்கதை. சமுத்திரத்து உப்புக்காற்றுப் பட்டுக் கல் 'சொற சொற' என்று ஆகி விடுகிறது. அதோடு கண் அருகில் மழை ஜலமோ என்னவோ ஊறிய கறை இருக்கிறது. வேறொன்றுமில்லை" என்றான்.

"ஏன் இந்தக் கதை உண்மையாகவே இருக்கக்கூடாது? அப்படி அதில் நடக்கக் கூடாதது என்ன இருக்கிறது, சொல்!" என்றேன் நான். எனக்கு என்னவோ வழி காட்டி சொன்ன கதையில் நம்பிக்கை ஏற்பட்டு விட்டது. உள்ளத்தை உருக்கும் ஒரு கதை கற்பனையாகவே இருந்தாலும், அது ஒரு உண்மையைப் பிரதிபலிப்பதுதானே?



"பாகவதரை எல்லோரும் தில்லானா பாடச் சொல்லுகிறார்களே, அவர் அதை நன்றாகப் பாடுவாரோ?"

"இல்லை, நன்றாக ஆடுவார்!"

# மலேரியா 15 வயதிற்குட்பட்ட குழந்தைகளைத் தீவிரமாகத் தாக்குகிறது

இவ்வாறுதான் மலேரியா நம் நாட்டிற்குக் கோரமான சேதத்தை நிரந்தரமாக விளைவித்துக் கொண்டிருக்கிறது.

குழந்தைகளின் வருங்கால ஆரோக்கியத்திற்கும் அறிவிற்கும் உறுதியான அஸ்திவாரம் அமைக்கப்படவேண்டிய இளம் பிராயத்தில் மலேரியா அவர்களுடைய ஆரோக்கியத்திற்கும் அறிவிற்கும் தீங்கிழைக்கிறது.

மலேரியாவிலிருந்து குழந்தைகளுக்கு வேண்டிய பாதுகாப்பை அளிக்காமலிருப்பது அவர்களுடைய வருங்கால க்ஷேமத்தையும், குடும்பத்தின் சுகத்தையும் தேசத்தின் நலனையும் புறக்கணிக்கும் பெரிய குற்றமாகும்:

உங்களுடைய குழந்தைகளை மலேரியாவிலிருந்து காப்பாற்ற அவர்களுக்கு 'பாலுட்ரீன்' கொடுக்கும்படி வற்புறுத்துகிறோம்—நீங்களும் அப்பாதுகாப்பை அடையும்படி கேட்டுக் கொள்ளுகிறோம். 'பாலுட்ரீனை' சிறு குழந்தைகளும் கர்ப்பவதியான ஸ்திரீகளும் யாதொரு தீங்குமின்றி ஒழுங்காக உட்கொள்ளலாம். அளவு முறைகள் கீழே கொடுக்கப்பட்டுள்ளன.

**அபாயத்தின் சின்னங்களைக் கவனியுங்கள்:**

முதலில் குளிர் நடுக்கம் உண்டாகும். ஜுரம் ஆரம்பமாகும். இதனால் உடம்பு முழுவதும் வியர்க்கும். தேகம் முழுவதும் வலி உண்டாகும். இந்த அறிகுறிகளை ஒரு பொழுதும் அலட்சியம் செய்யாதீர்கள்—உடனேயே டாக்டரின் ஆலோசனையைக் கேளுங்கள். மலேரியா கண்டிருந்தால், 'பாலுட்ரீன்' எப்படி உங்களுடைய ஜுரத்தை சில நாட்களில் நீக்குகிறது என்பதையும் எதிர்காலத்தில் மலேரியா உங்களை அணுகாமல் எப்படி பாதுகாப்பை அளிக்கிறது என்பதையும் அவர் சொல்லுவார்.

நம்பிக்கைக்குகந்த 'பாலுட்ரீன்' மாத்திரைகள் சுத்தமான, தெளிவாகத் தெரியும் காகித உறைகளில் சுற்றப்பட்டு வருகின்றன. ஒரு மாத்திரை விலை ஒரே அணா தான்.



# 'பாலுட்ரின்'

**மலேரியாவை வீழ்த்துகிறது**

## அளவுமுறை

**சிகிச்சைக்கு:** வயதானவர்களுக்கும் 12 வயதுக்கு மேற்பட்டவர்களுக்கும் ஒரு மாத்திரை. 6லிருந்து 12 வயது வரையுள்ள குழந்தைகளுக்கு அரை மாத்திரை. 6 வயதிற்கு கீழ்ப்பட்ட குழந்தைகளுக்கு கால் மாத்திரை வீதம் தினந்தோறும் ஜுரம் குணமடையும் வரை கொடுக்கவும்.

**பாதுகாப்பிற்கு:** மேலே குறிக்கப்பட்ட அளவுகளை அனுசரிக்கவும். ஆனால் வாரம் ஒருமுறை அதே தினத்தில் சாப்பிட வேண்டியது.



எப்பொழுதும் 'பாலுட்ரீன்' சாப்பாட்டிற்குப் பிறகு அதிக அளவு தண்ணீருடனோ அல்லது பாலுடனோ உட்கொள்ள வேண்டும் என்பதை ஞாபகத்தில் வைத்திருங்கள்.

ICI

இம்பீரியல் கெமிக்கல் இண்டஸ்ட்ரீஸ் (இந்தியா) லிமிடெட்.

ICP 77

# பெற்ற தாய்

அசடியம்



அவளோ கிழவி. தொண்டு கிழம் என்றால் தொண்டு கிழம். உடல் நொட்டிச் சதை கருங்கிப் போயிருந்தாள். அவளுக்கு ஒரே பிள்ளை. ஒரே பிள்ளை யென்றால் எந்தத் தாய்க்கும் அன்பு அதிகம் இருப்பது இயல்புதானே! தன் சக்தி முழுவதையும் செலவிட்டுக் கிழவி அவனைப் பராமரித்து வந்தாள். முதுமையின் காரணமாக நடமாட முடியாமற் போய் விடவே, அவள் தன் தனயனைக் கூப்பிட்டு, "அப்பா, குழந்தாய்! எனக்கோ வயதாகி விட்டது. இன்னும் எவ்வளவு நாள் இருப்பேனோ, தெரியாது. உனக்கு ஒரு கல்யாணம் பண்ணி வைத்து மாட்டுப் பெண்ணிடம் வீட்டுப் பொறுப்பை ஒப்படைத்து விட்டு, கிருஷ்ணா, ராமா, கோவிந்தா என்று மீதி நாளைக் கழிக்க விரும்புகிறேன்" என்றாள்.

பையன், "சரி, அம்மா! நானும் இனிமேல் பொழுதை வீணாக்காமல் சம்பாதித்துக் குடும்பத்தைக் காப்பாற்றுகிறேன்!" என்றான்.

கிழவி பையனுக்கு ஒரு பெண்ணைப் பார்த்துக் கல்யாணம் நிச்சயம் செய்து வைத்தாள். கல்யாணம் நிச்சயம் ஆன அன்று ஊர் முழுவதற்கும் சாப்பாடு போட்டாள். கல்யாணம் வெகு விமரிசையாக நடந்தேறியது.

அந்த ஏழைமை நிலையிலும் கிழவி செட்டும் சிக்கனமுமாகக் குடித்தனம் நடத்தி நாலு காசு சேர்த்து வைத்திருந்தாள். மாட்டுப் பெண் வீட்டுக்கு வந்ததும் அதை அவள் கையில் கொடுத்துக் குடும்பப் பொறுப்பிலிருந்து விடுபட்டாள்.

கொஞ்ச நாட்கள் நல்ல விதமாகக் கழிந்தன. ஆனால் போகப் போக மாட்டுப் பெண்ணுக்கு மாமியாரின் தொல்லை பெருந்தொல்லையாகத் தோன்றத் தொடங்கியது. ஏனெனில் கிழவி கையைக் காலை அசைத்து வீட்டுக் காரியங்கள் செய்யக்கூடிய நிலையில் இல்லை. கையிலிருந்த காசையும்தான் மாட்டுப் பெண்ணிடம் கொடுத்து விட்டாளே! கால் காசுக்கு வீதி இல்லாத மாமியார் இருந்தென்ன, செத்தென்ன என்று எண்ணத் தொடங்கி விட்டாள் மாட்டுப் பெண். சிறுகச் சிறுக மாமியாருக்குச் சாதம் போடுவதை நிறுத்திக் கொண்டாள். இன்னும் சில தினங்கள் போனதும் அவளை இடித்துக் கூறி அவமானப் படுத்தவும் தொடங்கி விட்டாள். மாமியார் ஏதாவது கேட்டால் விட்டெறிந்தாற் போல எரிச்சலுடன் பேசத் தொடங்கினாள். மாமியாருக்குத் துணிமணி வாங்கிக் கொடுப்பதிலும் அவள் சிக்கனத்தைக் கடைப் பிடிக்கத் தொடங்கி விடவே, மாமியாரின் வாழ்க்கை வண்டி வெகு வெகு கஷ்டத்துடன் ஓடத் தொடங்கியது.

பையனுக்கு வேலை மிகுதியின் காரணமாக இதை யெல்லாம் கவனிக்கப் பொழுதில்லை. அவனுடைய பகல் பொழுது முழுவதும் வெளியலுவல்களிலேயே போய் வந்தது. இரவு வேளைகளில்தான் களைத்துச் சலித்துப் போய் அவன் வீடு திரும்புவான். அவன் வீட்டிலிருக்கும் வேளைகளில், அவனுக்கு எவ்விதமான சந்தேகமும் எழாத வகையில் மாமியாரிடம் மிகவும் மரியாதையாகவே நடந்து வந்தாள் மாட்டுப் பெண். வீட்டில் விதவிதமான சமையல் செய்வாள். கணவனுக்கும் போட்டுத் தானும் சாப்பிடுவாள். கணவனிடம் வெகு கரிசனமாக, "மாமியார் இதையெல்லாம் சாப்பிடமாட்டேன் என்கிறார். அவளுக்கு இதெல்லாம் பிடிக்கவில்லை. அவளுக்கு என்னதான் பிடிக்குமோ, தெரியவில்லையே!" என்பாள். மனைவியின் இந்த மதுரமான மொழிகளைக் கேட்டுக் கணவன் தன் மனைவியைப் போல் இந்த உலகத்திலேயே ஒருவரும் இருக்க முடியாது என்று எண்ணி இறுமாந்து போவான். 'அம்மாவுக்கு வயதாகி விட்டதோ, இல்லையோ! அதனால் மூளை மழுங்கிப் போயிருக்கும். தொண தொணவென்று மனைவியை ஏதாவது நச்சரித்துக் கொண்டிருப்பாள். அவள் கொடுக்கும் தொந்தரவுகளை யெல்லாம் இவள் எப்படித்தான் சகித்துக் கொள்ளுகிறாளோ! நம் மனைவி பொறுமையில் பூமிதேவியாகத்தான் இருக்கவேண்டும்' என்று எண்ணி மனைவியின்மீது அநுதாபப்படுவான்.

சில தினங்கள் அம்மாவின் அறை வரைக்கும் போய், "அம்மா, இன்று நீ பாயசம் சாப்பிட்டாயோ!" என்று கேட்பான். "இல்லையே, அப்பா!" என்பாள். அவள் சொல்வது பொய் அல்ல. வீட்டில் என்ன சமையல் நடக்கிறது, என்ன நடக்கவில்லை என்பதெல்லாம் அவளுக்கு ஏதாவது தெரிந்திருந்தால் தானே!

மாமியாரைப் பற்றி மாட்டுப் பெண் இம்மாதிரியாகப் பல கோள்கள் சொல்லுவாள். ஆனால் மேலுக்கு, "பாவம், அவளுக்கும் தான் வயசாகி விட்டதோ, இல்லையோ! ஏதும் சொல்லிக் கேட்டு வைக்காதீர்கள்!" என்று குழந்தையையும் கிள்ளித் தொட்டிலையும் ஆட்டி வைக்கும் கதையாகச் சொல்லி வைப்பாள்.

இப்படியே நாட்கள் ஓடின. கிழவி சாகுந்தறுவாய்க்கு வந்து விட்டாள். பையனும் அலுத்துச் சலித்துப் போய் விட்டான்.

ஒருநாள் தூங்கப் போகும்பொழுது, "அம்மா! உனக்கு ஏதாவது தின்ன வேண்டும் என்று ஆசையாயிருந்தால் சொல்லு. அவளைச் செய்து தரச் சொல்லுகிறேன்!" என்றான்.

கிழவிக்குச் சிறிது நம்பிக்கை உதயம் ஆயிற்று. "சரி, அப்பா!" என்று சொல்லித் தலையை ஆட்டி வைத்தாள்.

மறுநாள் கிழவி தன்பலம் கொண்ட மட்டும் உரக்கத் தன் மாட்டுப் பெண்ணைக் கூப்பிட்டாள்.

"எதற்காகச் சத்தம் போடுகிறாய்! உன்னை யார் தூக்கிக் கொண்டுபோக வந்து விட்டான்!" என்று கேட்டுக்கொண்டே பத்ரகாளிபோல் வந்து நின்றாள் மாட்டுப்பெண்.

"அம்மா! எனக்குக் கொஞ்சம் கோதுமைப் பாயசம் வைத்துத் தாயேன். இரண்டு ஏலக்காயைத் தட்டிப் போட்டு......" என்று கூறிய வாறே கிழவி தன் பொக்கைவாய் உதடுகளின்மீது நாக்கைத் துழாவினாள்.

"கோதுமைப் பாயசம் வேணுமோ, நீ இருக்கிற கேட்டுக்கு! வாலிபம் திரும்பி வந்துவிட்டாற் போலிருக்கிறது!" என்று ஏளனமாகக் கூறிவிட்டு மாட்டுப்பெண் அங்கிருந்து போனவள்தான். அப்புறம் இருட்டுகிற வரைக்கும் மாமியார் இருக்கிற பக்கம் எட்டிப் பார்க்கவே இல்லை. விளக்கும் ஏற்றியாகி விட்டது. தாகத்துக்குத் தண்ணீர் வேண்டுமா என்றுகூட அன்று மாட்டுப்பெண் மாமியாரைக் கேட்க வில்லை. மாட்டுப் பெண்ணைக் கூப்பிட்டுக் கூப்பிட்டு மாமியாருக்கு வாய் வலித்ததுதான் மிச்சம்!

இருட்டியதும் பையன் வீட்டுக்கு வந்தான். அவன் வீட்டுக்குத் திரும்பி வரும் வேளையில் அவன் மனைவி எப்பொழுதும் வாசலில்தான் உட்கார்ந்திருப்பாள். ஆனால் அன்று அவளை அங்கே வாசற்படியில் காணோம். உள்ளே நுழைந்ததும் மனைவி இரண்டாம் கட்டில் உட்கார்ந்து விசித்து விசித்து அழுது கொண்டிருப்பதைக் கண்டான். பதை பதைத்துப் போய், "என்ன ஆகிவிட்டது! ஏன் அழுகிறாய்!" என்று கேட்டுக் கொண்டே தன் மனைவியை நெருங்கினான். ஆனால் அவள் வாய்திறந்து ஏதாவது சொன்னால்தானே! சிறிது நேரம் அவளைச் சமாதானப் படுத்திக் கேள்விக்கு மேல் கேள்வி கேட்டுக் குஷிப்படுத்தின பிறகுதான் அவள் வாயைத் திறந்தாள்.

"அப்பப்பா! அவள் கச்சரிப்பு எனக்குத் தாள வில்லை. அதுவும் இன்று எனக்குப் பொறுக்க வில்லை!" என்று பீடிகையைச் சற்றுப் பலமாகவே போட்டாள் அவன் மனைவி.

"என்ன விஷயம்! சொன்னால்தானே தெரியும்!" என்றான் கணவன்.

"'இன்று உங்களுக்கு என்ன சமைக்க!' என்று உங்கள் அம்மாவைக் கேட்கப் போயிருந்தேன். 'கோவைப் பாயசம் வைத்துத் தாயேன்' என்றாள்!" என்று சொல்லி மீட்டபடியும் அவன் மனைவி விசித்து விசித்து அழ ஆரம்பித்து விட்டாள்.

'கோவ' என்னும் சொல்லுக்குக் கொங்கணத்தில் கணவன் என்று பொருள். 'கவ' என்றால் கோதுமை என்று பொருள். இரண்டுக்கும் மத்திமமாகச் சொன்னால் எந்தப் பொருள் வேண்டுமானாலும் கொள்ளலாம்.

இதைக் கேட்டதும் பிள்ளைக்கும் பொறுக்க வில்லை. நேரே அம்மாவின் அறைக்குச் சென்று கேட்டான். அவளுக்கோ நல்ல பசி. காதை அடைத்துக் கொண்டிருந்தது. அவன் கேட்ட கேள்வி காதில் விழுந்தது. ஆனால் பிள்ளை 'கோவ என்று சொன்னானா, கவ என்று சொன்னானா!' என்பது அவள் காதில் சரியாக விழவில்லை. ஆகவே, 'ஆமாம், அப்பா!" என்று சொன்னாள். அவள் பசி அவனுக்குத் தெரியும். குரல் கிணற்றிலிருந்து வருவது போலிருந்தது.

இதைக்கேட்டதும் பிள்ளைக்கு ரௌத்திராகாரமாகக் கோபம் வந்து விட்டது. 'இப்படியே இவளை உயிரோடு கொளுத்தி விட்டால் என்ன! இவள் அட்டகாசம் பொறுக்க முடியவில்லையே!' என்று எண்ணினான்.

உடனே உள்ளே சென்று கோணிகளை எடுத்து வந்தான். ஒன்றில் கிழவியைப் போட்டுக் கட்டினான். இன்னொன்றில் உரி மட்டை நாரைப் போட்டு நிரப்பிக் கொண்டான். இரண்டையும் முதுகில் தூக்கிக் கொண்டு மலையடிவாரத்துக்குச் சென்றான். அங்கே இரண்டு மூட்டைகளையும் கீழே போட்டுவிட்டு உரி மட்டை நாரைப் பிரித்துச் சிதை அடுக்கினான். அதன்மேல் கிழவியை வைத்தான். அருகிலேயே மூங்கிற் சருகுகள் கிடந்தன. அவற்றைக் குவித்துக் கிழவியின்மேல் மூடினான். பிறகு நெருப்பு வைப்பதற்குத் தயாரானான். அப்பொழுதுதான், "அடாடா! கையோடு நெருப்புக் கொண்டு வர மறந்து விட்டோமே!" என்ற நினைவு அவனுக்கு வந்தது.

வர வர இருட்டிக் கொண்டிருந்தது. இனி நேரத்தை வீணாக்கக் கூடாது என்ற முடிவுக்கு வந்தவனாய்க் கிழவியை அப்படியே போட்டுவிட்டு நெருப்புக் கொண்டுவர வீட்டுக்கு ஓடினான்.

மலைக் காற்று கிழவியின் பசியால் வாடி மதி யிழந்திருந்த உடலுக்கு ஒரு புத்துணர்ச்சியை அளித்தது. கண்களைத் திறந்து பார்த்தாள். அவளுக்கு விஷயம் விளங்கிவிட்டது. என்ன செய்வது என்று யோசித்தாள். சருகுகளையும், உரி மட்டைகளையும் முன்பிருந்தபடியே வைத்தாள். பக்கத்தில் சில மூங்கிற் பழங்கள் விழுந்திருந்தன. அதைத் தின்று களைப்புத் தீர்த்துக் கொண்டு இன்னொரு மரத்தின் மறைவிலே போய் மறைந்து உட்கார்ந்து கொண்டாள். இதற்குள் பையன் தீயை எடுத்துக் கொண்டு வந்துவிட்டான். அவன் பார்த்தபொழுது சிதை அவன் வைத்துவிட்டுப் போனபடியே இருந்தது. ஆகவே, அதில் தீயை வைத்துவிட்டு வீட்டை நோக்கிச் சென்றான்.

கிழவி அன்றிரவு அங்கேயே தூங்கிவிட்டாள். கோழி கூவும் சத்தத்தைக் கேட்டுக் கண் விழித்தாள். அவளுக்குப் பக்கத்தில் யாரோ பேசுவது போன்ற சத்தம் கேட்டது. அவள் கண்களைக்



கசக்கிக் கொண்டு பார்த்தாள். சில திருடர்கள் திருட்டுப் பொருள்களைப் பங்கு போட்டுக் கொண்டிருந்தனர். அப்பொழுது அக் காட்சி அவளுக்குப் பயங்கரமாகத் தோன்றியது. திருடர்கள் முகத்தில் கரியைத் தீற்றிக்கொண்டு கோரமாகக் காட்சி அளித்தார்கள். அந்தக் காட்சியைக் கண்டு பயமுற்ற கிழவியின் கை கால்கள் நடுங்கின. அவள் உடல் நடுங்கிற்று. உலர்ந்த சருகுகளும் சலசலத்தன. திருடர்களின் காதில் சலசலப்புச் சத்தம் விழவே, அவர்களுக்குத் தங்களை யாரோ பின் தொடர்வது போன்ற பிரமை ஏற்பட்டது. 'தலை தப்பினால் போதும்!' என்று பயந்து திருட்டுச் சாமான்களைப் போட்டது போட்டபடியே போட்டு விட்டு ஓடிவிட்டார்கள்.

சிறிது நேரம் கழித்தபின் கிழவிக்குப் போன உயிர் திரும்பி வந்தது. அவள் நாற்புறமும் சுற்[illegible] பார்த்தாள். யாரையும் காணமற் போகவே, [illegible]வாக எழுந்தாள். திருடர்களின் திருட்டுப் பொரு[illegible]ள் அப்படியே கிடப்பதைக் கண்டாள். 'கடவுள் தம்பி[illegible] கருணை புரிந்துதான் இப் பொருள்களை யெல்லாம் அனுப்பியிருக்க வேண்டும். இவற்றை வீட்டுக்கு எடுத்துப் போனால், மாட்டுப் பெண் மகிழ்ச்சி அடைந்து என்னை நன்றாகக் கவனித்துக் கொள்ளுவாள்' என்று எண்ணினாள்.

அங்கே வேண்டுமளவு வைரம், முத்து, துணி மணிகள், பாத்திரங்கள் கிடந்தன. தன்னால் முடிந்தவற்றை எடுத்துக்கொண்டு பொழுது விடிவதற்கு முன்னால் வீட்டுக்கு வந்து சேர்ந்து வாசற் கதவைத் தட்டினாள். முதலில் தன் மாட்டுப் பெண்ணைக் கூப்பிட்டாள். அவள் பதில் சொல்லவில்லை. பிறகு பிள்ளையைக் கூப்பிட்டாள். அவனும் பதில் சொல்லவில்லை. இரண்டு பேரும் முன்பாகவே கிழவியின் குரலைக் கேட்டு விட்டார்கள். ஆனால் ஏன் என்று கேட்கத்தான் அவர்களுக்குத் தோன்றவில்லை. கிழவி எங்கேயாவது பேய் பிசாசாக மாறி நம்மைப் பின் தொடரத் தொடங்கி விட்டாளோ என்று எண்ணிப் பயந்தனர்.

பையனுக்கு மனத்தை என்னவெல்லாமோ செய்தது. 'நாம் அம்மாவை உயிருடன் கொளுத்தி விட்டோமே! அப்படிச் செய்திருக்கலாமா!' என்றெல்லாம் எண்ணினான். பிறகு எப்படியோ தைரியத்தை வரவழைத்துக் கொண்டு கதவைத் திறந்தான். அவன் மனைவி ஓரேயடியாகப் பயந்துபோய் அவனைப் பிடித்துக் கொண்டு பின்னாலிருந்தபடியே தன் மாமியாரைப் பார்த்தாள். கிழவி மூட்டையைக் கீழே வைத்தாள். பிள்ளையும் மாட்டுப் பெண்ணும் அவற்றைப் பார்க்கத் தொடங்கினார்கள். அவர்களுக்குப் பயம் ஒருபுறம்; ஆச்சரியம் ஒருபுறம்!

"பயப்படாதே, அப்பா!" என்று தைரியம் சொல்லிவிட்டு மூட்டையைத் திறந்து, "இந்தா, இதை எடுத்துக்கொள்" என்று தன் மாட்டுப் பெண்ணிடம் ஒரு காசுமாலையைக் கொடுத்தாள்.

"உனக்கு இது யார் கொடுத்தது!" என்று கேட்டான் பிள்ளை.

"வேறு யார் கொடுக்கப் போகிறார்கள், குழந்தாய்! கடவுள்தான் கொடுத்தார். கடவுளுக்கு என்மேல் கருணை பிறந்து விட்டது. இன்னும் நிறையக் கொடுத்தார். ஆனால் என்னால் எடுத்துக் கொண்டுதான் வர முடியவில்லை. முடிந்ததைக் கொண்டு வந்திருக்கிறேன்" என்றாள் கிழவி.

கிழவி மிகவும் களைத்திருந்தாள். ஆகவே, தன் அறையில் போய்ப் படுத்துவிட்டாள். நகைகளையும் அணிமணிகளையும் பார்த்த மாட்டுப் பெண்ணுக்கு வியப்புத் தாளவில்லை. "கிழவி எமலோ



"ஏன் அப்பா, இப்படி முகத்தைச் சுளித்துக்கொண்டு வேதனைப் படுகிறாய்?"

"மருந்து சாப்பிடுகிற கஷ்டம் எனக்கு அல்லவா தெரியும்?"

"இப்பொழுது நீ எங்கே மருந்து சாப்பிட்டாய்? காப்பி அல்லவா கொடுத்தேன்!"

கத்துக்குப் போயிருக்கிறாள். ஆனால் அந்த விஷயங்களை யெல்லாம் நம்மிடம் சொல்லவில்லை. அதையெல்லாம் ரகசியமாக வைத்திருக்கிறாள். நாமும் எமலோகத்துக்குப் போய் இதெல்லாம் எடுத்து வந்தால் என்ன ஆவது என்று ஒரு வேளை அவளுக்குப் பயமா யிருக்கலாம். அதனால் தான் சொல்லவில்லை. என்ன இருந்தாலும் நாமும் போய் எடுத்து வரத்தான் வேண்டும்" என்று மனத்தில் நிச்சயம் செய்து கொண்டாள்.

மறுநாளே அவள் தன் கணவனிடம் பிடிவாதம் பிடிக்கத் தொடங்கி விட்டாள். "என்னையும் கொண்டுபோய் அவளைப் போலவே உயிருடன் கொளுத்துங்கள்!" என்றாள். கணவன் எவ்வளவோ சொல்லிப் பார்த்தான். "எதற்காக வீணில் உயிரை விடுகிறாய்!" என்றும் கேட்டான். ஆனால் அவள் கேட்டால்தானே! 'நச், நச்' என்று நச்சரிக்க ஆரம்பித்து விட்டாள். கடைசியில் நச்சரிப்புத் தாளாமல் 'இப்படித்தானே தாயாரையும் கொளுத்தினோம். அவள் பிழைத்து வந்துவிடவில்லையா! அம்மாதிரி இவளும் வந்து விடுகிறாள்!' என்று எண்ணி அதற்குத் தயாராகிவிட்டான்.

கிழவியிடம் யாரும் எதையும் சொல்லவில்லை. இருட்டியதும் கணவன் தன் மனைவியைக் கோணிப் பையில் போட்டுக் கட்டிக்கொண்டான். சாயந்திரமே உரி மட்டை நாரைக் கொண்டுபோய் மலையடிவாரத்தில் வைத்து விட்டு வந்திருந்தா[illegible] தாயாரைத் தூக்கிக் கொண்டு போன பொ[illegible] ஏற்பட்டிருந்த அநுபவம் அவனுக்கு அந்த முன்னெச்சரிக்கையான அறிவை அளித்திருந்தது. மனைவியின் மூட்டையைத் தூக்கிக் கொண்டதும் அவள் மூட்டைக்குள்ளிருந்த வண்ணமே, "தீ எடுத்துக் கொள்ள மறந்து விடாதீர்கள்!" என்று நினைவூட்டினாள். ஏனெனில், அவளுக்குத் தாயாரைக் கட்டித் தூக்கிக் கொண்டு போன பொழுது தன் கணவன் தீ எடுத்துச் செல்ல மறந்துபோனதும், அதன் பலனாக அவன் ஒரு நடை அநாவசியமாக வீட்டுக்கு வரவேண்டியிருந்ததும் நன்றாக நினைவு இருந்தது. ஆகவேதான் அவள் நினைவாகத் தன் கணவனிடம் தீயைப் பற்றிப் பிரஸ்தாபித்

தான். கணவன் தான் சூடுகண்ட பூனையாயிற்றே! ஆகவே, அவன் "நன்றாகச் சொன்னாய்! நானா மறப்பவன்! எல்லாம் முன்பே தயார் செய்து வைத்துக்கொண்டு விட்டேன்!" என்று சொல்லி முதலில் மனைவியையும் கையில் தீயையும் எடுத்துக் கொண்டு மயானவாரத்துக்குச் சென்றான். தாயாரைப் போலவே அவளையும் சிதையில் இட்டுத் தீ வைத்து விட்டான். மனைவி உடலில் சூடு உறைக்கவே உரக்க அழுதாள்; துடி துடித்தாள். "அப்படியானால் வெளியே வந்து விடுகிறாயா! நமக்குப் பணமும் வேண்டாம், ஒன்றும் வேண்டாம்!" என்றான் கணவன்.

என்ன இருந்தாலும் பணத்தாசையும் பொன்னாசையும் போகுமா! ஆகவே, அவன் மனைவி பொறுத்துக் கொள்வதாகச் சொல்லிப் பல்லைக் கடித்துக் கொண்டாள். ஆனால் தீ சும்மா விடுமா! அது இன்னும் அதிகமாகத் தகிக்கத் தொடங்கவே, அவள் கதறினாள், பதறினாள்; வெளியே வரத் துடித்தாள். ஆயினும் அவன் அவளை வெளியே வர விடவில்லை. "பேசாதே! அம்மா இம்மாதிரி கத்தவில்லை!" என்று சொல்லிப் பேசாமல் இருக்குமாறு சொன்னான். அப்படியும் அவள் கூக்குரல் ஓயாமல் போகவே, இளகிய மனத்தை உடையவனான அவன் அங்கு நிற்கப் பிடிக்காமல், அவளைத் திரும்பிப் பாராமலே வீட்டுக்கு ஓடி வந்து விட்டான்.

பொழுது விடிந்தது. தன் மனைவி தங்க நகைகளாக எடுத்துக் கொண்டு எமலோகத்திலிருந்து வருவாள் என்று இரவு முழுவதும் எண்ணியவாறே பொழுதைக் கழித்தான் கணவன். ஆனால் பொழுது விடிந்து வெகு நாழிகையாகியும் அவள் வராமற் போகவே, அவன் பதற்றமுற்றான். அவள் திரும்பி வருவாள் என்ற அவன் நம்பிக்கை பொழுது ஏற ஏறக் குறையலாயிற்று. உடனே அம்மாவிடம் ஓடி முதல் நாள் நடந்த விஷயத்தையெல்லாம் விவரமாகச் சொன்னான்.



மனைவி:—நேற்றைக்கு நீங்கள் பொதுக் கூட்டத்திலே பேசினதைப் பற்றிப் பிரமாதமாகப் பேப்பரிலே போட்டிருக்கிறது. பார்த்தீர்களா? அவ்வளவு நன்றாக எப்படிப் பேசக் கற்றுக் கொண்டீர்கள்?

கணவன்:—எல்லாம் உன் பேச்சைக் கேட்டுக் கேட்டுத்தான்!

அதைக் கேட்ட கிழவி வருத்தந் தாளாமல், 'குய்யோ முறையோ' என்று கூச்சலிட்டாள். என்னதான் மாட்டுப் பெண் கஷ்டப்படுத்தினாலும், அவள் தன்னுடைய மகனின் மனைவியல்லவா! நடந்ததைக் குறித்து அவளும் வருந்தினாள். அவள் எத்தனை வருந்தித்தான் என்ன பயன்! அழுது அழுது புரண்டாலும் மாண்டார் வருவரோ என்ற கதைதானே!

* * *

இவ்விதம் எவ்வளவோ நாட்கள் கழிந்து விட்டன. ஒருநாள் கிழவி தன் மகனைக் கூப்பிட்டு, "இந்தாப்பா, இந்த நகைகள்! இனி நான் அதிக நாட்கள் உயிர் வாழமாட்டேன். எங்கேயாவது போய் இந்த நகைகளில் இரண்டொன்றைக் கொடுத்து எங்கேயாவது தாயார் கிடைத்தால் வாங்கிவா. நான் செத்த பிறகு உனக்கும் யாராவது வேண்டும் அல்லவா!" என்றாள்.

பையன் அநேக கிராமங்களைச் சுற்றினான். ஆனால் யாரும் அவனுக்குத் தங்கள் தாயார்களைக் கொடுக்கவில்லை. "அட முட்டாளே! எங்கேயாவது இன்னொரு அம்மா கிடைப்பாளா!" என்று கேட்டு ஜனங்கள் அவனைப் பரிகாசம் செய்தனர். அவன் வீட்டுக்குத் திரும்பி வந்தான். கிழவி, "அட! அம்மா கிடைக்கவில்லை என்றால் அதற்காக வெறும் கையுடன் வரலாமா! ஒரு மனைவியைக் கல்யாணம் செய்து கொண்டாவது வரக் கூடாதா!" என்று கேட்டாள்.

பையன் மனைவி தேடத் தொடங்கியிருக்கிறான் என்பதை அறிந்த ஜனங்கள், "இதோ பார், அப்பா! இவள் என் பெண்! இவள் என் தங்கை. இவளைக் கல்யாணம் செய்து கொள்!" என்று சூழ்ந்து கொண்டு படை யெடுக்கத் தொடங்கி விட்டார்கள். பையனின் நிலை கரும்புத் தோட்டத்துக்குள்ளே சிக்கிக் கொண்ட நரியின் நிலையை யொத்ததாகி விட்டது. அவன் வீட்டுக்கு வந்து தாயாரிடம் எல்லாவற்றையும் சொன்னான்.

"பார்த்தாயா! மனைவிகள் எத்தனைபேர் வேண்டுமானாலும் கிடைப்பார்கள். ஆனால் தாயார்தான் கிடைக்க மாட்டாள். இப்பொழுதாவது தெரிந்து கொள்!" என்று உபதேசம் செய்தாள் தாயார்.

பையனுக்கு இப்பொழுதுதான் தாயின் மகிமை தெரிந்தது. அவன் தாயாரின் காலடிகளிலே விழுந்து பணிந்து மன்னிப்புக் கேட்டான்.

அதே சமயம் வாசலில் ஒரு வண்டி வந்து நின்றது. தாயாரும் தனயனும் ஆச்சரியத்துடன் அதைப் பார்த்தனர். அதிலிருந்து இறங்கிய மாட்டுப் பெண், ஓடோடி வந்து, மாமியாரின் கால்களில் விழுந்து, "அம்மா! என்னை மன்னிக்க வேண்டும். தங்களுக்குத் தீங்கிழைக்க நினைத்ததற்குத் தகுந்த தண்டனை கிடைத்து விட்டது. என்னைச் சிதையில் வைத்துவிட்டு உங்கள் பிள்ளை வீட்டுக்கு வந்ததும், தீயின் சூடு தாங்காமல் நான் சிதையைத் தள்ளிக் கொண்டு எழுந்து விட்டேன். உடம்பு முழுவதும் தீ சுட்ட புண்ணாகி விடவே, அதை ஆற்றிக் கொண்டு வரலாம் என்று பிறந்த வீட்டுக்குப் போய்விட்டேன். இனிமேல் இப்படி நடந்துகொள்ள மாட்டேன்!" என்று விவரத்தைக் கூறினாள். மாமியார் அவளை மன்னித்து மறுபடியும் தன் மாட்டுப் பெண்ணாக ஏற்றுக் கொண்டாள். அப்புறம் மூவரும் வெகுகாலம் சுகமாகவும் ஆனந்தமாகவும் வாழ்ந்தனர்.

[ஆதாரம்:— கொங்கணத்து நாடோடிக் கதை]




"நான் கீல் வாயுவினால் மிகுந்த அவஸ்தைப் பட்டேன் — அதாவது, உடம்பு பூராவும் உள்ள வலியினால் சில சமயங்களில் வேலைக்கும் போக முடியாமலிருந்தது. நண்பன் ஒருவன் "க்ருஷன்" உப்புக்களை உபயோகித்துப் பார்க்குமாறு சிபாரிசு செய்தான். நான் அவ்வாறே செய்ததில், உடம்பு வலிகள் கொஞ்சம் கொஞ்சமாய் மறைந்து வந்தது. வேலைக்கும் யாதொரு தடங்கலின்றிப் போய் வருகிறேன். நான் முற்றிலும் புதிய மனிதனாய் விட்டதற்கு "க்ருஷ"னுக்கு வந்தனம்." —A. R.

விஷத்தன்மை கொண்ட கழிவு பதார்த்தங்கள் சரிவர வெளித் தள்ளப் படாமையால் குடல்களில் தேங்கி, கீல் வாயுவை உண்டாக்குகின்றன. "க்ருஷ"னிலுள்ள ஆறுவித முக்கிய உப்புக்கள் குடல்களையும் மூத்திரக் காய்களையும் சரிவர இயங்குமாறு தூண்டுவதால் இவ்விஷப் பொருள்களை சீக்கிரமாகவும் சுலபமாகவும் வெளியே தள்ளுகிறது. தினந்தோறும் ஒரு சிறு அளவு "க்ருஷன்" டீயிலோ, தண்ணீருடனோ உட்கொள்ளுவது உங்களைக் கீல் வாயுவினின்றும் விடுவிக்கும்.

**"க்ருஷன்"** உங்களை ஆரோக்யத்துடனும் சந்தோஷத்துடனும் இருக்க உதவுகிறது

KSM—1

# நளினியின் கலக்கம்

• ஏ.எஸ்.ராகவன் •




ரயில் புறப்பட இரண்டே நிமிஷங்கள்தான் இருந்தன. நளினி அவசரம் அவசரமாகக் காரை விட்டு இறங்கினாள். அவளுக்கு முன்பே ஸ்டேஷனுக்கு வந்த வேலைக்காரன் ஒரு இரண்டாம் வகுப்பு டிக்கட்டை அவளிடம் கொடுத்து விட்டுப் பெட்டி படுக்கைகளை எடுத்துக் கொண்டான். அவள் வெள்ளிக் கூஜாவைக் கையிலெடுத்துக் கொண்டு வேகமாக நடந்தாள்.

டிக்கட் பரிசோதகர் அவளுடைய டிக்கட்டை மரியாதையாக வாங்கிக் கத்தரித்துக் கொடுத்தார். பிளாட்பாரம் பூராவும் அவள் பக்கமே திரும்பியது. ஆம், பிரசித்தி பெற்ற நாட்டிய ராணி நடந்து செல்வது ஆச்சரியம்தான்! மேலும் அவள் நடையழகில் கூட நாட்டிய பாவம் குலுங்குவதை ரசிகர்கள் எதிர்பார்ப்பதும் சகஜம்தானே!

புறப்படத் தயாராயிருந்த வண்டியில் அவள் ஏறிக் கொண்டாள். பெட்டி படுக்கைகள் உள்ளே தள்ளப்பட்டன. "நீ அடுத்த பெட்டியில் ஏறிக்கொள். செங்கல்பட்டில் தயாராக வந்துவிடு" என்று கூறிவிட்டு நளினி வண்டிக்குள் பார்த்தாள். நல்ல வேளை! வண்டி காலியாக இருந்தது. கூட்டமே இல்லை. எதிர் பெஞ்சில் ஒரு பெண் மட்டும் தனியாக உட்கார்ந்திருந்தாள்.

வண்டி புறப்பட்டது. முகத்தில் தேங்கியிருந்த வியர்வையைத் துடைத்துக் கொண்டு அவள் பெருமூச்சு விட்டாள். எதிரில் அமர்ந்திருந்த பெண் அவளையே கண் கொட்டாமல் சிறிது நேரம் பார்த்திருந்து விட்டு, "அடேடே!—நீ தங்கமில்லையா!" என்று ஆவலோடு கேட்டாள்.

நளினி நிமிர்ந்து பார்த்தாள். அந்தப் பெயரைக் கேட்டதும் அவளுக்கு என்னவோ போலிருந்தது. கேள்வி கேட்ட பெண்ணை விளக்கு வெளிச்சத்தில் சாவகாசமாகக் கூர்ந்து பார்த்தாள். அடுத்த விநாடி அவள் முகம் மலர்ந்தது. "அடேடே! நீலாவா!" என்று சிரித்தபடி கேட்டாள்.

"ஆமாம். நல்ல வேளை, என்னை நீ மறந்துவிடவில்லை" என்றாள் நீலா.

"எப்படி மறப்பது!" என்றாள் நளினி.

"இப்போது நீ இருக்கும் நிலைக்கு மறப்பது பெரிய காரியமல்லவே! ஒரு தடவை உன் புகைப்படத்தை ஒரு பத்திரிகையில் பார்த்தேன். அதன் அடியில் 'குமாரி நளினி' என்று போட்டிருந்தது. ஆனால் எனக்கு மட்டும் சந்தேகம்தான்" என்று வார்த்தையை முடிக்காமலே இழுத்தாள் நீலா.

"உன் சந்தேகம் சரிதான், நீலா. நான் இப்போது நளினியாக மாறிவிட்டேன்" என்று பெருமிதத்துடன் கூறிவிட்டு நளினி தன் தோழியை அன்போடு பார்த்தாள்.

"பெயர் மட்டுமென்ன! நீயே மாறிவிட்டாய். 'ட்ரெயினிங் ஸ்கூலி'ல் என்னோடு படித்த தங்கமா நீ என்ற பிரமை ஏற்படுகிறது. ஆனால் நீ தங்கம்தான். உன் மனசு மாறவே இல்லை" என்றாள் நீலா. தன் தோழி பிரசித்தி பெற்ற நடன ராணி ஆகியும் தன்னை மறந்துவிடவில்லை என்ற பெருமை அவள் பேச்சிலே துள்ளிற்று.

நளினி மனசுக்குள் சிரித்துக் கொண்டாள்.

நீலா பழைய கதைகளைப் புரட்ட ஆரம்பித்தாள். "ஆமாம், தங்கம். இல்லை, இல்லை—நளினி, நீ கோயில்பட்டியில் உபாத்தியாயராகச் சேர்ந்தாயே, அதன் பிறகு என்ன நடந்தது! ஏதோ ஓரிரு கடிதங்கள் எழுதினதோடு சரி. அப்புறம் உன்னைப் பற்றி எதுவுமே தெரியவில்லை. கொஞ்சம் சொல்லேன். அதை யெல்லாம் கேட்க ஆவலா யிருக்கிறது" என்றாள்.

"சொல்லுகிறேன். எனக்கும் அதை யெல்லாம் சொல்ல வேண்டுமென்கிற ஆசைதான். மனத்தில் மண்டிக் கிடப்பதை இதுவரை யாரிடமும் கூற முடியவில்லை" என்றாள் நளினி. பிறகு தொண்டையைக் கனைத்துக் கொண்டாள்.

நீலா ஆவலுடன் கேட்கத் தயாரானாள்.

* * *

"கோயில் பட்டியில் ஆசிரியையாக அமர்ந்தேன். அந்தப் பள்ளிக்கூடம் ஒரு 'பிரைவேட் மானேஜ்மெண்டு' என்பது உனக்குத்தான் தெரியுமே. ஆனால் அது அருமையான கலைக் கூடமாகவே இருந்தது. பாட்டும், நடனமும் பிரதான பாடங்களாகப் போதிக்கப்பட்டன. தற்செயலாக நடன ஆசிரியர் நித்யானந்தன் எனக்கு நல்ல நண்பராகக் கிடைத்தார்."

"நண்பராக மட்டுமா! என்ன நளினி, எதையும் மறைக்காதே. ஒரு கடிதத்தில் நீ அவரைப் பற்றியும் எழுதி யிருந்தாய்."

நளினியின் முகம் சிவந்தது. "ஆமாம், எழுதியிருந்தது உண்மைதான். என் அப்போதைய மனநிலை அப்படி. ஆனால் இன்று நளினி முற்றிலும் மாறிவிட்டாள். அவள் யாருக்கும் சொந்தமல்ல. அடிமையுமல்ல. நாட்டியக் கலைக்கே தன்னை அர்ப்பணித்துக் கொண்டிருக்கிறாள்" என்றாள்.

நீலா வியப்புடன், "அப்படியா! ரொம்ப ஆச்சரியம்தான்" என்றாள்.

"ஆச்சரியம் என்று மெதுவாகச் சொல்லி விட்டாயே. எனக்கே சில சமயம் அந்த மாறுதலை எண்ணிப் பார்த்தால் நடுக்க மெடுக்கிறது" என்றாள் நளினி.

"சரி, மேலே சொல்" என்றாள் நீலா.

"நித்யானந்தன் எனக்கு நடனப் பயிற்சி அளித்தார். இன்றைய நிலைக்கு நான் உயர்ந்ததற்கு அவருக்கு மிகவும் கடமைப் பட்டிருக்

கிறேன். ஆனால் அதைச் சுயநலம் விழுங்கப் பார்த்தது. நான் அதை ஆட்சேபித்தேன். அதன் பலனாகத்தான் இன்று தன்னந்தனியாக இப்பரந்த உலகில் - நாட்டிய உலகில் - இறங்கி விட்டேன்."

"சுய நலமா!"

"ஆம். சுயநலம்தான். என் நடனத்தை அவர் புகழ்ந்தார். வானளாவப் புகழ்ந்தார். ஆனால் பிறர் புகழ்வதை அவர் விரும்பவில்லை. இது சுயநலம் இல்லையா!"

நீலா பதில் பேசவில்லை.

"எனக்கு முதன் முதலாக ஒரு கட்டிட உதவி நிதிக்கு நடனம் ஆடச் சந்தர்ப்பம் கிடைத்தது. நான் மகிழ்ந்து போனேன். என் பெயரும், புகழும் இனி எங்கும் பரவும் என்று எண்ணினேன். ஆனால் அங்கே செல்லக்கூடாது என்று கூறினார்."

"ஏன் அப்படிக் கூறினார்!"

"பல காரணங்கள் சொன்னார். வார்த்தைகளில் தேனை ஊற்றி மெழுகினார். என் பாதை கரடு முரடானதாம். அதில் நடக்க விவேகம் வேண்டுமென்றார். அது தன்னிடம் நிறைய இருப்பதாக அவர் நினைப்பு. அந்தக் கட்டிட நிதியையே தான் நம்பத் தயாராயில்லை என்றார். சில வேஷக்காரர்கள் சுயநலத்தை நாடிய குறிக்கோளாகக் கொண்டு செய்யும் இந்த ஏற்பாட்டை நாம் ஆதரிக்கக் கூடாது என்றார். அவரை என்னால் புரிந்து கொள்ள முடியவில்லை.'

"நான் சொல்லுகிறேன் என்று கோபித்துக் கொள்ளாதே, நளினி. உண்மையில் அப்படிப் பலரும் கலையுலகில் இருக்கத்தான் இருக்கிறார்கள்."

"இருக்கட்டுமே! நமக்கு வேண்டியது புகழும், பணமும். எந்த இடமாயிருந்தால் என்ன! இது என் கட்சி. கடைசியில் அவர் சம்மதித்தார். என் நடனத்துக்குப் பின்னணி ஏற்பாடு செய்திருந்தார்கள். மேடைமீது அவருக்கு இடம் கிடைக்கவில்லை. அவரை அங்கே யாரும் மதிக்கவில்லை. நடனத்தைப் பார்க்காமலே திரும்பிப் போய் விட்டார். எனக்கு எப்படி இருக்கும் என்று நீயே சொல்" என்றாள் நளினி.

நீலா பேசாமல் வெளியே பார்த்தாள். அவளையே கூர்ந்து பார்த்துக் கொண்டிருந்தாள் நளினி. தன் தோழி தன் கட்சியை ஆதரிப்பாள் என்றே அவள் நம்பினாள்.

நீலா திரும்பி அவளைப் பாராமலே பேசலானாள். "நீ செய்தது சரியா, தப்பா என்பது நான் கூற வேண்டிய விஷயமல்ல. ஆனால் தெரிந்ததைச் சொல்கிறேன், நீ அவரைப் புறக்கணித்திருக்கக் கூடாது என்பது என் அபிப்பிராயம்" என்றாள்.

நளினி திகைத்து விட்டாள். கோபம் கோபமாக வந்தது அவளுக்கு. "என் மனநிலை உனக்குத் தெரிந்திருந்தால்......" என்று ஆரம்பித்தாள்.

நீலா சாவதானமாகத் தலையசைத்தாள். "எனக்குத் தெரியும் நளினி. ஆவேசம் உன்னைப் பிடித்து உலுக்கி விட்டது. ஆனால் நான் கேட்கிற கேள்விக்குச் சரியாகப் பதில் சொல். அவர் உன் முன்னேற்றத்தை விரும்பவில்லையா!" என்று கேட்டாள் தீர்க்கமாக.

நளினி சிறிது யோசித்து விட்டு, "அதை என்னால் நிச்சயமாகச் சொல்ல முடியாது. ஆனால் அப்படி நடந்து கொண்டார்" என்றாள்.

"ஏன் அவர் கூறிய படியே அந்த கோஷ்டி விரும்பத்தகாததாக இருக்க முடியாதா!"

"அதுதான் வேடிக்கை. அடுத்தடுத்துச் சில கச்சேரிகள் வைத்து விட்டு அவர்கள் இருந்த இடம் தெரியாமலே ஓடிப் போய்ச் சேர்ந்தார்கள் என்று கேள்விப்பட்டேன்."

"அப்படியானால் அவர் நினைத்தது சரிதானே!"

"சரியாக இருக்கலாம். ஆனால், அதனால் எனக்கென்ன! என் வரையில் பணம் கிடைத்து விட்டது. அந்தக் கச்சேரி என் புகழுக்கும் வழி தேடி வைத்தது" என்றாள் நளினி.

நீலா சிரித்தாள். "உனக்குப் புகழ்மீதே கண்ணாக இருந்திருக்கிறது. உன் வெற்றி, கலையின் பூரணத்துவத்தில் பொறிக்கப்பட்டு விட்டபோது நீ பயப்பட்டிருக்கவே வேண்டாம். நிதானமாகவே முன் வந்திருக்கலாம், இல்லையா!"

நளினி பதில் சொல்லவில்லை.

"என்னைப் பார். நான் வாழ்க்கையில் உன்னைப் போன்ற ஆடம்பர வாழ்வுக்கு அதிர்ஷ்டம் செய்தவளல்ல. ஆனால் மகிழ்ச்சியாக வாழ்கிறேன். என் கணவர் மிக நல்லவர். என்னிடம் அவர் காட்டும் அன்புக்கு அளவே இல்லை. சந்தோஷம் நல்ல இல்லறத்தில்தான் பரிபூரணமாக இருக்கிறது."

"உனக்குக் கல்யாணம் ஆகிவிட்டதாடி, நீலா! எனக்குத் தெரியாதே."

"ஆகிவிட்டது. உனக்கும் அழைப்பு அனுப்பினேன். கோயில் பட்டியில் நீ இருந்திருந்தால் தானே உனக்கு அது கிடைக்க! பத்திரமாக அது என்னிடமே திரும்பி வந்தது."

நீலா பேசியதைக் கேட்டதும் நளினிக்கு முகம் மலர்ந்தது. கூடவே தன்னைப் பற்றிய நினைவும் வந்தது. அவள் ஒன்றும் பேசாமல் வெளியே பார்த்தாள். பிறகு ஏதோ நினைத்துக் கொண்டவள் போல, "நீ எதுவரை போகிறாய், நீலா" என்று கேட்டாள்.

"அரியலூருக்கு. ஆச்சு, ஊரும் நெருங்கி விட்டது" என்றாள் நீலா.

"அதற்குள் நீ போகிறாயா! சரி" என்றாள் நளினி.

அரியலூரில் வண்டி நின்றது. நீலா இறங்கினாள். "நான் வருகிறேன், நளினி, என்னை மறந்து விடாதேயம்மா" என்றாள்.

நளினி தலையசைத்தபடி, "அது எப்படி முடியும், நீலா! ஜாக்கிரதையாய்ப் போய் வா" என்று விடை கொடுத்தாள்.

அந்த சமயம் வண்டியில் ஒரு பெண்மணி ஏறினாள். அவள் இடுப்பில் அழகே உருவெடுத்த ஒரு குழந்தை தவழ்ந்தது. நளினி அந்தப் பெண்மணியையே உற்றுப் பார்த்தாள். அவளுக்கென்னமோ தூக்கமே பிடிக்கவில்லை. மறுநாள் ஆடியாக வேண்டுமே, அதற்காக வேனும் தூங்க வேண்டுமென்று அவள் பிரயாணத் திட்டத்தில் நிர்மாணித்திருந்தாள். ஆனால் எல்லாம் காற்றில் பறந்து போய் விட்டது.

"ஜாக்கிரதை, அக்கா, நானும் மாப்பிள்ளையும் பின்னால் வருகிறோம். டேய்! ராஜா, விஷமம் பண்ணாமல் அம்மாவிடம் இருக்கணும்" என்று குழந்தையின் கன்னத்தை வருடி விட்டு ஒரு அழகிய வாலிபன் நகர்ந்தான்.

"கபளீகரா பிக்சர்ஸில் தயாராய்க் கொண்டிருக்கும் 'பாதுகா பட்டாபிஷேக'த்தில் நான் உயிரைக் கொடுத்து நடித்திருக்கிறேன்."

"அப்படியா? நீங்கள் அந்தப் படத்தில் எந்த வேஷத்தில் நடிக்கிறீர்கள்?"

"பாதுகையாக நடித்திருக்கிறேன்!"



பாரதி சங்கீத வித்யாலயத்தின் ஐந்தாம் ஆண்டு விழா சென்ற மாதம் 25உ சென்னை ஆதியப்ப நாயக்கன் தெருவில் இருக்கும் வித்யாலயக் கட்டிடத்தில் விமரிசையாக நடந்தது. அதையொட்டி மேற்படி வித்யாலய மாணவிகள் ''தியாகராஜர்'' அல்லது ''சங்கீத ஜோதி'' என்ற பெயரில் தியாகய்யரின் வாழ்க்கைச் சரித்திரத்தை நாடகமாக நடித்தார்கள். சௌந்தர்ய மகாலில் நடந்த இந்த நாடகத்துக்குத் தலைமை வகித்த ''கல்கி'' ஆசிரியர் அவர்கள் நாடகத்தையும், அதில் நன்றாக நடித்து அருமையாகப் பாடிய குழந்தைகளையும் வெகுவாய்ப் பாராட்டிப் பேசினார். மேற்படி நாடகத்தில் நடித்த குழந்தைகளையும், நாடகத்தில் ஒரு முக்கிய காட்சியையும் மேலே படத்தில் காணலாம்.

27உ ஹைகோர்ட் நீதிபதி டி. எல். வெங்கட்ராமய்யர் அவர்கள் தலைமையில் பாரதி சங்கீத வித்யாலயத்தைச் சேர்ந்த ஸ்ரீமதிகள் ராதா - ஜயலக்ஷ்மியின் சங்கீதக் கச்சேரி நடைபெற்றது. வயலின் ஸ்ரீ ஆர். எஸ். கோபாலகிருஷ்ணன், மிருதங்கம் கல்பாத்தி ஸ்ரீ ராமநாதன், கடம் ஸ்ரீ சுந்தரம் முதலியவர்கள் பக்கவாத்தியம் வாசித்துச் சிறப்பித்தனர்.

---

அந்தப் பெண்மணி உட்கார்ந்ததும் நளினி கேட்டாள். ''நீங்கள் எதுவரை போகிறீர்கள்!''

குரலின் கவர்ச்சியோ அல்லது வேறென்னவோ அந்தக் கேள்வி கேட்டவளைக் கூர்ந்து பார்த்தாள் அந்தப் பெண்மணி. விவரிக்க இயலாத ஒரு உணர்ச்சி அவள் உடலில் பரவியது போலிருந்தது. ''நாங்கள் காஞ்சீபுரம் போகிறோம். நீங்கள்......!'' என்று கேட்டாள் அவள்.

''நானும் காஞ்சீபுரம் போகிறேன் அம்மா!''

''அப்படியானால் ரொம்ப நல்லதாப் போச்சு. அங்கே நாளைக்கு உறவினர் வீட்டுக் கல்யாணம். நான் வரவில்லை என்றேன். ஆனால் அவரோ பிடிவாதமாக நானும் வந்தால்தானாச்சு என்று இழுத்துக்கொண்டு வருகிறார்'' என்றாள் அப்பெண்மணி.

''அவர் எங்கே!'' என்று நளினி கேட்டாள்.

அந்த அம்மாளுக்கு முகம் சிவந்து விட்டது. நளினிக்கு ஏன் கேட்டோம் என்றிருந்தது.

''அவரும் என் தம்பியும் மூன்றாம் வகுப்பில் வருகிறார்கள். எனக்கு இப்பொழுது உடம்பு சுகமில்லை. அதனால் என்னை இரண்டாம் வகுப்பில் ஏற்றிவிட்டிருக்கிறார். இப்படியாவது கஷ்டப்பட்டு அங்கே போகணும் என்று என்னம்மா வேண்டியிருக்கிறது! நாங்களோ ஏழைகள். போதுமான வசதி இல்லாதபோது இதெல்லாம் எதற்காக!'' என்று வருத்தத்துடன் அந்த அம்மாள் கூறினாள்.

தன் மனைவியை இரண்டாம் வகுப்பில் ஏற்றிவிட்டுத் தான் மட்டும் மூன்றாம் வகுப்பில் வரும் அந்த அன்புக் கணவனை மனக் கண்ணால் பார்த்தாள் நளினி. கணவன்! அவன் அன்பின் உருவாக இருந்துவிட்டால், அவள் பாக்கியசாலிதான்!

''உங்கள் கணவருக்கு எவ்வளவு அன்பு உங்கள் மீது!'' என்று வியந்தாள் அவள்.

''ஆம், அம்மா. அந்த அன்புக்கு ஈடு இணை இல்லை. ஆனால் ஆரம்பத்தில் நான் அவர் அன்பைப் பெற ரொம்பக் கஷ்டப்பட்டவள்தான். என் குழந்தை இந்த ராஜா பிறந்த பிறகு, எல்லாமே மாறிவிட்டது. அவர் என்மீது பரிபூர்ண அன்பு கொண்டிருக்கிறார்'' என்றாள் அவள்.

அப்பா :—உபாத்தியாயர் ஸார், பையன் வகுப்பிலே முதலாக இருப்பான் என்று சொன்னீர்கள். பையனுக்கு இன்னும் ஒன்றும் படிக்கவே தெரியவில்லையே!

உபாத்தியாயர் :—நான் அப்படி எங்கே சொன்னேன்? வகுப்பு விட்ட உடனே வாசலிலே முதலில் இவனைத் தான் பார்க்கலாம் என்று சொன்னேன்!

நளினி குழந்தையைப் பார்த்தாள். அதே சமயம் அந்த ராஜாப் பயல் அவளை நோக்கித் தாவினான். அவனை அன்புடன் வாங்கி மார்போடு அணைத்தாள் அவள். ஆஹா! குழந்தைகள் தானே வீட்டின் நிரந்தர செல்வங்கள். பேசும் பொற் சித்திரங்கள்.

"டேய் ராஜா! அந்த அம்மா வீட்டுக்குப் போறயாடா!" என்று கேட்டாள் அப்பெண்மணி.

"மாட்டேன்" என்றான் ராஜா.

"ஏண்டா கண்ணு! நான் பால், பழம், மிட்டாய் எல்லாம் வாங்கித் தரேண்டா ராஜா! என் வீட்டுக்கு வந்து விடு" என்றாள் நளினி.

குழந்தை அவளையே பார்த்துக் கண்கள் மலர விழித்தது. கன்னம் குழிய சிரித்தது.

"இவன் நல்ல அதிர்ஷ்டக்காரனம்மா. இவனுக்காகவே நான் எத்தனை ஜென்மம் வேண்டும் என்றாலும் எடுப்பேன்" என்றாள் அவள்.

நளினிக்குத் திடீரென்று அந்த அம்மாள் தன் வாழ்க்கையின் ஆரம்பத்தில் துக்கம்தான் நிரம்பியிருந்தது என்று கூறியது நினைவுக்கு வந்தது. "பொதுவில் வாழ்க்கையே விநோதமானது. ஆனால் விரும்பத் தக்கது" என்றுதான் அவள் நினைத்தாள். பல புதுமைகளையும் உணர்ந்து கொள்ள வேண்டுமென்று தோன்றியது அவளுக்கு. நீலா கூறியது ஒருவிதம்; இப் பெண்மணி கூறுவது வேறு விதம்.

"ஏனம்மா உங்கள் ஆரம்ப வாழ்க்கையில் ஏதோ கஷ்டங்கள் இருந்ததாகச் சொன்னீர்களே......" என்று ஆரம்பித்தாள் நளினி.

"கஷ்டமான கஷ்டமல்ல. உன் பெயர் என்னம்மா! என் பேர் சரஸ்வதி. பெயரைச் சொல்லியே கூப்பிடலாமே. நானும் நீயும் ஏறக்குறைய ஒரே வயது மாதிரி இருக்கோம் இல்லையா!" என்று கேட்டாள் அவள்.

"என் பெயர் தங்கம்" என்றாள் நளினி. ஏனோ தன் உண்மைப் பெயரை—உலகம் அறிந்த பெயரைச் சொல்லத் தைரியம் வரவில்லை அவளுக்கு.

"கேள், தங்கம்! நீ என் சகோதரி மாதிரி. உன்னிடம் சொன்னால் என்ன! என் புருஷன் என் மீது ரொம்பப் பிரியமாயிருக்கார் என்று சொன்னேனே அது இப்போ இரண்டு வருஷமாகத்தான். அதுக்கு முன்பு அவர் மனத்தை ஒரு மோஹினி பிடித்து உலுக்கி விட்டுவிட்டுப் போயிருந்தாள்."

"அப்படியா!"

"அவள் மிகவும் சாமர்த்தியசாலி. இவர் வெகுளி. ஒரு வகையிலே பைத்தியம் மாதிரி இருந்து விட்டார். இவரிடமிருந்து நாட்டியக் கலையைப் பரிபூரணமாகக் கற்றுக் கொண்டு அவள் கம்பி நீட்டி விட்டாள். இவரோ அவளையே நினைத்து உருகித் தவித்தார். சரியான தூக்கமில்லாமல் சாப்பாடில்லாமல் அப்பப்பா! உடம்பு எப்படிப் போச்சு தெரியுமா! ஆனால் தன் தவறு அவருக்கே சீக்கிரம் தெரிந்து விட்டது. அவள் எமகாதகி. இனிமேல் தன்னைக் கவனிக்க மாட்டாள் என்று தெரிந்து கொண்டதும்......" என்று கேட்டு அவள் முகத்தை ஏறிட்டுப் பார்த்தாள். அவள் முகத்தில் ஏற்பட்ட மாறுதலைக் கண்டதும். ஏன், முகத்தைச் சுளுக்கிக் கொண்டிருக்கிறாய் தங்கம்!" என்று சரஸ்வதி கேட்டாள்.

நளினி வெளியே பார்த்தாள். பேச்சை மேலும் வளர்த்த இஷ்டமில்லாமற் போனாலும், மேலுக்கு "அப்புறம்!" என்று வினவினாள். தன் மார்பை யாரோ பெரிய கோடாரியால் தகர்ப்பதுபோலிருந்தது அவளுக்கு.

"அப்புறம் என்ன! இவருடைய போட்டோ ஆல்பத்தில் அந்தச் சிங்காரியின் படத்தை வைத்துப் பூஜை பண்ணுவதை ஒரு நாள் பார்த்து விட்டேன். அதை எடுத்து நெருப்பிலே போட்டேன். அதற்காக என்னுடன் அவர் பிடித்த சண்டை! ஆனால் தங்கம், இப்போது எல்லாம் மாறிப் போச்சு. அதெல்லாம் கனவு போல ஆகி விட்டது. அவர் இனிமேல் என்னைத் தவிர......"

சரஸ்வதி மேல் கொண்டு பேச முடியாமல் நிறுத்தினாள். நளினி குழந்தையை அழுத்தி முத்த மிட்டு விட்டு அவளிடம் நீட்டினாள்.

செங்கல்பட்டு வந்தது. அவசர அவசரமாக இறங்கி நளினி வெளியே போனாள்.

* * *

சரஸ்வதி தன் கணவனுக்காகவும், தம்பிக்காகவும் காத்திருந்தாள். அவர்கள் வந்தார்கள். ராஜாவை வாங்கியபடியே அவள் சகோதரன் "என்ன அக்கா, குறும்பு பண்ணியிருந்தானா!" என்று கேலியாகக் கேட்டான்.

"ஊஹூம், அவனுக்கு ஒரு அம்மாள் கிடைத்து விட்டாள். அவளோடு ஒட்டிக் கொண்டான். அடேடே! தங்கம் எங்கே!" என்று கேட்டுச் சுற்று முற்றும் பார்த்தாள் சரஸ்வதி.

"யாரு! தங்கமா!" என்று அவள் கணவன் திகைப்போடு வினவினான்.

"ஆமாம். அவள் பேரு தங்கம் என்று சொன்னாள். காஞ்சீபுரம்தான் போகிறாளாம்" என்றாள் சரஸ்வதி.

"அக்காவுக்குப் பேச்சு சுவாரஸ்யத்திலே எல்லாமே மறந்து போயிடும்" என்றான் தம்பி.

"வண்டியிலே எதையாவது மறந்து வைத்திருக்கப் போகிறாள்!" என்று சொல்லியபடியே உள்ளே ஏறிய அவள் கணவன் அங்கே கிடந்த ஒரு கைக்குட்டையை எடுத்தான். அதில் 'நளினி' என்ற பெயர் ஒரு ஓரத்தில் தைக்கப் பட்டிருந்தது. அதை எடுத்துத் தன் சட்டைப் பையில் வைத்துக் கொண்டான் அவன். இதைச் சரஸ்வதியும் அவள் தம்பியும் கவனிக்காதபடி மிகுந்த சிரமம் எடுத்துக் கொண்டான்.

"சரி, நாம் போவோமே" என்றதும் அவர்கள் கிளம்பினார்கள்.

பாவம்! காஞ்சீபுரத்தில் தங்கத்தைத் தேட முயன்ற சரஸ்வதியும், அவளுக்குத் தெரியாமல் தேடித் தேடி அலைந்து திரிந்த அவள் கணவனும் கடைசியில் தோல்வியே அடைந்தனர்.

தூக்கமில்லையா?

'ஆஸ்ப்ரோ' சாப்பிடுங்கள்



# ASPRO

REG. TRADE MARK

---

## தவணைச் சலுகையில்

### உங்கள் புதிய சைக்கிளை வாங்குங்கள்



ரூ. 1,00,000/- மதிப்புள்ள சைக்கிள்கள் இதுவரை டெலிவரி செய்யப்பட்டுள்ளது. இறுதியான விலைக் குறைவு இது தான். சந்தர்ப்பத்தை நழுவ விடாதீர்கள்.

ஒரு அரிய சலுகை. 25% முன்னதாக செலுத்தி பாக்கித் தொகையை ஆறு மாத தவணைகளில் செலுத்த வேண்டும். இங்கிலீஷ் சைக்கிள்கள் ரூ. 195/-, [illegible] 155/-, ஹெர்குலஸ் ரூ. 245/-, பி. எஸ். ஏ. ரூ. 265/-, பிலிப்ஸ் ரூ. 235/-, ராலே க்ரீன் ரூ. 360/- டைனமோ செட் 30/- நிபந்தனைகளின்படி உடனடியான டெலிவரி. புத்தம் புதிய சரக்குகள். ஒரிஜினல் பாகங்கள். டன்லப் டயர்கள், சிட்டுக்கு உத்திரவாதம். முழு விலாசத்துடன் அருகாமையிலுள்ள ரயில்வே ஸ்டேஷன் பெயரையும் குறிப்பிட்டு உடனே எழுதுங்கள்.

## உங்கள் குழந்தைக்கு ஓர் புதிய டிரைசைகிள்




வெகு சுலபமாக ஓடும். உறுதியாக அமைக்கப்பட்டது. விலை ரூ. 25/-லிருந்து ரூ. 15/-க்குக் குறைக்கப்பட்டுள்ளது. உங்கள் முழு விலாசத்துடன் அருகாமையிலுள்ள ரயில்வே ஸ்டேஷன் பெயரை எழுதி உடனடியாக ஆர்டர் செய்யுங்கள்.

**MIDLAND TRADING CO., LTD., POST BOX 1987, BOMBAY-1**

---

## உங்களது இருமலுக்கு

தவறாது டஸனாலை உட்கொள்ளுங்கள்




சீல் உடைபடாமலிருக்கிறதா எனக் கவனிக்கவும்

# TUSSANOL

**R E G U L A R L Y**

Make sure seal is unbroken

TRE




# 36. அர்த்த மத்ஸ்யேந்திராசனம் பழகும் வகை

விரிப்பின் மேல் உட்காரவும். இடது முழங்காலை மடித்துப் புருஷ்டங்களுக்கு மத்தியில், குதிக்காலை இழுத்து வைத்துக் கொள்ளவும். அடுத்த பக்கங்களில் வெளியாகியிருக்கும் சித்திரங்களில் இரண்டாவது சித்திரத்தைக் கவனியுங்கள்.

வலது காலைத் தூக்கி, இடது தொடைக்கு வெளியே பக்கத்தில் மூன்றாவது சித்திரத்தில் இருப்பதுபோல் வைக்கவும்.

தூக்கி நிற்கும் வலது முழங்காலை, இடது அக்குளுக்குள் வலது கையால் தள்ளவும். நான்காவது சித்திரத்தைக் கவனியுங்கள்.

ஆறாவது சித்திரத்தைக் கவனியுங்கள். அந்தச் சித்திரத்தில் உள்ளபடி இடது கையைத் தூக்கி வலது முழங்காலை அக்குளுக்குள் வைக்கவும்.

ஐந்தாவது சித்திரத்திலுள்ளபடி இடது கையால் இடது முழங்காலைப் பிடித்துக் கொள்ளவும்.

பின் முதுகை வலது பக்கம் நன்கு திருப்பி, இடது தொடைக்கு வெளியில் இருக்கும் வலது காலின் கணுக்காலுக்கு மேல் பாகத்தை வலது கையால் பிடித்துக் கொள்ளவும். இந்தக் கட்டுரையின் ஆரம்பத்தில் இருக்கும் முதல் சித்திரத்தைக் கவனியுங்கள். முகத்தையும் வலது பக்கம் திருப்பி நேராய் நிமிர்ந்து பார்க்க வேண்டும். அதற்கு அடுத்த சித்திரத்தைக் கவனியுங்கள்.

இந்த நிலையில் பத்து வினாடி முதல் அரை நிமிஷம் வரை இருக்கலாம். இதற்கு மூச்சுக் கட்டுப்பாடு கிடையாது. இஷ்டம்போல் மூச்சை நன்கு விடவும் இழுக்கவும் செய்யலாம்.

வேண்டிய நேரம் இவ்வாசனம் செய்து விட்டுப் பிறகு ஆசனத்தைக் கலைத்து விட்டு முன் சொன்னதைப் போலவே மாற்றிச் செய்ய வேண்டும். அதாவது வலது முழங்காலை மடக்கி குதிக்காலை புருஷ்டங்களுக்கு இடையில் வைத்து இடது காலைத் தூக்கி வலது தொடைக்குப் பக்கத்தில், வெளியே வைக்கவும். இடது முழங்காலை வலது அக்குளுக்குள் தள்ளிவைத்து வலது கையால் வலது முழங்காலைப் பிடித்துக் கொள்ளவும். பின் முதுகையும், முகத்தையும், இடது பக்கம் திருப்பி இடது கையில் வலது தொடையின் வெளியில் இருக்கும் இடது கணுக்காலின் மேல் பாகத்தைப் பிடித்துக் கொள்ளவும்.

இம்மாதிரி இரண்டு பக்கமும் செய்தால் ஒரு தடவை அர்த்த மத்ஸ்யேந்திராசனம் செய்ததாகும். இந்த மாதிரி மூன்று முதல் ஆறு தடவைகள் வரை செய்து வரலாம்.

இந்த ஆசனத்தைப் பழகும்போது சித்திரங்களைப் பக்கத்தில் வைத்துப் பல தடவை நன்றாய்ப் பார்த்துப் பார்த்துப் பழக வேண்டும். சிலருக்குக் குதிக்கால் புருஷ்டத்தின் மத்திவரை இழுத்து வைக்க முடியாது. கால் நரம்புகள் பிடிப்பாய் இருப்பதாலும், தொடை கனத்திருப்பதாலும், வயிறு பெருத்திருப்பதாலும் இம்மாதிரி செய்வதற்குச் சரியாய் வராது. செய்ய வரவில்லையே என்று விட்டுவிடக் கூடாது. அலை ஓய்ந்த பின் சமுத்திர ஸ்நானம் செய்வேன் என்று சொன்னால் எப்படியோ அப்படியேதான் ஆசனங்கள் எல்லாம். மெலிந்த தேகமுடையவர்களுக்குத் தான் வரும் என்று விட்டுவிடக் கூடாது. மெலியும்போது மெலியட்டும் என்று செய்ய வேண்டியதுதான். ஆனால் மெலிந்தாலும், கனமாய் இருந்தாலும், வயிற்று உறுப்புகள் அமுக்கப்படுவதால் பலன் என்னவோ பூரணமாய் உண்டு. சில நாட்கள் பழகி வந்தால் நாளடைவில் நரம்புகளின் பிடிப்புவிட்டு சாதாரணமாய்ப் பழக வரும். தொடைகளின் கனமும் குறையும். பழகினவர்களுக்குத் தொடை கனமாயிருக்கலாம். அப்படி இருப்பதனால் இடைஞ்சல் ஒன்றும் ஏற்பட்டு விடாது.

சிலருக்கு மற்றொரு காலைத் தூக்கித் தொடைக்குப் பக்கத்தில் வைத்தால், கால் சரிவரத் தரையில் படியாது. சிலருக்குப் பக்கமாய் ஒட்டி வைக்கவும் வராது. முயற்சியுடன் பழகி வந்தால் இதையும் சில நாட்களில் சரியாய்ச் செய்துவிடலாம். சிலருக்கு முழங்காலை அக்குளுக்குள் என்னதான் அழுத்தி வைத்தாலும் அடங்காமல் வெளியே வந்து விடும். சிலருக்கு அக்குள் வரை முழங்காலைக் கொண்டு செல்ல முடியாது. அப்பேர்ப்பட்டவர்கள் முதலில் முடிந்தவரை செய்யவேண்டியது தான். சிலருக்குக் கையால் முழங்காலை எட்டிப் பிடிக்க முடியாது. கைக்கும் முழங்காலுக்கும் ஒரு சாண் உயரம் நிற்கும். அப்படியும் கஷ்டப்பட்டு எட்டிப் பிடிப்பதற்கு முயற்சி செய்தால் அக்குளுக்குள்ளிருக்கும் முழங்கால் நழுவி வந்து விடும். இந்தக் குறைகளை எல்லாம் காலா வட்டத்தில் தான் சரி செய்து கொள்ள வேண்டும்.

இதன்பின் முதுகைத் திருப்பித் தரையில் ஊன்றியிருக்கும் காலைப் பிடிக்கப் போனால், சிலருக்கு எட்டாது; சிலருக்குத் தொடைவரை எட்டும். எட்டும் வரை முதலில் செய்து பிறகு தினந் தினம் அதிகமாய் எட்டி கணுக்காலைப் பிடிக்க முயற்சி செய்ய வேண்டும். சிலர் முகத்தைத் திருப்பி நேராய்ப் பார்க்கச் சொன்னால் நிமிர்ந்து மேலே பார்க்க ஆரம்பித்து விடுவார்கள். ஆகையால் சித்திரத்தை நன்றாகக் கவனித்து சாதாரணமாய் நேர் பார்வையாய்த் திருப்பிப் பார்த்தால் போதும்.

இந்த ஆசனத்தை வயிற்றில் ஆப்பரேஷன் செய்து கொண்டவர்கள், ஆசன நிபுணர்களின் ஆலோசனையின் பேரில்தான் செய்யலாம். மற்றபடி எல்லோரும் சாதாரணமாய் இந்த ஆசனத்தைப் பழகலாம். அதனால் கெடுதல் இல்லை.

ஏற்கெனவே ஆசனங்கள் செய்து வரும் பெண்கள் கர்ப்பம் கொண்டால், மூன்று மாதம் வரைதான் இந்த ஆசனத்தைச் செய்யலாம். அதன்பின் செய்யக்கூடாது. ஆசனங்களையே பழகி அறியாத பெண்மணிகள் கர்ப்பம் கொண்டால், புதிதாய் இந்த ஆசனத்தைப் பழகக் கூடாது.

இந்த ஆசனத்தினால் ஏற்படும் முக்கியமான பலன்கள்: எல்லா பாகமுமே நன்கு அழுத்தப் படுகின்றன. அதில் முக்கியமாய் முதுகெலும்பும் நன்றாக முறிக்கப் படுவதால், முதுகெலும்புகள் பக்கங்களில் இடுப்பு பாகத்திலிருக்கும் குண்டிக்காய்களுக்கு நல்ல பயிற்சி ஏற்படுகிறது. அதனால் மூத்திர சம்பந்தமான கோளாறுகள் எதுவும் வராது. அப்படி வந்தவர்கள் இந்த ஆசனத்தைச் செய்தால் சரியாய் விடும். மூத்திர கோசங்கள் ஆரோக்கிய மடைவதால், இரத்தத்திலுள்ள அசுத்தங்கள் நன்கு பிரிக்கப்படும். அப்படிப் பிரிப்பதால் இருதயமும் சுகமடையும். நாடி நரம்புகள் எல்லாவற்றிற்குமே சுத்த ரத்தம் கிடைப்பதால் ஆரோக்கியம் அபிவிருத்தியடையக் கேட்கவும் வேண்டுமா?

இது தவிர மற்றொரு அற்புதக் காரியமும் நடைபெறுகிறது. மூத்திரக்காய்களுக்கு மேலே யிருக்கும் அட்ரினலின் கோளங்களும் இந்த அர்த்த மத்ஸ்யேந்திராசனத்தினால் ஊக்குவிக்கப்படுகின்றன. சுறுசுறுப்பில்லாதவர்களுக்கு இந்த ஆசனம் செய்ததும் சுறுசுறுப் பேற்படுவதன் காரணம் இதுதான். இந்தக் கோளங்களிலிருந்து வரும் ரசம்தான் இருதயத்தை ஆட்சி புரிகின்றது. இந்த ரசத்தின் அளவைப் பொறுத்துத்தான் சுறுசுறுப்பேற்படும். எனவே சுறுசுறுப் பேற்பட, காப்பியை விட இந்த மார்க்கம் சிறந்ததல்லவா! காப்பியையாவது அடிக்கடி சாப்பிட வேண்டும். இந்த அர்த்தமத்ஸ்யேந்திராசனம் அவ்வாறு அல்ல. காலையில் சௌகரியமில்லாதவர்கள் மாலையில் மூன்று அல்லது ஐந்து தடவை செய்து விட்டால் அது அன்று பூராவுக்கும் சுறு சுறுப்பாய் இருக்கப் போதுமானது.

சோம்பலாயிருந்தால் சிலர் எழுந்து நின்று, இரண்டு கைகளையும் தலைக்கு மேல் கொண்டு சென்று, கைகளைக் கோத்துக் கொண்டு, உடலை முறுக்கிக் கால்களை எக்கி, சோம்பலை முறிப்பார்கள். இது எல்லோருக்கும் இயற்கையாய் ஏற்பட்ட ஒரு பயிற்சி. அப்படிச் செய்ததும் என்ன ஆகிறது! நரம்பு முறுக்கேற்றப் படுகிறது; இடுப்பை வளைப்பதால் அட்ரினல் கோளங்கள் கசக்கப்படுகின்றன. அதிலிருந்து ரசம் சிறிது அதிகப்படியாய் ரத்தத்தில் கலந்து சோம்பல் கலைந்து சுறு சுறுப்பேற்படுகிறது. சோம்பல் இம்



மாதிரியெல்லாம் போகின்றது என்று யாரும் நினைப்பதுமில்லை. அது இயற்கையாகவே ஏற்பட்டது. கடவுள் கொடுத்த வரப்பிரசாதம்!

பூனை, நாய் முதலிய ஜந்துக்களும் இம்மாதிரி உடலை வளைத்து, குறுகி சோம்பல் முறிப்பதைப் பார்த்திருப்பீர்கள். இயற்கை அதனதன் சக்திக்குத் தக்கவாறு இயற்கையாகவே சில பயிற்சிகள் தமக்குத் தெரியாமலேயே நடத்தி வருகின்றது. அவைகளில் சேர்ந்ததுதான் இப் பயிற்சிகளெல்லாம். சாதாரண உடல் திருகலுக்கே சோம்பல் ஓடுகின்றதென்றால், அர்த்த மத்ஸ்யேந்திராசனத்தில் கேட்கவா வேண்டும்! வயிற்றிலுள்ள எல்லா உறுப்புகளுமே அமுக்கப்படுகின்றன. அதே சமயம் இடுப்பும் திருகப்படுகிறது. மூத்திரக் காய், அட்ரினல் கோளம், சிறு குடல், பெருங் குடல், கல்லீரல், மண்ணீரல் பித்தப் பை முதலிய எல்லாமே அழுத்தப்படுகின்றன. அதனால் வயிற்றுக் கோளாறுகள் எதுவாயினும் விலகுகின்றன.

முதுகெலும்பில் முறுக்கேறுவதால் அதன் வழியாய் வந்து பிரியும் நரம்புக் கூட்டங்களுக்கெல்லாம் பயிற்சி ஏற்படுகிறது. மேல் பாகப் பிரிவாகிய தலை நரம்புகள் இழுக்கப்படுவதால் தலையில் இருக்கும் அவயவங்கள் தேஜஸ் அடைகின்றன. மார்பு பாகம் திரும்பி முறுக்கேறுவதால் அதன் பாக நரம்புக் கூட்டங்கள் விழிப்படைந்து, நுரையீரல், இருதய சம்பந்தமான வியாதிகள் விலகுகின்றன. இடுப்புக்குக் கீழும் முறுக்கப்படுவதால், அதன் வழி பரவும் நரம்புக் கூட்டங்கள் ஆரோக்கிய மடைந்து வயிற்று உறுப்புக்கள், கால்கள் முதலியவைகள் பலம் அடைகின்றன.

ஆஸ்துமாக்காரர்களுக்கு அர்த்த மத்ஸ்யேந்திராசனமும் ஒரு முக்கிய ஆசனமாகும். இந்த ஆசனம் செய்யும்போது ஆஸ்துமாக்காரர்களுக்கு இரண்டுவித நன்மைகள் ஏற்படுகின்றன. ஒன்று மார்பு பாக நரம்புகள் விரிப்படைந்து நுரையீரலிலுள்ள காற்றுக் குழாய்கள் ரத்த நாளங்கள் எல்லாம் சுறுசுறுப்படைவதால் இழுப்பு குறைய ஏதுவாகிறது. அதே சமயம் வயிற்றில் உள்ள அட்ரினல் கோளத்தின் ரசம் ரத்தத்தில் கலப்பதால் ரத்த ஓட்டம் சுறுசுறுப்பெய்தி ஆஸ்துமா குறைய ஏதுவாகின்றது. இந்த அர்த்த மத்ஸ்யேந்திராசனத்தை ஆஸ்துமாக்காரர்கள் செய்தால் அட்ரினல் கோளத்தின் ரசமாகிய அட்ரினலினின் மருந்தை ஊசி மூலம் உடலினுள் செலுத்த வேண்டிய தேவையே இல்லை. இயற்கையாகவே அட்ரினல் ரசம் ரத்தத்தில் அமோகமாய்க் கலந்து விடும். எனவே ஆஸ்துமாக்காரர்களுக்கு இந்த ஆசனம் ஒரு பெரும் ஆஸ்தியைப் போன்றது.

இரத்த அழுக்கம் என்ற வியாதி உள்ளவர்கள் இந்த ஆசனத்தை முதன் முதலில் பழகக் கூடாது. மற்ற ஆசனப் பிராணாயாம வழிகளால் குணப்படுத்திக் கொண்டபின் அர்த்தமத்ஸ்யேந்திரா ஆசனத்தைச் செய்ய ஆரம்பிக்கலாம்.

"ஒரு கட்டு பழைய பத்திரிகைகள் அனுப்பியிருந்தேனே! அவைகள் எதற்காயினும் உபயோகப் பட்டதா?"

"ஆகா, உபயோகப் பட்டது! அந்தப் பத்திரிகைக் கட்டுக்குள்ளிருந்த தேள் எங்கள் வீட்டில் ஒரு வாரமாயிருக்கும் விருந்தாளியைக் கொட்டி அனுப்பி விட்டது!"

* * *

ஆசனங்கள் போட வேண்டியதன் அவசியத்தைப் பற்றி அடிக்கடி சொல்லி வந்திருக்கிறேன். ஏராளமான நண்பர்களும் ஆசனங்களைப் போட்டு வருகிறார்கள். தினம் தினம் கட்டுக் கட்டாகக் கடிதங்கள் வந்து குவிகின்றன. எல்லோரும் பழைய விஷயங்களையே எழுதிக் கொண்டிருக்கிறார்கள். அவர்களெல்லாம் தயவு செய்து 'கல்கி' பழைய இதழ்களைக் கண்டு பிடித்துப் படித்துக் கொள்ள வேண்டியதுதான். படிக்கும் போது நின்று நிதானமாக கவனித்துப் படியுங்கள். ஆசனக் கட்டுரைகளில் இருப்பதுபோல் ஆகார விஷயத்திலும் இதர விஷயங்களிலும் கவனம் செலுத்தி ஆசனம் செய்ய வேண்டும்.

இந்த அர்த்தமத்ஸ்யேந்திராஸனம் பார்ப்பதற்குச் சற்று சிரமமாகத்தான் இருக்கும். இருந்தாலும் மனிதன் மனம் வைத்தால் ஆகாத காரியம் ஒன்றுமில்லை. ஒரு நாளைக்கு ஒரு மணி நேரம் சொந்த உடலை ஆரோக்கியமாக வைத்துக்கொள்வதற்காகச் செலவிடுவதற்கு நிலையான மனம் இல்லாதவர்களால் எப்படிப் பெரிய காரியங்களைச் சாதிக்க முடியும்? நமது முன்னோர்கள் பல அற்புத காரியங்களைச் சாதித்திருக்கிறார்கள். உலகம் இன்னும் அதைக் கண்டு வியக்கிறது என்றால் அவர்கள் தங்களுடைய தேகத்தை ஆரோக்கியமாக வைத்திருந்தார்கள். தங்கள் வாழ்நாளை நல்ல காரியங்களுக்கே செலவு செய்தார்கள். வியாதியில் படுத்து வாழ்நாளை வீணாக்கிக் கொண்டதில்லை. சுதந்திரம் பெற்ற நம் நாட்டுக்கு உழைப்பு வேண்டும். உழைப்பதற்குத் தேகம் ஆரோக்கியமாக இருக்க வேண்டாமா? ஆகையால் எல்லோரும் ஆசனம் செய்து பழகிக் கொள்ளுங்கள். (தொடரும்)



# கசப்பும் இனிப்பும்

**புஷ்யன்**

"இன்று சாயந்திரம் சீக்கிரம் வந்து விடுகிறீர்களா, சினிமாவுக்குப் போகலாம்" என்றாள் ஜயா.

"அதெல்லாம் ஒன்றும் வரமுடியாது" என்றான் கோபாலன் சள்ளென்று.

"ஏன்!"

"ஏன் என்று உனக்குச் சொல்லணுமா! வர முடியாதென்றால் வரமுடியாதுதான்."

"ஏதோ கேட்டால் ஏன் இப்படி சள்ளென்று எரிந்து விழுகிறீர்கள்!"

"ஆபீஸில் தலைக்கு மேல் வேலை, இன்றைக்கு வரமுடியாது. சரிதானே."

"ஆமாம், எப்பொழுது பார்த்தாலும் வேலை தான் உங்களுக்கு முன்னெல்லாம் இல்லாத வேலை இப்போது எங்கே வந்து குதித்து விட்டது. சினிமாவுக்கு அழைத்துப் போக இஷ்டமில்லை என்றால் நேரே சொல்வதுதானே......என்னமோ நீங்கள் முன்மாதிரி இல்லை."

'பின் எப்படி யிருக்கிறேர்களாம். என்னால் சீக்கிரம் வரமுடியாது; சினிமாவுக்குப் போக முடியாது; எப்படி வேண்டுமானாலும் வைத்துக் கொள். சும்மா, தொண தொண வென்று பேசாதே" என்று கூறிக்கொண்டே கோபாலன் கையும் பையுமாய்க் கிளம்பி விட்டான்.

ஜயா அப்படியே சிலைபோல் சில நிமிடங்கள் நின்று கொண்டிருந்தாள். கோபாலனின் பதில் அவளை அப்படிச் சிலைபோல் ஆக்கி விட்டது. அவனுடைய போக்கு சில காலமாக அவளுக்குப் பெரும் புதிராக வளர்ந்து கொண்டிருந்தது. அப்படியே அவள் அங்கேயே நாற்காலியில் உட்கார்ந்து சிந்தனையிலாழ்ந்து விட்டாள்.

## 2

ஜயாவுக்குத் தாயார், தகப்பனார் கிடையாது. அவளுடைய அத்தையின் பராமரிப்பில் வளர்ந்தவள். அத்தையும் அவள் கணவனும் ஜயாவை நன்றாகத்தான் வளர்த்தார்கள். அவளும் நன்றாகப் படித்துப் புத்திசாலியாக விளங்கினாள். அவளுக்குத் தக்க வயது வந்ததும் வரன் தேட ஆரம்பித்தனர். எல்லோரும் ஆயிரம், இரண்டாயிரம் கொண்டுவா என்றபோதுதான் அவளுடைய அத்தையின் கணவர் திகைத்தார். வந்த வரன்கள் எல்லாம் அப்படியே கேட்டனர். அவருக்கு ஜயாவின்மேல் எவ்வளவு வாஞ்சை யிருந்தாலும் அவ்வளவு அதிகமாக வரதட்சணை கொடுத்து மணம் செய்து வைக்க முடியாத நிலையில் இருந்தார். மேலும் அவருக்கே இரண்டு பெண்கள். இந்த நிலையில் அவர் என்னதான் செய்வார்!

இப்படி யிருக்கையில்தான் கோபாலன் அரஸ் மாற்றாக, அந்த ஊருக்கு ஸ்பெஷல் டியூடியில் வந்தவன் ஜயாவின் அத்தை வீட்டுக்கு இடம் தேடும் சாக்கில் வந்து சேர்ந்தான். அவனுக்கு ஒரு அறையைக் கொடுத்து உதவிய ஜயாவின் அத்தையின் கணவர் - அவளுடைய விவாகத்தைப் பற்றியே நினைத்துக் கொண்டிருந்தவர் - கோபாலனின் குலம், கோத்திரம் எல்லாம் மெதுவாக விசாரித்தார். அப்படி விசாரித்ததில் கோபாலனுக்கும் தாயார், தகப்பனார் கிடையாதென்றும், கணிசமான சொத்துக்கள் இருக்கிறதென்றும் தெரிந்து கொண்டார். தாயார், தகப்பனார் இல்லை என்று தெரிந்ததும் கோபாலனை மாப்பிள்ளையாகத் தேர்ந்தெடுத்து விட்டதாக மகிழ்ச்சி கொண்டார். ஏனென்றால் அவர்கள்தானே ஆயிரமும், இரண்டாயிரமும் கேட்பவர்கள்.

மெதுவாகக் கல்யாணப் பேச்சை ஆரம்பித்தார் அவனிடம். கோபாலனும் இதற்குள் ஜயாவை அடிக்கடி பார்த்து அவள்பால் தன் உள்ளத்தை செலுத்த விட்டிருந்ததால், அவன் ரொம்பவும் பிகு பண்ணாமல் ஒப்புக் கொண்டான். கோபாலன் தனக்குக் கணவனாகப் போகிறான் என்று நிச்சயமானதும் ஜயாவின் மகிழ்ச்சிக்கு அளவில்லை.

ஒரு நல்ல முகூர்த்தத்தில் ஆடம்பரமின்றி விவாகம் நடைபெற்றது. விவாகமான மறு தினமே கோபாலன் ஜயாவை சென்னைக்கு அழைத்துச் சென்று விட்டான். அவனுக்கே சென்னையில் சொந்த வீடு இருந்ததால் வீட்டுக் கவலை அவனுக்கில்லை.

ஜயாவும் கோபாலனும் ஆனந்த வாழ்க்கை வாழ்ந்தனர். கோபாலன் தினமும் சாயந்தரம் ஆபீஸ் விட்டதும் நேராக வீட்டுக்கு வந்து விடுவான். சிற்றுண்டி சாப்பிட்டதும் இருவருமாகக் கடற்கரைக்குப் போய் விடுவார்கள். இரவு எட்டு மணிக்கு மெல்ல உல்லாசமாக நடை போட்டு வீடு வந்து சேருவார்கள்.

விடுமுறை நாட்களில் கேட்க வேண்டாம். எப்போதும் அவளையே அவன் வளைய வருவான். கல்யாணம் செய்து கொள்வதற்கு முன் இருந்த நண்பர்கள், அரட்டை, சீட்டுக் கச்சேரி முதலியவைகளை அறவே ஒழித்து விட்டான்.

இருவருக்கும் எவ்விதமான சண்டையும் பூசலும் கிடையாது. ஆனந்தத்தை அதிகப்படுத்தும் ஊடல்களைத் தவிர, வேறு ஒன்றும் இல்லாமல் சதா இன்ப வாழ்வில் திளைத்துக் கொண்டிருந்தனர். அவன் அவள் மனதை அறிந்து அவளுக்கு வேண்டிய தேவைகளை நிறைவேற்றி வந்தான்.

ஜயா வந்த புதிதில் ஏதோ ஓரிரண்டு கடிதங்கள் ஆடிக்கும், அமாவாசைக்குமாக தன் அத்தைக்கு எழுதினாள். அப்புறம் அவள் ஒன்றுமே எழுதவில்லை. கொஞ்சம் கொஞ்சமாகத் தன் அத்தை முதலியவர்களை மறந்துகூடப் போய் விட்டாள். எப்பொழுதும் அவள் கோபாலனின் நினைவாகவே இருந்தாள். கோபாலனுக்கும் வேறு உறவு இல்லாததால் எல்லாம் அவளேதான்.

இப்படி நான்கு வருடங்களை ஓட்டி விட்டார்கள். ஆனால் எப்போதும் போல் இப்போது அவர்கள் வாழ்க்கை சதானந்த வாழ்வாக இல்லை. கோபாலனின் போக்கு கொஞ்ச நாட்களாக மாற ஆரம்பித்து விட்டதாக ஜயாவுக்குப் பட்டது. முன்போல் அவளுடன் பீச்சுக்குத் தினமும் போக ஆவல் கொண்டு துடிக்கவில்லை. சாயந்திரம் ஆபீஸிலிருந்து வந்ததும் பீச்சுக்குப் போக அவளை அழைக்கும் அவன் காபி சாப்பிட்டதும் சாப்பிடாததுமாய் வெளியே போய்விடுவான். இரவு எட்டு மணிக்குமேல் வந்து சாப்பிட்டுப் படுத்துவிடுவான். சில சமயம் ஒரே படியாக இரவு எட்டு மணிக்குத்தான் வருவான். ஏதாவது கேட்டாலோ எரிந்து விழுவான். ஏன் இப்படித் திடீரென்று மாறி விட்டான் என்று புரியாமல் ஜயா தவித்தாள்.

ஒவ்வொரு சமயம் அவனுக்குக்கூட அவள்மேல் கோபம் உண்டாகும். அவனாக வலிய வந்து ஏதாவது ஒன்றைக் கேட்டால் நேரிடையாகப் பதில் சொல்ல மாட்டாள். "யாருக்குத் தெரியும்!" என்பாள். அப்படித்தான் அன்று அவன் கேட்டான். "ஏன் ஜயா, அடுத்த வீட்டுக்கு யாரோ குடி வந்திருக்கிறாப்போல் இருக்கிறதே அது யார்! உனக்குத் தெரியுமா!" என்று.

அதற்கு அவள், "எனக்கென்ன தெரியும்! ஊரார் விஷயமெல்லாம் தெரிந்து கொள்வதுதான் என் வேலையா என்ன!" என்றாள்.

கோபாலனுக்கு இது ஆச்சரியமாய் இருந்தது. ஜயா எப்போதும் தன் சரளமானதும் இனியதுமான சுபாவத்தால் எல்லோரிடமும் வெகு சீக்கிரம் சிநேகம் பூண்டு விடுவாள். அந்தத் தெருவில் உள்ள அத்தனை பேரும் அவளுக்குச் சிநேகம். அப்படியிருக்க ஜயா இப்போது இவ்விதம் பேசியதும் அவனுக்கு ஆச்சரியமா யிருந்தது. "எப்போதுமே நீ இந்த விஷயத்தில் கெட்டிக்காரியாயிற்றே" என்று கேட்டான்.

"அப்படி என்றால் என்னை வம்பளப்புக்காரி என்கிறீர்களா" என்று கேட்டாள்.

"ஏதோ கேட்டால் என்னென்னமோ பேசுகிறாயே" என்றான்.

"நான்தான் என்னென்னமோ பேசுகிறேன். நீங்கள் மாத்திரம்" என்று கோபத்துடன் பார்த்தாள் ஜயா. இப்படியாக தர்க்கம் நீண்டு கோபாலன் கோபம் கொண்டு அன்று இரவு சாப்பிடாமல் சத்தியாக்கிரகம் செய்தான்.

இவ்விதம் இருவருக்கும் இடையே முன்போல் சுமுகமான ஒற்றுமை இல்லாமல் மனக் கசப்பு வளர்ந்து கொண்டே போயிற்று.

ஏன் இப்படி யிருக்கிறார் என்று புரிந்து கொள்ள முடியாமல் திகைத்தாள் ஜயா.



ஆபீஸுக்குப் போகும் வழியில் கோபாலனும் சிந்தித்தான். வரவர ஜயாவின் பேச்சும், போக்கும் அவனுக்குப் பிடிக்கவில்லை என்பதை உணர்ந்தான். ஏனோ அவனுக்கும் அவளைக் கண்டால் ஒரு வெறுப்பு உண்டாகி யிருந்தது. அவள் முன்போல் கொஞ்ச வருவது, புன் சிரிப்பு காட்டுவது அவனுக்கு வேம்பா யிருந்தது. முன்பெல்லாம் எவ்வளவு ஆனந்தமாய் இருவரும் சினிமா, கடற்கரை என்று போய் வந்தோம். ஆனால் இப்போது போக மனமில்லையே என்று அங்கலாய்த்தான். அவன் அன்று காலை அவள் மீது எரிந்து விழுந்து விட்டு வந்ததைப் பற்றி நினைத்தான். "பாவம். அவளுடன் சினிமாவுக்குப் போய் எத்தனை நாளாயிற்று. இன்றைக்குக் கட்டாயம் ஜயாவுடன் சினிமாவுக்குப் போக வேணும்" என்று தீர்மானித்தான்.

அதன்படியே வீட்டுக்குச் சீக்கிரம் வந்தான். அவள் அவன் வருகைக்குச் சந்தோஷப் படுவாள் என்று எதிர்பார்த்தான். ஆனால் அவள் அவனைப் பார்த்து, "காலையில் நான் கேட்டதற்குச் சீக்கிரம் வர முடியாது என்றீர்களே. இப்போது சிநேகிதர்களுடன் சீட்டாட மட்டும் சீக்கிரம் வர முடிந்ததா!" என்று கேட்டாள்.

கோபாலனுக்குக் கோபம் வந்தது. தான் எதற்காக வந்திருக்கிறேன்! என்பதைத் தெரிந்து கொள்ளாமல் இப்படி எதையோ கற்பித்துக் கொண்டு எரிந்து விழுகிறாளே என்று அவள் மேல் கோபம் கொண்டு எரிந்து விழுந்தான். கடைசியில் அவன் கொண்டிருந்த ஆசை நிராசையாய் விட்டது.

"சீச்சீ, இந்த வீட்டில் வாழ்வதை விட நரகத்துக்குப் போகலாம்" என்று துண்டை உதறிப் போட்டுக் கொண்டு போய் விட்டான்.

"எனக்கும் அப்படித்தான் தோன்றுகிறது" என்று அவளும் பதிலுக்குத் தனக்குள்ளேயே கூறிக் கொண்டாள்.

இனி எப்படி அவருடன் வாழ்க்கை நடத்துவது என்று அவளுக்குப் பிரச்னையாகி விட்டது.

இனி எப்படி அவளுடன் வாழ்வது இப்படி எப்போதும் சண்டைக்கு வருகிறாளே என்று திகிலடைந்தான், தன் எதிர்காலத்தைப் பற்றி.

## 3

அன்று மத்தியானம் நாலு மணி இருக்கும். ஜயா காப்பிப் போட்டுக் கொண்டிருந்தாள். 'ஜயா' என்று கூப்பிடும் குரல் கேட்டு வெளியே போய்ப் பார்த்தாள். ஆச்சரியமடைந்து விட்டாள். அவள் அத்தை குடும்ப சமேதராய் மூட்டை முடிச்சுகளுடன் நின்று கொண்டிருந்தார்கள்.

"வாருங்கள் அத்தை, இதென்ன கடிதம் கூட போடவில்லையே" என்றாள்.

"என்னமோ பட்டணம் பார்க்கணும்னு இருந்தது. உங்களையும் பார்க்க ரொம்ப ஆசையாய் இருந்தது. எத்தனையோ நாளைக்குப் பிறகு இப்பத்தான் சௌகரியப்பட்டது" என்றாள் அத்தை.

ஜயாவுக்கு ஆனந்தமாய் விட்டது. அத்தைக்கும் அத்திம்பேருக்கும் ஓடி ஆடி டிபன் காப்பி எல்லாம் செய்து கொடுத்தாள்.

அத்தையையும் அவள் கணவரையும் கோபாலனும் ஜயாவுமாகச் சேர்ந்து சென்னை முழுதும் நன்றாக அழைத்துச் சென்று காட்டினார்கள். அத்தை பெண்கள் வத்ஸலாவும், சுலோசனாவும் நன்றாக வளர்ந்து அடையாளம் தெரியாமல் மாறி விட்டிருந்தனர். அவர்களுடன் ஜயா ஆனந்தமாகப் பேசிப் பொழுதைப் போக்கினாள். இருபது நாட்கள் ரொம்பவும் சந்தோஷமாகக் கடந்தன.

வீடு கலகலப்பாக இருந்தது. கோபாலனும் ஜயாவும் சண்டை சச்சரவை மறந்திருந்தனர்.

ஆனால் அன்று கோபாலன் ஜயாவிடம் "என்ன ஜயா, உங்கள் அத்தை எல்லாம் எப்போது ஊருக்குப் போகிறார்களாம்" என்று கேட்டான்.

"ஏன் இன்னும்தான் கொஞ்ச நாட்கள் இருக்கட்டுமே அதிசயமாக வந்திருக்கிறார்கள். அதற்குள் உங்களுக்கு வலிக்கிறதாக்கும்" என்றாள்.

"நான் வேண்டாமென்று சொன்னேன். சும்மா பேச்சுக்காகக் கேட்டேன்" என்றான்.

"பேச்சுக்காக என்ன! அவர்கள் போக வேண்டும் என்று தோன்றுவதால்தான் அந்த யோசனை எழுகிறது. அவர்களை எல்லாம் வைத்து ஆதரிக்கக் கஷ்டமாயிருந்தால் சொல்லுங்களேன் நேரே" என்று மேலும் வளர்த்தினாள்.

பேச்சு தடித்து மறுபடியும் சண்டையும் பூசலும் ஆரம்பித்து விட்டது.

அத்தை இதைச் சூட்சமமாக உணர்ந்து கொண்டாள். ஜயாவும் கோபாலன் போக்கு ஒரு விதமாகக் கொஞ்ச நாட்களாக மாறி வருவதைச் சொன்னாள் பேச்சு வாக்கில்.

அன்று கோபாலனைப் பார்த்து அத்தை, "என்ன மாப்பிள்ளை, ஜயாவை அழைத்துக் கொண்டு போகலாம் என்று இருக்கிறேன்" என்றாள்.

கோபாலன் தயங்காமல் "ஆஹா, அழைத்துக் கொண்டு போங்கள்" என்றான்.

ஜயா அன்றைக்கே தன் அத்தையுடன் சந்தோஷமாக ஊருக்குப் பிரயாணமானாள்.

## 4

ஜயா ஊருக்குப் போனதும் கோபாலன் சிறிது நாட்கள் சந்தோஷமாக இருந்தான். ஆனந்தமாக ஹோட்டலில் இஷ்டப்படி சாப்பிட்டுக் கொண்டு வேண்டிய சுதந்திரத்துடன், தட்டிக் கேட்பாரின்றி அவிழ்த்து விட்ட காளை போல் காலம் கழித்தான். ஆபீஸிலிருந்து வந்ததும் ஆரம்பிக்கும் சீட்டுக் கச்சேரி இரவு பதினொரு, பன்னிரெண்டு மணி வரை தங்கு தடையின்றி அவனுடைய வீட்டில் நடைபெற்று வந்தது.

மனைவி ஜயாவின் எண்ணமே இல்லாமல் இருந்தான். அவளுக்கு அவன் ஒரு கடிதம் கூடப் போடவில்லை. நண்பர்களுடன் சினிமா, டிராமா என்று கொட்டமடித்து வந்தான்.



அன்றொரு நாள் அவனுடைய நண்பர்கள் எல்லாம் ஏதோ வேலை இருக்கிறதென்று சொல்லிவிட்டனர். அதனால் சீட்டுக் கச்சேரி, சினிமா என்று எந்த நிகழ்ச்சியும் இல்லாமல் இருந்தது. ஆபீஸிலும் அதிகமான வேலை. வேலையை முடித்து விட்டு அப்படியே ஹோட்டலுக்குப் போனான். அங்கு போட்ட சாப்பாட்டைச் சாப்பிட உட்கார்ந்தான். சாதம் சரியாக வேகாமல் இருந்தது. முற்றின கத்தரிக்காய்க் கறியும், காய்ந்து போன வெண்டைக்காய் சாம்பாரும் அவனை ஒன்றும் சாப்பிட விடாமல் எழுந்து போகும்படி செய்தது. நேரே வீட்டிற்குப் போனான். கட்டிலில் தொப்பென்று விழுந்தான். காலை நீட்டிப் படுத்தான்.

'இந்தச் சமயம் ஜயா இருந்தால்!' என்று எண்ணலானான். அவளுடைய நட்சத்திரம் போல் ஜ்வலிக்கும் கண்களும், மாதுளம் விதைப் பற்களும் நினைவுக்கு வந்து அவனை மயக்கின. அவளுடன் அவன் ஆனந்தமாக வாழ்ந்ததைப் பற்றியெல்லாம் நினைத்தான். அவள் அவனுக்கு எப்படியெல்லாம் எல்லா வகைகளிலும் பக்க பலமாய் இருந்து உதவி செய்தாள். தான் சொன்னதையெல்லாம் மறு பேச்சின்றி மகிழ்வோடு கேட்டாள் என்றெல்லாம் அவன் யோசித்தான். ஜயா அவனுக்காக சர்வ தியாகமும் செய்து விட்டதைப் பற்றிச் சிந்தித்தான். அவன் அவளை ஒரு நாளேனும் பிரியாமல் நான்கு வருடங்களாக வாழ்ந்ததை எண்ணும்போது அப்பா, எப்படி இத்தனை நாட்கள் இப்போது பிரிந்திருக்கிறோம் என்று நினைத்து ஆச்சரியப்பட்டான். அவன் எப்படி அவளுடைய உதவி இல்லாமல் இருந்தான் என்பதை யோசிக்கும்போது விந்தையாக இருந்தது. ஆனால் அவள் நினைவு வந்த அந்தக் கணம் முதல் அவனைப் பிரிவுத் துயரம் வந்தணைந்து கொண்டது.

அவள் எப்போது திரும்பி வருவாள் என்று ஆவலுடன் இருந்தான். கணத்துக்குக் கணம் அவளுடைய நினைவே வந்து அவனை வாட்டியது. மறுபடி சீட்டுக் கச்சேரி சினிமா, நாடகம், எதிலும் நாட்டம் கொள்ளவில்லை. நேரே வீட்டுக்கு வந்ததும் மொட்டை மாடியில் சாய்வு நாற்காலியில் சாய்ந்தவாறு தனிமையில் ஜயாவின் நினைவில் மூழ்க ஆரம்பித்தான். சில சமயம் அப்படியே நேரம் தெரியாமல் அவள் நினைவிலேயே உறக்கத்தில் ஆழ்ந்து விடுவான். எந்த நிமிடத்திலும் அவள் பிரிவு வேதனை தாளாமல் தன் இதயம் வெடித்துப் போய்விடுமோ என்று பயப்படும் அளவுக்கு அவன் வருந்தினான்.

இத்தனை நாட்கள் கடிதமே எழுதாமலிருந்தவன் அன்றைக்குத் தன் இதயம் முழுவதையும் திறந்து காட்டி எழுதினான், பக்கம் பக்கமாக. இனி எவ்வித காரணத்துக்கும் கடிந்து கொள்வதில்லையென்றும், அவள் விருப்பத்தை எப்போதும் பூர்த்தி செய்யத் தயாராய் இருப்பதாகவும், அவள் பிரிவால் தான் நாளுக்கு நாள் வாடி வருவதாகவும், அதனால் அவள் உடனே புறப்பட்டு வந்து விட வேண்டும் என்றும் எழுதினான்.

* * *

ஜயாவும் தன் அத்தையுடன் ஊருக்குப் போனவள் தன் பழைய சிநேகிதிகளுடன் உறவாடிப் பொழுது

போக்குவதிலும், முன் போல் குளத்தில் நீந்திக் குளிப்பதிலும், குடத்தில் ஜலம் மொண்டு அழகிய நடை போட்டு வருவதிலும் தன்னை மறந்திருந்தாள். தானும் தன் கணவனும் சினிமா கடற்கரை என்று தினமும் போனதைப் பற்றித் தோழிகளிடம் பெருமையாகக் கூறிக் கொள்வாள்.

ஆனால் நாளடைவில் குளமும், குளக்கரையும், நெடுங்காலத்து தோழிகளும் அவளுக்குப் புளித்து விட்டது. சாயங்காலமானதும் அவளுக்கு அவள் கணவன் ஞாபகம் வந்துவிடும். அவன் அவளுக்கு ஆசையுடன் வாங்கிவரும் மல்லிகை மலரை அவனே சூடுவதும், அவள் தரும் சிற்றுண்டிகளைச் சாப்பிட்டதும் அவளை அழைத்துக் கொண்டு கடற்கரை ஓரமாக நடந்து போனதும் நினைவுக்கு வரும். அவள் அத்தை வீட்டில் புதிதாக மல்லிகைக் கொடி வைத்திருந்தார்கள். அது பூத்துக் குலுங்கிக் கொண்டிருந்தது. கோபாலனுக்கு மல்லிகை மலர்தான் பிடிக்கும். மற்றதெல்லாம் என்ன மலர், வெறும் அழகுக்குத்தான் என்பான். மல்லிகை மலர்களைச் சூடிக் கொள்ளும் போது அவனுடைய கைகள் அதைச் சூடவில்லையே என்று ஏக்கமாக இருக்கும்.

வீட்டில் அத்தைக்குச் சமையலில் ஒத்தாசை செய்யும்போது அவளுக்கு அவள் கணவன் சுற்றிச் சுற்றி ஒத்தாசை செய்யும் ஞாபகம் வந்து விடும். அந்த ஞாபகத்தில் தன்னை மறந்து நின்று விடுவாள். ஒருநாள் அத்தை, "என்னடி ஜயா, தாளிக்கிறதுக்குக் கடுகு கொண்டுவரச் சொன்னால் மரம் மாதிரி நின்று விட்டாயேடி. எண்ணெய் காய்ந்து போகிறதே" என்று பதறினாள்.

வரவர அவள் செய்யும் காரியங்களில் அவளுக்கு நினைவே இல்லை. 'ஐயோ, அவர் என்ன செய்கிறாரோ, என்னத்தைச் சாப்பிடுகிறாரோ, வேளா வேளைக்குச் செய்து போட யார் இருக்கிறார்கள். உடம்பைக் கெடுத்துக் கொண்டு விடப் போகிறாரே' என்று சதா கவலைப் பட்டுக் கொண்டிருந்தாள். சதா சீட்டுக் கச்சேரி என்று தூக்கத்தைக் கெடுத்துக் கொண்டு உடம்பைத் துரும்பாக்கிக் கொண்டிருப்பாரே என்று மாய்ந்து போனாள். வீடெல்லாம் கவனிப்பாரற்றுப் பாழாய்ப் போய் விட்டிருக்குமே என்று பயந்தாள்.

அத்தையின் வீட்டில் இருப்பது நாளுக்கு நாள் முள்ளின்மேல் இருப்பது போல் இருந்தது. அவளும் வந்தது முதல் ஒரு கடிதம் கூட எழுதாதவள் அன்று எழுதினாள். அவளால் அவனைப் பிரிந்திருக்க முடியவில்லையென்றும், உடனே வந்து அழைத்துப் போகும்படியும், இனி அவன் அவன் இஷ்டப்படி எல்லாம் செய்வதாயும், அவன் பேச்சுக்கு எதிர்த்து வார்த்தையாடுவது இல்லையென்றும், செய்த தப்புகளை மன்னிக்கும்படியும், சீக்கிரம் அழைத்துப் போகும்படியும் எழுதியிருந்தாள்.

## 5

கோபாலனும் அவளுடைய கடிதம் கண்டதும் உடனே வந்து அழைத்துப் போனான். அவன் வந்திருந்தபோது அவளுடைய அத்தை அவனிடம் ஒரு சமாசாரம் சொன்னாள். அதைக் கேட்டதும் அவனுடைய வாயெல்லாம் பல்லாயிற்று. அந்தச் செய்தி ஜயா மூன்றுமாதம் கர்ப்பம் என்பதுதான்.

சென்னைக்கு வந்து சேர்ந்ததும் முதலாக அவன் அவளைக் கேட்ட கேள்வி, "இத்தனை நாளாய் அதை ஏன் தெரியப்படுத்தவில்லை" என்பதுதான்.

"எதை" என்று ஒன்றுமே அறியாதவள் போல் கேட்டாள் ஜயா.

"அதைத்தான் உனக்குள்ளே ஒரு ஜீவனை அடக்கி வைத்திருப்பதைத்தான்" என்று கன்னத்தைக் கிள்ளினான். தான் தந்தை ஆகப்போகும் ஆனந்தத்தில் தலைகால் தெரியாமல் எதையெல்லாமோ செய்து வந்தான்.

அவள் இஷ்டப்படியெல்லாம் ஆடினான். அவளை இன்ப சாகரத்தில் ஆழ்த்தினான். இப்போது அவள் பேரில் காதல் மட்டுமல்ல, ஒரு வித பய பக்தியும் ஏற்பட்டிருந்தது.

ஏழு மாதமானதும் சீமந்தம் அத்தை வீட்டில் நடந்தது. அவளை அங்கேயே விட்டு விட்டு வந்தான். அவள் தேக நிலையைக் குறித்து அக்கறையுடன் அன்புடன் கடிதங்கள் எழுதி வந்தான். அவள் பிரிவு அவனுக்குக் கஷ்டத்தைத் தந்தாலும் தனக்கு ஒரு குழந்தையைப் பெற்றுத் தரப் போகிறாள் என்ற மகிழ்ச்சியால் அதை அடக்கிக் கொண்டிருந்தான். அவள் அவன் பெருமைப் படும்படி அழகான, சொர்ண விக்ரகம் போன்ற ஒரு ஆண் குழந்தையைப் பெற்றாள். அவர்கள் இப்பொழுதெல்லாம் பெருந்தன்மையுடனும், முன்னை விட பன்மடங்கு அன்புடனும் இன்ப வாழ்க்கை நடத்தி வருகிறார்கள்.

○●○

# திருடன் எழுதிய கடிதம்

சப்-இன்ஸ்பெக்டர் சாமுவேல் ஹெட்கான்ஸ்டேபிள் கந்தசாமியைக் கூப்பிட்டார். "கந்தசாமி! ஒரு திருடன் தான் திருடிய விஷயத்தைத் தானே கடிதம் எழுதியிருக்கிறான். அது மட்டுமல்ல திருட்டுச் சாராயம் காய்ச்சுகிறவனைப் பற்றித் துப்பும் கொடுத்திருக்கிறான். இந்தக் கடிதத்தைப் படித்துப் பார்! உடனே அதற்கு வேண்டிய ஏற்பாட்டைக் கவனி!" என்று ஒரு கடிதத்தைக் கொடுத்தார்.

ஹெட்கான்ஸ்டேபிள் கந்தசாமி கடிதத்தைப் படித்தார்.

"இன்ஸ்பெக்டர் எஜமானுக்கு பழைய திருடன் திகம்பரம் எழுதிக் கொண்டது. நான் நேற்று ஒரு வீட்டில் திருடப் போனேன். ஆயிரத்துக்கு மேற்பட்ட பணத்தை அபேஸ் செய்தேன். ஆனால் என்ன அநியாயம்! அந்த வீட்டுக்காரன் திருட்டுச் சாராயம் காய்ச்சுகிற அயோக்கியன் என்று நினைக்கிறேன். அவன் வீட்டுத் தோட்டத்தில் தண்ணீர் இல்லாத கிணற்றுக்குள் ஜாடி ஜாடியாகச் சாராயத்தைப் புதைத்து வைத்திருக்கிறான். அந்த வீட்டின் விலாசம்: நெ. 20 இருசப்பன் தெரு......"

இதைப் படித்து முடித்ததும் "நெ. 20. இருசப்பன் தெருவா?" என்று வியப்புடன் கேட்டு விட்டு மூர்ச்சையானார் ஹெட்கான்ஸ்டேபிள்.

பாவம்! அதுதான் ஹெட் கான்ஸ்டேபிள் கந்தசாமி புதிதாகக் குடி போன வீடு என்பது சப்-இன்ஸ்பெக்டருக்கு எங்கே தெரியப் போகிறது!

Edited Printed and Published by R. Krishnamurthy at the "Kalki" Press
116-119, Sladens Garden, Poonamallee High Road, Kilpauk, Madras

